# ஸ்ரீ அபிராமி பட்டர் அருளிய
# அபிராமி அந்தாதி.

உரை ஆசிரியர்
சேக்கிழார் அடிமை, ராவ்சாகிப் (லேட்)
P. K. ஷண்முகநாதன் பி. ஏ., பி. எல்.,
அட்வொகேட், திண்டுக்கல்.

பதிப்பாசிரியர் (இப்பதிப்புக்கு மட்டும்)
குமட. கு. காசிவிசுவநாதன் செட்டியார்
திண்டுக்கல்.

விலை ரு. 4—00. 1974.

கிடைக்குமிடம்
1. காளகஸ்தீஸ்வரர் தேவஸ்தானம் திண்டுக்கல்.
2. குமட. கு. காசிவிசுவநாதன் செட்டியார்.
No. 19 சுபேதார் சந்து,
திண்டுக்கல்.

உ

சிவமயம்.

## அறிமுக உரை.

இந்நூலுக்கு முகவுரையோ, அணிந்துரையோ எழுதுவதற்கு என்னுடைய ஒரே தகுதி இந்நூலின் ஆசிரியர் என் தந்தை என்பது தான்.

என் தந்தை பெரியகுளத்தில் பிறந்தவர். திண்டுக்கல்லில் வாழ்ந்தவர். முதலில் பள்ளி ஆசிரியராக ஆரம்பித்து வழக்கறிஞராக பணிபுரிந்தவர். அவரை வளர்த்து ஆளாக்கியவர் அவரது தாய்மாமன் பெரியகுளம் சுப்பிரமணிய முதலியார். பள்ளிப்படிப்பு முடிந்தவுடன் கல்லூரியில் சேருவதே சந்தேகமாகத்தான் இருந்தது. நல்லவேளை அக்காலத்தில் புதிதாக ஆரம்பிக்கப்பட்டிருந்த அமெரிக்கன் கல்லூரி வசதி இல்லாதோர்க்கு சலுகைகள் தந்து இலகுவாக சர்க்கார் உத்தியோகத்தில் சேர்ந்திருக்கலாம். ஆனால் என் தந்தை பிடிவாதமாக மறுத்து விட்டார். பள்ளி ஆசிரியராக இராமநாதபுரத்திற்கு சென்று விட்டார். அதிலும் பிடிப்பு இல்லை. சட்டக் கல்லூரியில் சேர்ந்து வழக்குரைஞராக வந்தபின் சிறிது காலம் பெரியகுளத்திலேயே இருந்து விட்டு 1928-ல் திண்டுக்கல்லுக்கு வந்தார்.

சிறுவயதிலிருந்தே என் தந்தைக்கு சமயத்திலும், தத்துவத்திலும் ஈடுபாடு உண்டென்று தெரிகிறது. கல்லூரி பாட புத்தகங்கள் வாங்குவதற்கு கிடைக்கும் பணத்தில் சமய நூல்களும், தத்துவ நூல்களும் வாங்கி விடுவாராம். நேரம் கிடைத்தபோதெல்லாம் படித்துக்கொண்டே இருப்பார். அவர் படித்த நூல்களில் ஒவ்வொன்றிலும் கோடுகளும் ஆச்சர்ய குறிகளும், கேள்வி குறிகளும் அவருடைய சொந்த குறிப்புகளும் இருக்கும். பள்ளியில் வடமொழியும், பயின்றதால் அவருக்கு சமய நூல்களில் மூல நூல்களை படிக்கும் வாய்ப்பு இருந்தது. தொடக்கத்தில் தமிழ், வடமொழி இலக்கியங்களை ஊன்றிப் பயின்றவர் பின்னல் முழுக்க, முழுக்க சமய தத்வ நூல்களை பயில்வதிலும், ஆராய்வதிலுமே காலம் கழித்தார். என்னுடைய ஒரே குறை அவருடைய அக்கறை ஆழ்ந்த படிப்புக்கு ஏற்ப அவருடைய பெயர் வெளிவரவில்லையே என்பதுதான். இதற்கு அவரே பொறுப்பாளி என்று சொல்லலாம். யாராவது திரும்ப திரும்ப தூண்டினல் ஒழிய தனக்கு தெரிந்ததை, அறிந்ததை நூலாக ஆக்கவேண்டும் என்ற ஆர்வம் இல்லாமல் இருந்தார். இப்பொழுதும் அவர் அநேக குறிப்புகள் விட்டுப்போயிருக்கிறர். அநேக உரைகள் முழுவதும் பாதியுமாக எழுதி வைத்திருக்கிறர்.

நூல் எழுதும் ஆர்வம் இல்லாமல் இருந்தாரே ஒழிய தானறிந்ததை பிறர்க்கு சொல்ல வேண்டும் என்ற ஆர்வம் நிறைய உண்டு. ஆர்வத்தோடு கேட்பார் கிடைத்தால் மணிக்கணக்கில் சமய உண்மைகளையும், தத்துவத்தைப் பற்றியும் பேசிக்கொண்டிருப்பார். ஏதாவது ஒரு கேள்வியைக் கேட்க வேண்டியதுதான். அதற்கு விடை நல்கத் தொடங்கி சமயங்களின் மூலை முடுக்குகளிலெல்லாம் அழைத்துப்போய் விளக்கிவிடுவார். பசி, தாகம், தூக்கம் எல்லாம் மறந்துவிடும். சமயங்களைப் பற்றியும், தத்துவங்களைப் பற்றியும் நான் அறிந்ததெல்லாம் முழுக்க, முழுக்க, அவர் சொன்னதைத்தான். நானாக படித்தறிந்தது இல்லவே இல்லை. தன் பிள்ளைதானே இவனுக்கு என்ன தெரியும் என்ற அசட்டையில்லாமல் விடிய, விடிய சொல்லிக்கொண்டேயிருப்பார். தன் பிள்ளைகளுக்கு இறை அன்பைப் புகுத்தி விடுவது தன்னுடைய முக்கிய கடமை என்ற எண்ணம் அவருக்கு! சில காலம் திண்டுக்கல் அபிராமி அம்மன் கோவிலுக்கு டிரஸ்டியாக இருந்தார். அப்பொழுதுதான் முதன் முதலாக திருவெண்காட்டிலிருந்து இரத்தினம் பிள்ளை என்ற ஓதுவாரை கொண்டுவந்து தேவாரம், திருப்புகழ் பாடம் சொல்ல ஏற்பாடு செய்தார். முதல் மாணவர்கள் அவருடைய பிள்ளைகள்தான்.

வடமொழிப்பயிற்சி மந்திர சாஸ்திரத்தையும், ஆகமங்களையும் பயில அவருக்கு உறுதுணையாக இருந்தது. கோவில்களில் நடக்கும் பூஜா விதிகள் ஒவ்வொன்றும் அவருக்கு பூரணமாக பொருளோடு தெரியும். அவர்கோவிலில் பூஜையின்போது இருப்பின் அர்ச்சகருக்கு அச்சம்தான். இருதய நோய் காரணமாக அவதியுறும் போதும் அவர் கோவிலுக்குப் போகத்தவறினதில்லை. கிட்டத்தட்ட இருபத்திரண்டாண்டுகள் அவருக்கு இருதயக்கோளாறு இருந்தது என்று பார்க்கும் பொழுதுதான் அவருக்கு இறைவனிடத்தில் இருந்த பிடிப்பை நன்றாய் ஒருவாறு அறியலாம். மருத்துவர்கள் அவரை படுக்கையில் இருக்கவேண்டும் வீட்டிற்குள்கூட நடமாடக்கூடாதென்றெல்லாம் சொல்வார்கள் அவர்களுக்கெல்லாம் அவர் ஒரேபதில்தான் சொல்வார். எனக்கு இறைவன் நிச்சயித்தகாலம் முடிந்து விட்டால் இந்த உலகில் உள்ள எந்தப் பெரிய மருத்துவரும் என் உயிரை காப்பாற்ற முடியாது. அந்தக்காலம் முடியும் வரை நான் என்ன செய்தாலும் உயிர் போகாது என்பார். இத்தனை திடசித்தத்தோடு வாழ்ந்தார். முடிவு வரும்பொழுது அதை அறிந்து ஏற்றார்.

இந்த நூலுக்கு அறிந்தோர் அணிந்துரை எழுதி இருக்கவேண்டும் நானும் அவ்வாறு அணிந்துரை பெற முயன்றேன் ஆனால் இறைவன் திருவுள்ளம் வேறுவிதமாக இருந்தது. இந்த நூலில் கண்ட பொருளைப் பற்றி எளிமையாக என்னுடைய குறிப்பேடு வெளிவருகிறது. பொருள்

அறியாவிடினும் ஆழ்ந்த மூடிவைக்கப்பட்ட கருத்துக்களைக் கொண்டது இந்தநூல் என்பதை அறிகிறேன். ஆகவே இன்றில்லாவிட்டாலும், என்றாவது ஒரு நாள் இந்த நூலின் சிறப்பு அதற்குரிய இடத்தை அடையும் என்பது உறுதி.

இந்த நூலுக்கு என் தந்தை எழுதிய முகவுரை இதில் கண்டிருக்கிறது. அதைஎழுதிய பொழுதிருந்த சூழ்நிலை மாறிவிட்டது. தேவஸ்தான வெளியீடாக இது வெளிவரவில்லை. ஒரு வேளை இது வெளிவராமலே போயிருக்கலாம். ஆனால் இறைவனின் திருவுள்ளம் அன்பர் காசிவிஸ்வநாதன் செட்டியாரின் ஆர்வமாக வடிவெடுத்து இந்நூல் வெளிவருகிறது. செட்டியார் அவர்கள் என் தந்தையின் ஆப்த நண்பர். என் தந்தை காலம் சென்ற பின் இந்நூலை வெளிக்கொண்டு வருவதில் அவர் பட்ட கஷ்டம் சிறிதல்ல. தன் உடல் நிலை பாதிக்கப்பட்டிருந்தும்கூட அவர் பெரு முயற்சி எடுத்திருக்கிறார். இந்நூலின் காரணமாக வெளி இடங்களிலே இருக்கும் என்னிடமே தன் உடல் நிலையை பொருட்படுத்தாது அனேக தடவை வந்திருக்கிறார் என்றால் வேறு சொல்லவேண்டிய அவசியம் இல்லை. இறைவன் அவருக்கருள்வான் என்பதில் சந்தேகமில்லை.

திருச்சிராப்பள்ளி.
24-9-1973.

S. சீனிவாசன், பி. ஏ., பி. எல்.,
மாவட்ட நீதிபதி.

V

# அபிராமி அந்தாதி

## அணிந்துரை

நந்தமிழ் மொழியில் சிற்றிலக்கிய நூல்கள் ஓராயிரத்திற்கு மேல் உள்ளன. அவற்றுள் மூன்றில் ஒரு பங்கு நூல்கள் அந்தாதிகள். அந்தாதிகளின் முதன்மையை இது புலப்படுத்தும்.

அந்தாதியாப்பு தொன்மையுடையது. திருமந்திரம், புறம், நற்றிணை, பதிற்றுப்பத்து, தேவார, திவ்ய பிரபந்தங்களுள், அந்தாதி அமைப்பின் மூலக் கூறுகளைக் காணலாம்.

செய்யுள் வனப்பு எட்டனுள் 'விருந்தின்' கீழ் வருவது அந்தாதி. "'விருந்தேதானும் புதுவது கிளந்தயாப்பின் மேற்றே" என்னும் தொல்காப்பியம். இச்சூத்திரம் இன்று புதுக்கவிதைக்கும் பொருந்தும்.

தண்டியும், காரிகையாரும் அந்தாதி இலக்கணத்தை வரையறுத்தனர்.

வெண்பா, கலித்துறை, விருத்தங்களால் இசைக்கப்படும் அந்தாதி. வண்ணமும் கலைவைப்பும், இயன்று பத்துவித ஓசைகளால் ஒலிப்பது. ஓராயிரம் ஆண்டு இலக்கியப்பின்னணி கொண்டு இயல்வது.

முச்சீர் மடக்காய் வருவது யமகவந்தாதி
திரிபுகள் கொண்டது திரிபந்தாதி
இதழுடன் இதழ் படாது பாடுவது நிரோட்டக
யமக அந்தாதி. இப்படிப் பல வகைகள்.

அதிவீர ராமபாண்டியரும், அபிராமி பட்டரும், அழகியமணவாள தாசரும், கம்பரும், ஒட்டக்கூத்தரும், கபிலரும், பரணரும், வில்லியும், பிள்ளைப்பெருமாளும், நம்மாழ்வாரும், நம்பியாண்டார் நம்பியும், திருமழிசையும், திருவரங்கத்து அமுதனும் பொய்கையும், பூதத்தாரும், அருணகிரியும், அருணாசலக்கவியும், சர்க்கரையும், மாம்பழமும், கடிகைமுத்தும், வேதநாயகமும், சச்சியப்பரும், காரைக்காலம்மையும், சிவப்பிரகாசரும் தண்டபாணி சுவாமிகளும், குகைநமச்சிவாயரும், இபுராகிம் புலவரும் அந்தாதி வானத்தின் நந்தா விளக்குகள்.

அந்தாதிகள் சமயங்கடந்தவை. சான்று: அபிராமி அந்தாதி (சைவம்) அழகர் அந்தாதி (வைணவம்) கிறித்துவ சமயம் (தேவமாதா அந்தாதி) இஸ்லாமிய சமயம் (மெதீனத்தந்தாதி) சமண சமயம் (நூற்றந்தாதி).

பெண்தெய்வங்கள் பெயரில் இயற்றப்பட்டுள்ளன பல அந்தாதிகள். (அங்காளம்மன், உலகம்மை, சிவகாமி, சிரிளமுலையம்மை, சௌந்தரி. கற்பகவல்லி, கார்த்திமதி, வடிவுடையம்மன், கோதை ஆய அந்தாதிகள்).

அமுத கலசமே நஞ்சுண்ட இறைவரின் நல்லுருவாய்த் திகழ்ந்த இடம் திருக்கடவூர். இது மாயவரம், தரங்கம்பாடி வழியில் உள்ள ஒரு ஸ்தலம். அபிராமி அந்தாதி ஆசிரியர் அபிராமி பட்டர் பிறந்த பெருமையுடையது இவ்வூர். அபிராமி அந்தாதியன்றி, கள்ள விநாயகர் பதிகம், அமுத கடேசுவரர் பதிகம், காலசம்ஹாரமூர்த்தி பதிகம், அபிராமியம்மை பதிகம் ஆயனவற்றையும் இவர் இயற்றியுள்ளார். இரண்டரை நூற்றாண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர். இந்த அருளாளர் வழங்கிய திருப்பாடல்கள் பாராயணத்துக் குரியவை.

இவர் திருக்கடவூரைப் பாடும்பொழுது, 'பேதம் தெரிந்த மறையோர் தமது பெருந் தெருவில் வேதம் பயிலும் கடவூர்' என்கின்றார். தமிழும் வட மொழியும் நன்குணர்ந்து இசைப்புலமையாலும், மிகுந்த வேதியர் இவர்.

"ஒரு நாள் இரண்டு நாள் அல்ல நான் உலகத்து
உதித்த இந்நாள் வரைக்கும்
ஒழியாத கவலையால் தீராத இன்னல் கொண்டு
உள்ளம் தளர்ந்தேன், என்று கூறுமிவர்
இரு நாழிகைப் போதும் வேண்டாது நிமிடத்தில்
இவ்வகில புவனத்தையும் இயற்றியருளும்
திறம் கொண்ட நீ" என்று,

அம்பாளின் தகுதியையும் சுட்டிக் காட்டி அதன் பின் தன் துன்பத்தையன்று, மக்கள் துன்பத்தை நீக்கவே வேண்டுகிறார்.

அகிலமதில் நோயின்மை, கல்வி, தன, தானியம்,
அழகு, புகழ், பெருமை, இளமை,
அறிவு, சந்தானம், வலி, துணிவு, வாழ்நாள், வெற்றி
ஆகும், நல்லூழ், நுகர்ச்சி
தொகை தரும் பதினாறு பேறும் தந்தருளி நீ
சுகானந்த வாழ் வளிப்பாய்
சுகிர்த குண சாலி, பரிபாலி, அனுகூலி, திரி,
சூலி, மங்கள விசாலி
மகவு நான் நீ தாய் அளிக் கொணாதோ?
என்பது அவர் வாக்கு.

மாநிலம் பயனுற வாழ்வதற்கு வல்லமை கேட்டான் பாரதி; இவர் அகிலம்' பதினாலும் பெற்றுப் பெருவாழ்வு பெற, அருள் பாலிக்க வேண்டுகிறார்.

இத்தகைய பெரியார் இயற்றிய நூல்களுள் ஒன்று அபிராமி அந்தாதி. இதனை ஓதக்கேட்போர் நெஞ்சு நெக்குருகும். விழி புனல் சோரும். இந்நூலுக்கு நால்வர் உரை எழுதி உள்ளனர். யாழ்ப்பாணம் வேற்பிள்ளை, கி. வா. ஜகந்நாதன், தருமையாதீனப் புலவர் முத்துமாணிக்கவாசக முதலியார், திண்டுக்கல் பெ.கா. ஷண்முகநாதன் ஆகியோர் அந்நால்வர்.

ஒவ்வொருவர் உரையும் ஒவ்வொரு விதத்தில் சிறப்புடைத்து. அபிராமி அந்தாதி 21-ம் பாடலுக்குப் பொருள் தருங்கால் வேற்பிள்ளை 'மங்கலை' என்றது, அபிராமி தேவியை நீலி என்றது, துர்க்கையை செய்யாள் என்றது. மகாலக்குமியை வெளியாள் என்றது. சரசுவதியை பசும்பொன்கொடி என்றது, உமையை' என அழகுறக் குறித்துள்ளார். 99-ம் பாடலுக்கு பிறமுந்தோறும், தனித் தனி ஒரோர் நிறங்காட்டும் பஞ்சகஞ்சுகம் (பஞ்ச வர்ணக்கிளி) போல அபிராமி தேவி அடியவர் தனித் தனி ஒவ்வொரு நிறமாய் வழி படுந்தோறும், அவ்வந் நிறமாய் தோன்றி விளங்குபவள்' என்கிறார்.

திரு கி.வா. ஜகந்நாதன் அவர்கள் உரை பல்வேறு சிறப்புக்களைத் தன்னகத்தே கொண்டு மிளிர்கின்றது. உரை என்ற பெயரால் தமிழெனும் சோலையுட் புகுந்து பல வித நறு மண மலர்களைக் கொய்து தருகிறார் அன்னார். அவரது உரை விளக்கங்கள் சிந்திப்பார்க்கு இன்பம் பயப்பன. 'எல்லா விடத்தும் எக்காலத்தும் துணையாக நிற்றலின் விழுத்துணை" என்கிறார், விண்ணுக்கடங்காமல், வெற்புக்கடங்காமல், மண்ணுக்கடங்காமல் வந்தமையால் 'தாவு கங்கைப் பொங்கலை' என்றார். தியானத்தின் வன்மையினால் எங்கே நோக்கினும், அங்கே திருக் கோலம் தோன்றுதலின் கண்ணில் எழுதிவைத்தேனென்றார். 'ஒரு காலைக்கு ஒருகால் புதிய அழகு பூத்துத் தோன்றுதலின் 'விருந்தே' என்றார்' என வருமிடங்கள் காண்க.

சங்கற்பத்தாலேயே ஆக்கி அழிக்கும் வல்லமை கொண்டவள் அபிராமி என்பதற்கு மேற்கோளாக 'கொதியாது' கொதித்தெறிந்த கோட்டெருமைத் தலையின் மிசை மிதியாத சிறடிகள் மிதித்தனபோல் தோன்ற, எனும் பழம் பாடல் வரிகளை திரு கி. வா. ஜ. மேற்கோள் காட்டுகின்றார்;

முத்துமாணிக்கவாசக முதலியார் உரை பழந்தமிழ் இலக்கண இலக்கிய மரபினைத் தழுவி அமைந்துள்ளது.

திண்டுக்கல்லில் அண்மைக்காலம் வரை வாழ்ந்து நிறைவெய்திய வழக்கறிஞர் பெ. கா. ஷண்முகநாதன் அவர்கள் ஒன்பது ஆண்டுகள் முன் வரைந்த உரையுடன் இந்நூல் வெளிவருகின்றது. தமிழும், சைவமும் தழைக்க வந்த பெரியார் இவர். வடமொழிப் பயிற்சி மிக்கவர். நீதி மன்றில் நிற்பதைக் காட்டிலும் இறைவன் ஆதி மன்றில் நிற்பதையே பெரிதும் வேட்ட குணாளர்.

அவர் இந்நூலுள், பெரிதும் வடமொழிச் சமய சாஸ்திர நூற்களையே உரைத்துணையாகக் கொண்டுள்ளார். முன்னரே உரை எழுதிய வித்தகர் கி. வா. ஜ. தமிழ் நூல் ஒப்புமை, சிறக்க முற்று வித்தமை பற்றி வடநூற் கடலுள் திரு. ஷண்முகநாதன் புகுந்தனர் போலும்! புகுந்து லலிதா ஸஹஸ்ரநாமம், சௌந்தர்ய லஹரி, பிரம்மாண்ட புராணம், தேவி மஹாத்மியம் பிரணவ மந்திர விளக்கம், சாக்த தந்திர சாஸ்திரங்கள் சியாமளா தண்டகம், பதஞ்சலி யோகசூத்திரம். கேனோபநிஷதம், சாந்தோக்ய உபநிஷதம், ஸ்காந்தம், லலிதோ பாக்யானம், பாணினியோக சூத்திரம், தைத்திரிய உபநிஷதம், லகுஸ்துதி ரிக்வேதம், முதலான வடமொழி நூற்களை, ஆங்காங்கே அற்புதமாக அமைத்துள்ளார். காளிதாசன், பூககவி, ஆகியோரின் கருத்துக்களையும் சுட்டிக்காட்டியுள்ளார்.

அப்பர், அருணகிரி, தாயுமானவர், சேக்கிழார், திருமூலர், சித்தர், புகழேந்தி, பசுபிக்கூத்தர், ஆகியோர் தம் தமிழ்ப் பாடல்களையும், மேற்கோள் காட்டியுள்ளார். வடமொழிப் புலமையிலார்க்கும் இவர் உரை நல்விருந்து.

இந்நூலுக்கு, தமிழக ஆளுநர் திரு. கே. கே. ஷா அவர்கள் ஆங்கிலத்தில் ஓர் பாராட்டுரை வழங்கியுள்ளார். சமய ஒருமைப் பாடும், வடமொழி, தென்மொழியென வந்தவை இருவிழிகள் என்பதும், தெளிவுபட அவர் சுட்டிக்காட்டக் காணலாம்.

இந்நூல், திண்டுக்கல் அபிராமி அம்மன் கோவில் அறங்காவலர் குழுவின் சார்பில் வெளியிடப் படுவதாக இருந்து, ஏது காரணம் பற்றியோ அது நிறைவேறாமற் போயிற்று.

இடைவிடாது உழைத்து, எடுத்த காரியம் நிறைவேற்றும் வெநயச் செல்வர், திரு. காசிவிஸ்வநாதன் செட்டியார் அவர்கள் இந்நூலை, அச்சிட்டு, வெளிக்கொணரும் பொருட் செலவைத் தானே ஏற்று இவ்

வருட்பணியை நிறைவேற்றியுள்ளார்; தான் நடத்தும், வங்கியினைக்கூட "அபிராமி வங்கி" எனப் பெயரிட்ட பக்தியினர் இவர். தெய்வத் தொண்டில், அகமகிழ்பவர். தெய்வகாரியங்கள் நடைபெறுமிடங்களில் தவருது இவரைக் காணலாம். பக்திப்பயிர் செழிக்க நீராகப் பயன்படும் வள்ளன்மை வாழ்க!

இனி 'இந்நூற்கோவில்,' வழி அபிராமியை வழிபடுவோர் நன்மை யெய்தல் திண்ணம். இந்நூலே முறையாகப் பயில்பவர் இதயம் அன்பால் நனையும் விழியிற் கருணை விளையும்; தன்னைப் பார்ப்பவர் தம்மைப் பார்ப்பார் நானென்போர் நாமென்பார். ஏனெனில்,

ஆற்றலும் கருணையும் அழகும் தருபவள் அபிராமி. மாற்றமில் உண்மை மலர வருபவள் அபிராமி. அவள் வரைவரிய திருமேனி, இருநிலமும், திசை நான்கும் படர்ந்து நிற்கும்;

அவள் மென்மை, மணங்களின் உறைவிடம். அவள் திருவடிகள் மறை பழகிச் சிவந்து, மாலோடு அயன் தேட நின்றன. துதிப்பார்க்குப் புணை. வேதச் சிலம்பேந்தி ஒன்னுர் வெருவ அவை ஒலிக்கும். துடியும் கொடியும், மின்னலும் நூலும் விளக்குவது அவளிடை, சண்பக மாலையும், கடம்பக் கொத்தும் ஏந்தின அவள் தோள்கள். வில்லும், கணையும், வீணையும் சூலமும், பாசமும், அங்குசமும் தாங்குதவள் கைகள்.

தவள நகை தருவன பவளத்திரு விதழ்கள்; கோப்பும் குழையும் ஒளிர்வன செவிகள். பிச்சி இணரும், பிஞ்சுப்பிறையும் ஒளிர்வன அவள் குழல்கள்.

பார்க்கும் திசையெலாம் அவலம் தீர்க்கும் திருவிழிகள் அவளுடையன. விழி எழுதிப் பார்த்திருக்கும் ஓவியம் அன்ன கருணைத்திரு வடிவம்.

அவள் அண்டமெலாம் பூத்தவள்
அமரர்க்கு அரு மருந்து
இமயத்துப் பிறந்து இசைவடிவாய் நிற்பவள்
உள்ளத்தே ஊறும் கள், ஊழிக்கூத்தாடுபவள்,
உலகத்து நாயகி.
எம் பெருமாட்டி, எந்தை துணைவி, எழுதரிய
மேனி மயில்.
ஒன்பது கோணமும் உறைபவள், ஒருகோடி
அண்டம் உருட்டுபவள்.
குவளைக் கண்ணி, கோமள யாமளை
ஞால ஞாயிறு, ஞான சுந்தரி.
பாலினும் இனியவள், பரிமளப் பசுங்கொடி
பூங்குயில், பூங்குழல், பூதங்களானவள்.
மதிச்செஞ் சடையாள், மறையின் மலர் மணம்,
மாதுளை மேனியாள், மாலினி, மகிழ்நகை,
முதல்வி, முகிழ்சுடர், முக்திக்கு வித்து.

மேற்குறித்தபடி யெல்லாம் அன்னை அபிராமியைப் பாராட்டுபவர், அந்தணத் தோன்றல் அபிராமி பட்டர். காலமெனும் மதிலைப்பற்றி வாடாது நிவந்தேறும் சந்தனச்சிறு கொடி இச்செந்தமிழ்ப் பனுவல்.

இதனைப் படிப்பவர் நெஞ்சில் அபிராமித் தோற்றம் பதியும். பாராயணம் செய்வோர்க்கு பக்தி நலம் நித்தம் பழுக்கும். சூழ்க!

வீ. ரங்கராஜன்,
மொழிகள் துறைத் தலைவர்,
கிராமிய உயர் கல்விக் கழகம்,
காந்தி கிராமம்,
மதுரை மாவட்டம்.

5—3—1974
திண்டுக்கல்.

உ

## பதிப்புரை

சமயங்களின் தலைவனாக இறைவனை வைத்து அவன் அமர்ந்துள்ள ஆலயங்களை வானுயரக்கட்டி அதில் கலைச்சின்னங்களை அமைத்து சமய நெறியால் ஒருமைப்பாட்டினை வளர்த்து பெருமைகொண்ட நாடு நமது தமிழகம். இறைவனைத் தமிழால் துதிபாடி அவன் பெருமையினை காவியமாக்கி, இன்பத்தமிழில் தேவாரமாக, திருவாசகமாக, திவ்யப்பிரபந்தமாக, திருப்புகழாக பாமாலை சமர்ப்பித்தனர் நமது சமயப் பெரியார்கள் வடமொழி, தென்மொழி என்ற வேறுபாடு வளராமல், இரண்டும் இறைவனால் தோற்றுவிக்கப்பட்ட செம்மொழிகள் என இரண்டையும், இரண்டு கண்களாகக் கருதினர் சான்றோர்.

'அபிராமி அந்தாதி' என்னும் இந்நூல் திருக்கடவூரில் கோயில் கொண்டு, எழுந்தருளியுள்ள ஸ்ரீ அபிராமி அம்பிகையின் புகழையும் சிறப்பையும் தேன் தமிழில், சமயப்பண்புடன், ஸ்ரீ அபிராமி பட்டரால், போற்றிப்பாடித் தொகுக்கப்பட்ட பாமாலையாகும். இந்நூலுக்குப்பல உரைகள் தோன்றிடினும் அவை சாத்திர சம்பந்தமான தத்துவங்களுடன் வெளிவராத காரணத்தால் ஆசிரியர் சேக்கிழார் அடிமை P. K. சண்முகநாதன் அவர்கள், நன்கு ஆராய்ந்து தெளிந்து தேர்ந்த கருத்துக்களுடன் சாக்த சித்தாந்தப்படி, இந்நூலுக்கு உரை எழுதியுள்ளார்கள். இன்னும் திருமுருகாற்றுப் படைக்கு பல உரைகள் இருந்தாலும், விசேடமான உரை எழுதி திருச்செந்தூர் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி தேவஸ்தானத்தாரால், வெளியிடப்பெற்றும், ஆண்டாள் திருப்பாவைக்கு விரிவான உரை எழுதி, ஸ்ரீவில்லிப்புத்தூர் நாச்சியார் தேவஸ்தானத்தாரால், வெளியிடப்பெற்றும், கந்தர் அநுபூதிக்கு, மிக்க சிறந்த உரை எழுதி அகில பாரத சங்கர சேவாஸமிதியாரால், வெளியிடப்பெற்றும், இத் திண்டிமாநகர் தலபுராணம் எழுதி தேவஸ்தானத்தாரால் வெளியிடப் பெற்றும், பாராட்டப் பெற்றுள்ளார்.

இந்நூல், அவர்தம் மறைவுக்குப் பின், வெளியிடப் பெறுகிறதே என்ற வேதனைதான், என்நெஞ்சை மிக, மிக வருத்துகின்றது. எனது 'உழுவலன்பரும்' குருநாதருமான, ஐயாவின் வாழ்நாளில் எனக்கிட்ட பணியை நான் இன்று செய்து முடிக்கின்றேன். இந்நூல் ஐயாவின் பாத கமலங்களில் காணிக்கையாகத் தமிழ்க்கூறும் நல்லுலகுக்குச் சமர்ப்பிக்கிறேன், தமிழ்மக்கள் இந்நூலை ஏற்று நற்பயனடைய வேண்டுகிறேன்.

இந்நூல் திண்டுக்கல் ஸ்ரீ காளஹஸ்தீஸ்வர சுவாமி தேவஸ்தானத்தாரால் வெளியிடப்பட இருந்ததால், ஆசிரியர், அதற்கேற்றவாறு முன்னுரை எழுதியுள்ளபடி, அவர்கள் இந்நூலை வெளியிட முடியாமல் போனதாலும், ஆசிரியர் அவர்களின் மறைவு ஏற்பட்டதாலும், முகவுரையை அவர்கள் எழுதியபடியே பிரசுரித்துள்ளேன். இந்நூல் வெளியாவதற்கு அனுமதியளித்த என் குருநாதரின், மூத்தகுமாரர் திருச்சி மாவட்ட நீதிபதி கனம் சீனிவாசன் B.A., B.L., அவர்களுக்கும், பாராட்டுரை வழங்கிய தமிழக ஆளுநர் மேதகு கே. கே. ஷா அவர்கட்கும், அணிந்துரை வரைந்துதவிய காந்திகிராமம், கிராமிய உயர்கல்விக் கழகப் பேராசிரியர் வீ. ரங்கராஜன் அவர்கட்கும், பாராட்டுப் பா நல்கிய கவிஞர் பெரிய நம்பிக்கும், யான் பெரிதும் கடப்பாடுடையேன்.

இங்ஙனம்,

6—3—74
திண்டுக்கல்.

குமர. கு. காசிவிசுவநாதன் செட்டியார்,

---

உ

கட்டளைக் கலித்துறை.

பாராட்டுப் பா

அன்னை யபிராமி அந்தாதிக் கேற்ப அறவுரைகள்
முன்னம் பல சான்றோர் முத்தான நல்ல முழுவுரைகள்
சொன்ன வழியெல்லாம் சோதித்து தூய சுடரது போல்
மின்னித் துலங்க வெளியிட்டான் சண்முக வித்தகனே!

கவிஞர். பெரிய நம்பி.

## உரையாசிரியர் முகவுரை

வளம் நிறைந்த திண்டிமாநகரில் மாலை சுமார் 7 மணிக்கு, ஸ்ரீ அபிராமி அம்மன் சந்நிதியில் H. R & C. E. அதிகாரி உயர்திரு விவேகானந்தம் பிள்ளையவர்கள் தரிசனம் செய்து கொண்டிருக்கிறார்கள். அவர்கூட தேவஸ்தான தர்மகர்த்தாக்களும், நிர்வாக அதிகாரியும் ஏனைய ஆஸ்திக மக்களும் குழுமி இருக்கிறார்கள். ஆலய ஓதுவார் அபிராமி அந்தாதி பாடிக்கொண்டிருக்கிறார். அடியேனும் அந்த இடத்தில் நிற்கின்றேன். இது 1964ம் ஆண்டு ஜூலை மாதம் உயர்திரு விவேகானந்தம் பிள்ளையவர்கள் அடியேனை விளித்து "நீங்கள் அபிராமி அந்தாதிக்கு உரை எழுதுங்கள்" என்றார் "பல உரைகள் இருக்கின்றனவே" என்றேன் நான். "வடமொழியும் ஆகமங்களும் பயின்றவர்கள் எழுதவேண்டும்" என்றார். "அடியேனுக்கு அத்தகைய வாய்ப்பு இல்லையே" என்றேன். "நீங்கள் எழுதுங்கள் இது அம்மையின் உத்தரவு" என்றார். அடியேன் மறுமொழி கூறவில்லை. கோயில் தர்மகர்த்தாக்களையும் நிர்வாக அதிகாரியையும் பார்த்து நீங்கள் "மீட்டிங்" போட்டு "எஸ்டிமேட்" தயார் செய்து அனுப்புங்கள் என்றார். அவர்களும் "சரி" என்றனர். இந்த சம்பவம் தான் அடியேனை இவ்வுரை எழுதச்செய்தது.

இவ்வுரை "சாக்த தந்திர சாஸ்திர" அடிப்படையில் எழுதப்பட்டது. சாக்த சித்தாந்தம், சைவ சித்தாந்தம் போன்று ஆழ்ந்து அகன்றது. இந்நூலைச் செய்த அபிராமி பட்டர் என்பவர் ஓர் சாக்தர். அவர் நூலுக்கு அந்த சித்தாந்தப் பரிச்சியமுடையவர்கள் உரை இதுவரை வெளிவரவில்லை. சைவப் பெரியார்களும் தமிழ் விரகர்களும் எழுதிய உரைகள் ஆசிரியரின் அடிப்படைக்கருத்துக்களை உள்ளபடி காட்டுவனவாக இல்லை, சாக்த சித்தாந்தத்தை இதைப்படிக்கும் நேயர்கள் உணர்ந்தாலன்றி இந்நூலை முழுதும் அநுபவிக்க முடியாது. அதன் காரணமாக ஆரம்பப்பாட்டுகள் 40க்கு சற்று விரிவாகவே உரை எழுதியுள்ளேன். பின்னால் உரையைச் சுருக்கி எழுதியிருக்கிறேன்.

முதல் சில பாடல்களில் சித்தாந்தத்தின் தத்துவங்களை விளக்கி விட்டேனாதலால் பிந்தின பாடல்களுக்கு விரிவான உரை அவசியமாகவில்லை. சாக்தத்தில் உருவம், சக்கரம், மந்த்ரம், காமகலை என்ற தத்துவங்கள் இருக்கின்றன. நூலாசிரியரும் அவற்றைத் தமது பாடல்களில் புதைத்து வைத்திருக்கிறார். மேலும் சாக்த

சித்தாந்தப்படி அம்பாளே "பரப்ரம்ஹஸ்வரூபிணீ" என்றும் அவளே பஞ்சபிரம்மாக்களான பிரம்மன், விஷ்ணு, ருத்ரன், மஹேச்வரன் சதாசிவன் என்பவர்களை அதிஷ்டித்து அவரவர்கள் தொழிலைச் செய்யக் காரணமாய் இருக்கிறாள் என்றும், அம்பாளே ஸ்தானத்தைப் பொருத்தும், காரியத்தைப் பொருத்தும், பலனைப் பொருத்தும் பல்வேறு ரூபங்களோடு விளங்குகிறாள் என்பதும் அண்டங்கள் யாவும் அவளே சரீரமாகக்கொண்டு ஒன்றாய் உடனாய் வேறாய் இருந்து தொழிலாற்றுகிறாள் என்றும், அம்பாளை வழிபடும் மார்க்கங்கள் இன்னவை என்றும், மந்திரங்கள் இன்னவை என்றும் இன்னும் பல சாக்த சித்தாந்தக் கருத்துகளை விளக்க முயன்றிருக்கிறேன். சாக்த சித்தாந்தம் அறியாதவர் பண்டிதரேயாயினும் நூலின் பொருளை முழுதும் அறியார். அன்னவர் அடியேனின் உரையை "வலிந்து பொருள் கோடல்" என்றும் கூடக் கூறமுற்படுவர். சில இடங்களில் அன்னவர் உரை பொருந்தாமைக்கும் காரணம் காட்டியுள்ளேன். அடியேனும் இந்நூலின் ஆழத்தை முழுதும் உணர்ந்ததாகக் கூறமுடியாது எனினும் அம்பாளின் அருளால் அடியேனுக்கு உயர்திரு விவேகானந்தம் பிள்ளையவர்கள் இட்ட பணியை ஒருவாறு நிறைவேற்றியிருக்கிறேன்.

அடியேனின் எழுத்துப் பிரதியை வாசித்து அதற்குத்தகுந்த முறையில் ஓர் அழகிய அணிந்துரை எழுதி அடியேனையும் வாழ்த்தியிருக்கும் சமயக்கலாநிதி உயர்திரு. M.S.சாரங்கபாணி முதலியார் பி.ஏ., பி.எல்., அவர்களுக்கு என் நன்றி என்றும் உரித்தாகுக.

இவ்வாலய தர்மகர்த்தாக்களின் தலைவர் உயர்திரு D.M.M. துரைராஜு செட்டியார் அவர்கள் நீண்ட நாளாய் ஆலயத் தொண்டில் தன் மனமெய்மொழிகளை ஈடுபடுத்தி இந்த ஆலயத்துக்கு பல சீர்திருத்தங்களையும் அபிவிருத்தியும் செய்துள்ளார். எம்மன்னை அபிராமி அன்னாருக்கு நீண்ட ஆயுள் நல்கி இன்னமும் ஆலயப்பணி செய்ய ஆற்றலும் வாய்ப்பும் கொடுப்பாள் என்று பிரார்த்திக்கிறேன்.

நிர்வாக அதிகாரியாக இவ்வாலயத்துக்குக் கிடைத்தவர் உத்யோகமுறையென்று கருதாமல் ஆத்மார்த்தம் என்று கருதி பணியாற்றி வருகிறார்கள்; நன்கு கற்றறிந்தவர்கள், சிறந்த அனுபவசாலியும் கூட. இன்சொல்லும், இன்செயலும் இறைபணியும் அவருடைய வாழ்க்கையோடு அமைந்தன. அன்னார் இருந்து அந்நூலை வெளியிடுவது சாலநன்றே.

அடியேன் பல மாதங்கள் நோய்வாய்ப்பட்டிருந்தமையால் உரை எழுதிமுடிக்கக்காலதாமதமானது. மானேஜிங் டிரஸ்டி அவர்களும் நிர்வாக அதிகாரியும் அடிக்கடி அடியேனைத்தூண்டியும் ஊக்குவித்தும் வந்ததின் பயனாக ஓராண்டு கழித்தாவது இதனை முடிக்க இறைவி அருள் புரிந்தாளே என்று இறும்பூதி ஆஸ்தி மக்கள் திருவடியில் சமர்ப்பிக்கின்றேன்.

திண்டுக்கல்
14—7—65

பெ. கா. ஷண்முகநாதன்.

1

## காப்புச் செய்யுள்

தாரமர் கொன்றையுஞ் சண்பக மாலையுஞ் சாத்துந்தில்லை
ஊரர்தம் பாகத்துமை மைந்தனே! உலகேழும் பெற்ற
சீரபி ராமி யந்தாதி எப்போதுமென் சிந்தையுள்ளே
காரமர் மேனிக் கணபதியே நிற்கக் கட்டுரையே.

### பதவுரை

தாரமர் : கொத்துக் கொத்தாக மாலை போன்று பூக்கும்
கொன்றையும் : (பிரணவாகாரமான) கொன்றை மலரையும்
சண்பகமாலையும் : சண்பகப்பூவாலாகிய மாலையையும்
சாத்தும் : அணிந்த
தில்லை ஊரர்தம் : சிதம்பரத்தில் நித்யவாசம்செய்யும் நடராஜப்பெருமானின்
பாகத்து : (இடது) பாகத்தில் எழுந்தருளியிருக்கின்ற
உமை : உமாதேவியாரின்
மைந்தனே : திருக்குமாரரே
காரமர் மேனி : மேகம்போன்ற திருமேனியையுடைய
கணபதியே : விநாயகப்பெருமானே
உலகேழும்பெற்ற : ஏழு உலகங்களையும் ஈன்ற
சீரபிராமி : சீர்த்தியை உடைய அபிராமி அம்பிகையின்மீது
அந்தாதி : அந்தாதி முறையில் பாடப்பெற்ற நூல்
என் சிந்தையுள்ளே : எனது சிந்தனையினுள்
எப்போதும் : எக்காலத்தும்
நிற்க : நிலைபெற்று நிலவ
கட்டுரை : வரம் தந்தருள்வீராக.

### பொழிப்புரை :

இயற்கையாகவே மாலைபோல் கொத்துக் கொத்தாகப் பூக்கும் கொன்றை மாலையும், சண்பக மாலையும் அணிந்த தில்லை நடராஜரது பாகத்தில் உறைகின்ற உமாதேவியாரின் புதல்வரே, வரையாது வழங்குவதில் மேகம் போன்ற திருமேனியுடைய விநாயகப் பெருமானே உலகேழும் ஈன்ற அபிராமி தேவியின்மீது பாடப்பெற்ற அந்தாதி என்ற இந்நூல் என்றும் என்மனதில் நீங்காது நிற்க அருள்புரியவேண்டும்.

விரிவுரை

இப்பாடல் ஆழ்ந்து சிந்தித்தற்குரியது. இப்பாட்டில் இறைவனையும், இறைவியையும், கணபதியையும் வைத்துப் பாடியுள்ளார். விநாயகப்பெருமான் பிரணவசொரூபம் என்பதை யாரும் அறிவர். அப்பிரணவ ஒலியே முதல் தோற்றம். அது சிவத்தினின்று சக்தி ஸ்புரிக்கும்போது ஏற்படும் நாதமும், சலனமும். சலனம் ஓங்கார சொரூபம். நாதம் பிரணவநாதம். பிரபஞ்சம் தோன்றுவதற்குக் காரணமான ஸ்பந்தன சப்தங்களே விநாயகன். தில்லை ஊரர் பாகத்துமை- என்பதில் தில்லை என்பது சிதாகாசம். சிதம்பரம் என்று சொல்லப்படுவது. இது நமது சரீரத்தில் ஹிருதய ஸ்தானத்தைக் குறிக்கும். சக்தி ஸ்புரணம் ஆகும்போது இறைவனின் சிதாகாசத்தில் ஓர்சலனமும் அந்த சலனத்தையொட்டி நாதமும் கேட்கும். ஆக இப்பாடல் பிரணவத்தை உட்பொருளாகக்கொண்டு அமைந்திருக்கின்றது. தில்லை ஊரர் பாகத்துமை, என்றதை சாமான்யமாக நடராஜரையும் அவரது இடது பாகத்தில் எழுந்தருளியிருக்கும் சிவகாமியம்மையையும் குறிப்பதாகக்கொள்வர். பாகத்துமை என்றதால் இறைவனோடு ஒன்றி அர்த்தநாரியாக பாதி பாகத்தை ஆக்ரமித்துக் கொண்டிருக்கும் பராசக்தியே ஈண்டு குறிக்கப்படுகின்றாள். ஆகையால் பெருமானுக்கு அடையாளப்பூவாகிய கொன்றையும், அம்பிகைக்குச் சண்பக மாலையையும் சேர்த்துக்கூறுகின்றார். கொன்றைப் புஷ்பமே பிரணவாகாரம். சண்பக மலரிலே வண்டுபடியாது.

உலகேழும் பெற்ற என்பது ஜகஜ்ஜனனியாகையாலே, ஸகல அண்டங்களும் தோன்றுவதற்கு முதற்காரணமாக அமைந்தவள். ×அவள் உபாதி ரஹிதனையும் சம்வித்ரூபமான அருவசிவத்தை பிரபஞ்சமாக விரியத்தூண்டுகிறாள். அவள் இல்லையேல் சிவம் தொழில் படாது. லலிதா ஸஹஸ்ரநாமத்தில் "உன் மேஷ நிமிஷோத்பன்னவிபன்னபுவனாவலி!" என்று கூறப்பட்டிருக்கின்றது.

அம்பாள் கண்களைத் திறப்பதினாலும் மூடுவதினாலும் ஸர்வலோக வரிசைகளும் உற்பத்தி நாசத்தைச் செய்யும் வல்லமையுடையவள். அதாவது அவ்வளவு அநாயஸமாய் பிரபஞ்சங்களைத் தோற்றுவித்துப்,

* ஸஹஸ்ர நாமத்தில்
×620 'அநேக கோடி ப்ரஹ்மாண்ட ஜனனி' என்றும்
648 'லீலா க்லுப்த ப்ரஹ்மாண்ட மண்டலா' என்றும் வருவதையும் பார்க்க,

வித்துப் பின் தன்னுள் அடக்கிக்கொள்கிருள். சங்கரபகவத் பாதாள் ஸௌந்தர்யலஹரி 55-வது சுலோகத்தில் தான் கண் களை மூடுவதால் லோகங்கள் நசித்துப்போகின்றனவே எனக் கருதி அவற்றின் க்ஷேமத்தின் பொருட்டு அம்பாள் கண்களை மூடுவதில்லை என்று அழகாகக் கூறுகின்ருர். தாயுமானுர்

"ஆறணி சடைக்கடவுள் ஆரணி எனப்புகழ
அகிலாண்ட கோடி ஈன்ற
அன்னையே பின்னையும் கன்னியென
மறைபேசும் ஆனந்த ரூபமயிலே."

என்கின்ருர். இந்தப் பிரபந்தம் "அந்தாதி" யாக அமைந்ததே ஓர் அழகு. எது அந்தமோ அதுவே ஆதியாகும் என்பதே சிவஞான போதம்.

"அந்தம் ஆதி என்மனுர் புலவர்" என்கிறது. எதில் எல் லாம் லயிக்கின்றனவோ அதிலிருந்தே மறுபடியும் தோற்றம் ஏற்படும். பராசக்தியினிடத்தில் சகலமும் ஒடுங்கி மறுபடியும் அவளிடத்திலிருந்தே தோன்றுகின்றன என்பதை லலிதாதிரிசதி யில் "லயஸ்திதியுத்பவேஸ்வரி" என்று கூறப்பட்டு இருக்கின்றது. அதாவது கார்யபிரபஞ்சத்தின் லயம், ஸ்திதி, உத்பவம் இவை களுக்குக் காரணமான ஈஸ்வரியாய் விளங்குபவள். இப்பிரபஞ் சம் தோன்றுவதற்குமுன் "ஸத்ரவ அக்ரம் ஆசீத்" என்று உபநிஷத் கூறுவதுபோல ஸத்தாமாத்ரமாக இருந்தது. அதன் சித்தும் ஆனந்தமும் அபின்னமாகையாலே உபலக்ஷணமாய் சித்தாயும் ஆனந்தமாயுமுள்ள பரதேவதையும் கூடவே இருந் தாள் என்பதை "மாஹேஸ்வர மஹாகல்ப மஹாதாண்டவ சாக்ஷிணீ" என்று ஸஹஸ்ரநாமம் கூறிப்போந்தது. எப்போதும் என்றதால் ஸர்வகால ஸர்வதேச ஸர்வ அவஸ்தைகளிலும் என்று பொருள். 'காரமர் கணபதி' என்பது விநாயக ரூபத் தின் நிறத்தைக் குறிக்காமல் அவருடைய வள்ளல் தன்மையைக் குறித்து நின்றது.

திருக்கடவூர் ஆலயத்தில் எழுந்தருளியிருக்கும் "கள்ள வாரணப் பிள்ளையாரை" பிரார்த்திக்கின்ருர். "கட்டுநியே" என்றும் ஓர் பாடமுண்டு. அது நூலின் முதல்பாட்டின் "உதிக்கும்" என்று தொடங்குவதற்கு அந்தாதிப் பொருத்தம் இருப்பினும் நூலின் இறுதிப் பாட்டுக்குப் பொருந்தாமையால் "கட்டுரையே" என்ற பாடமே ஏற்றுக் கொள்ளப்பட்டது. பொருள் வளத்திலும் "கட்டுநியே" என்பதைவிடக் கட்டுரையே

என்பது சிறந்ததாகவும் தோன்றுகின்றது. ஆக இப்பாட்டில் காப்புச் செய்யுளாக விநாயக வணக்கம் கூறுவதுபோல சாக்த சித்தாந்தத்தின் ஓர் தத்துவத்தை விளக்குவது அருமையானது. சிவசக்தி சம்மேளனமும், பிரணவரூபமும் ஒலியும், பிரபஞ்ச உற்பவலயங்களுக்கு பராசக்தியே முதற்காரணம் என்பது குறிக்கப்பட்டது. அம்பாளின் மைந்தன் என்று கணபதியைக் கூறுகின்றனர். இதை ஸஹஸ்ர நாமத்தில் "காமேச்வர முகாலோக கல்பிதஸ்ரீ கணேச்வரர்" என்ற நாமம் குறிக்கின்றது. அதாவது காமேஸ்வரருடைய திருமுகத்தைப் பார்த்ததினாலேயே ஸ்ரீ கணேச்வரரை சிருஷ்டித்தாள். இதனை ப்ரம்மாண்ட புராணத்தில் பண்டாஸுர யுத்தத்தின்போது பண்டாசுரனின் புத்ரர்களில் ஒருவனான விஸுக்ரன் என்பவன் "ஜயவிக்னம்" என்கிற யந்த்ரத்தைத் தயார்செய்து அதை அம்பாள் ஸைன்யம் இருக்குமிடத்தில் (ஏவல்தகடு வைப்பது போல) வைத்துவிட்டதாயும் அதனால் பாதிக்கப்பட்ட சக்தி ஸைன்யம் சோர்ந்துபோனதாயும், அம்பாள் காமேஸ்வரரைப் பார்த்துப் புன்னகை செய்ததாயும், அம்பாளின் மந்தஸ்மிதத்தின் காந்தியிலிருந்து மஹாகணபதி ஆவிர்பவித்து அந்த விக்ன யந்த்ரத்தை உடைத்துப் பொடிபண்ணி சக்தி ஸைன்யத்துக்குப் புத்துயிர் அளித்ததாயும் கூறப்பட்டிருக்கிறது. த்ரிசதியில் "லம்போதரப்ரஸு" என்பது ஒரு நாமா (77)

காப்புச் செய்யுள் ஏகதேசம்

முடிவுற்றது.

## நூல்
## முதல்பட்டு "ஸர்வாருணு"

அம்பாளின் திருமேனியின் நிறம்'

உதிக்கின்ற செங்கதிர், உச்சித்திலகம் உணர்வுடையோர்
மதிக்கின்ற மாணிக்கம் மாதுளம்போது மலர்க்கமலை
துதிக்கின்ற மின்கொடி மென்கடிக்குங்கும தோயமென்ன
விதிக்கின்றமேனி அபிராமி என்றன் விழுத்துணையே

பதவுரை

உதிக்கின்ற செங்கதிர் : உதயமாகின்ற சிவந்தஇளம் சூரியன்
உச்சித்திலகம் : உச்சிகாலத்தில் மலரும் மஞ்சாடிப்பூ
உணர்வுடையோர் : அறிவாளிகள்
மதிக்கின்ற : சிறப்பாக எண்ணுகின்ற
மாணிக்கம் : செம்மணி (நவரத்னங்களில் ஒன்று சிவப்புக்கல்)
மாதுளம்போது : மாதுளம்பூ
மலர்க்கமலை : தாமரையில் வதியும் லக்ஷ்மி
துதிக்கின்ற : போற்றுகின்ற
மின்கொடி : மின்னற்கொடி
மென்கடி : மென்மையான வாஸனையுடைய
குங்குமதோயம் : குங்குமக்குழம்பு
என்ன : என்று
விதிக்கின்ற : சாஸ்த்ரங்களில் சித்தாந்தப்படுத்தப் பட்டிருக்கின்ற
மேனி : (செந்நிறத்தையும், ஒளியையும் கொண்டுள்ள) திருமேனியை உடைய
அபிராமி : பேரழகுடையதேவி
என்றன் : என்னுடைய
விழுத்துணையே : சிறந்ததுணையாவாள்

பொழிப்புரை

அப்பொழுதுதான் உதயமாகின்ற இளஞ்சூரியனும், உச்சி வேளையில் மலர்கின்ற மஞ்சாடிப்பூவும், அறிவுடையோரால் நன்கு மதிக்கப்படும் செம்மணியும் மாதுளம் பூவும், மின்னல் கொடியும், மென்மையான வாஸனையுடைய குங்குமக்குழம்பும், இலக்குமி தேவியாரால் போற்றப்படுகின்றவள் என்று சகல சாஸ்திரங்களும் சித்தாந்தம் செய்யும் அழகு சிவப்புநிறம், ஒளி முதலியவற்றை ஒருங்கே கொண்ட திருமேனியை உடைய அபிராமி அம்பாள் எனது உயர்த்துணையகும்.

## விரிவுரை

அம்பாளின் மேனி சிவப்பு நிறம். இந்நிறம் விமர்சாம் ஸத்தைக்குறிக்கும் பிரகாசாம் ஸமாகிற சிவம் வெள்ளை நிறம் என்று தந்த்ர சாஸ்த்ரங்களில் கூறப்பட்டிருக்கின்றது. "உதித்த" என்னுமல் "உதிக்கின்ற" என்றதால் உதயம் ஆகிக் கொண்டிருக்கிற இளம் சூரியனைக் குறிக்கும். சங்கரரும் "உத்யத்பானு ஸஹஸ்ரகோடி ஸத்ருஸாம்"என்றார். "அருணம் கருணாதரங்கிதாக்ஷிம்" என்றும் "உத்யத்தினகரசோணா" என்று துர்வாஸமஹரிஷியும், "தருணதரணிஸ்ரீஸரணி:" என்று ஸௌந்தர்யலஹரியிலும், இன்னும் அநேக நூல்களிலும் வர்ணிக்கப்பட்டிருக்கின்றது. உதயசூரியன் சிவப்பு நிறத்தோடு குளிர்ந்த ஒளியை உடையவன். பார்ப்பதற்கு ரம்யமாக இருக்கும். கண்கூசாமல் பார்த்து மகிழலாம். "உணர்வுடையோர் மதிக்கின்ற மாணிக்கம்" என்றதில் ரத்னபரீக்ஷையில் தேர்ந்தவர்கள் என்றும், அம்பாளின் மாணிக்க வண்ணமான நிறத்தை அறிய ஆற்றல் நிரம்பிய அறிவுடையோர் என்றும் கூறலாம். மாதுளம்போது, "தாடிமீகுஸுமப்ரபா" அதாவது மாதுளம்பூவின் காந்தியைப்போன்ற காந்தியுடையவள் என்று ஸஹஸ்ரநாமம் வர்ணிக்கின்றது. மின்கொடி பிரகாசமட்டுமின்றித் தோன்றிமறையும் இயல் பாதலால், ஞானமுதிர்ச்சியில் ஏகாக்ரமாய் தியானிக்கும்போது தோன்றியும் மற்ற காலங்களில் மறைந்தும் இருக்கும் நிலையையும் குறிக்கும். "தடில்லதாஸமருசி:" என்று ஸஹஸ்ரநாமம் கூறுகின்றது. சுருதியும் "வித்சுயுல்லேகேவ பாஸ்வரா" என்று கோஷிக்கின்றது. குங்கும தோயம் என்பதும் தேவியின் ப்ரசித்தமான வர்ணனை. "குங்குமராகசோணே" என்று காளிதாஸனும், "குங்குமருசிம்" என்று மூககவியும் கூறியுள்ளார்கள். இன்னும் சிவப்பு நிறமுள்ள மற்ற பொருள்களையும் உவமானமாகவும் கூறியுள்ளனர். "ப்ரவாளப்ரபாம்" என்று தேவிமஹாத்மியத்தில் வருகிறது. "ஹரிகோபாருணம்சுகா" என்று லலிதத்ரிசதியில் கூறப்படுகின்றது. பவளம், இந்த்ர கோபப்பூச்சி, செம்பஞ்சுக்குழம்பு முதலியவைகளோடு "ஆரக்தவர்ணா" என்று ஸஹஸ்ரநாமமும் கூறுகின்றது. அம்பாளுக்கு நாநாவித ரூபம் இருப்பதுபோல நாநாவித வர்ணங்களும் உண்டு "ஸர்வவர்ணோபசோபிதா" என்று கூறப்பட்டிருக்கிறது.

ஆயினும் பராசக்திக்கு சிவப்பு வண்ணமே விசேஷமாய்க் கொண்டாடப்படுகிறது. பிரகாம்ஸமான சிவத்திலிருந்து சக்தி

ஸ்புரித்து விமர்சாம்ஸமாகும் பொழுது அது சிவப்பாகவே காணப்படும் என்பது மஹான்கள் கண்டமுடிபு. அம்பாளை இவ்வாறு சிவப்பு நிறமாக தியானிப்பவர்கள் இகபரசுகங்கள் அனைத்தையும் அடைகிறார்கள் என்று கூறப்படுகின்றது. இப் பாடலில் கொடுக்கப்பட்டிருக்கும் உபமானங்களில் இருக்கும் விசேஷமென்னவென்றால் ஒவ்வொன்றில் ஒரு சிறப்பு லக்ஷணம் அமைந்து இருப்பதுதான். உதயசூரியனின் சிவப்பு நிறத்தோடு குளிர்ந்த ஒளி சிறப்பாக இருக்கின்றது. மஞ்சாடி மலரிலே சிவப்பு நிறத்தோடு மென்மை சிறப்பாகத் திகழ் கின்றது. மாணிக்கத்தில் சிகப்பு நிறத்தோடு ஒளியும் இருப்பி னும், அது யாவராலும் மதிக்கப்படுதலும் பகல் இரவு என் றில்லாமல் எப்பொழுதும் ஒளிவிடுவதாயும் இருக்கும் சுபாவம் சிறப்பாகத் தோன்றுகிறது. மாதுளம் பூவில் நிறமும் அழகும் சிறப்பாக இருக்கின்றன. மின்னலில் சிவப்பு நிறமில்லாவிட்டா லும் அதிகமான ஒளியும் தோன்றி மறையும் இயல்பும் சிறப் பாக நிற்கின்றன. குங்குமதோயத்தில் சிவப்பு நிறத்தோடு மணமும் குளுமையும் சிறப்பாக உள்ளன. இத்தனை விசேஷங் களையும் கொண்டவளாக அம்பாளை தியானம் செய்வதால் ஏற்படும் பயனை "மலர்க்கமலை துதிக்கின்ற" என்றதால் குறிப் பிட்டிருக்கிறார். அதாவது லக்ஷ்மீகடாக்ஷம் ஏற்படும் என்பது குறிப்பு. சில பிரதிகளில் "விழித்துணையே" என்று இருக்கின்றது. இதற்கு கண்கண்ட துணை என்று பொருள் கொள்ளவேண்டும். ஏனெனில் மனதால் அனுஸந்தானம் பண்ணவேண்டிய உருவ மேயன்றிக் கண்ணால் பார்க்கக்கூடிய உருவமன்று. விழுத் துணையே சிறந்த பாடம்.

3

2ம் பாட்டு

அபிராமியே திரிபுரஸுந்தரி என்கை.

துணையும் தொழுந்தெய்வமும் பெற்ற தாயும் சுருதிகளின்
பணையும் கொழுந்தும் பதிகொண்ட வேரும் பனிமலர்ப்பூங்
கணையும் கருப்புச் சிலையுமென் பாசாங் குசமும் கையில்
அணையும் திரிபுர சுந்தரி யாவது அறிந்தனமே.

பதவுரை.

துணையும்: ஆன்ம கோடிகளுக்கு உற்ற உயிர்த் துணையும்
தொழும் தெய்வமும்: (உயிர்கள் உய்வதற்காக) வழிபட வேண்டிய உபாஸனா மூர்த்தியும்
பெற்ற தாயும்: ஸகல சேதனா சேதனங்களை ஈன்ற மாதாவும்

சுருதிகளின்: வேதாகமங்களின்
பணையும்: சாகைகளும் (கிளைகளும்)
கொழுந்தும்: வேதங்களின் கொழுந்துகளான ஏனைய சாஸ்த்ர புராண இதிஹாஸங்களும்
பதிகொண்ட வேரும்: வேதங்களைத் தாங்கி அதற்கு மூல வேராக விளங்கும் பிரணவமும்
பனிமலர் பூங்கணையும்: குளிர்ச்சி பொருந்திய புஷ்ப பாணங்களையும்
கருப்புச் சிலையும்: கரும்பு வில்லையும்
பாசம்: பாசத்தையும்
அங்குசமும்: அங்குசத்தையும்
அணையும்: தனது சதுர்ப் புஜங்களில் தாங்கி விளங்கும்
திரிபுரஸுந்தரி: திரிபுரசுந்தரி என்று சிறப்புப் பெயர் பெற்ற பராசக்தியே
ஆவது அறிந்தனமே: ஆதலை ஐயந்திரிபு அற அறிந்து கொண்டோம்.

பொழிப்புரை.

ஆன்ம கோடிகளுக்கு உற்ற துணையாயும், அவர்கள் வழிபட வேண்டிய ஒரே தெய்வமாயும், வேதங்களின் சாகைகளாயும், தளிர்களாயும், வேராயும் இருப்பது யாரெனின், திருக்கரங்களில் புஷ்ப பாணங்களும், கரும்பு வில்லும், பாசாங்குசமும் ஏந்திய திரிபுரசுந்தரி ஆகிய அபிராமி அம்மையேயாரும். இந்த உண்மையை நான் அறிந்துகொண்டேன். அதாவது அபிராமியே திரிபுரசுந்தரி.

கருத்துரை.

பாசாங்குச புஷ்ப பாண இக்ஷு கோதண்டம் தரித்த திரிபுர சுந்தரியே வேதத்தின் ஆதி மத்ய அந்தங்களில் உறைபவள் என்பதை அறிந்துகொண்டேன்.

விரிவுரை

இப்பாடலில் உள்ள கருத்தை சங்கரர் ஸௌந்தர்யலகரியில் 32வது சுலோகத்தில் கூறியிருக்கிறார், அங்கு "யதாலாபாத் அஷ்டாதசகுணித வித்யா பரிணதி:" என்று கூறுகின்றார். அதாவது எந்த சிவசக்தி சம்மேளனத்தால் பதினெட்டு என்று கணக்குள்ள வித்தைகள் ஏற்படுகின்றனவோ என்று பொருள். பதினெட்டு வித்தைகளாவன:

ருக், யஜுஸ், ஸாம, அதர்வ வேதங்கள் நான்கு
சிக்ஷா, கல்ப, வியாகரண, நிருக்த, ஜ்யோதிஷ, சந்தஸ்
சாஸ்த்ரங்கள் (வேதாங்கங்கள்) ஆறு

மீமாம்ஸா, ந்யாய, தர்ம, ஆயுர்வேத, தனுர்வேத, காந்தர்வ வேத, அர்த்த சாஸ்த்ரங்களும், புராண இதிகாசங்களும் ஆக பதினெட்டு (புராண இதிகாசங்களை ஒன்ருகக் கணக்கிட்டுக் கொள்ளவும்). இந்த பதினெட்டு வித்தைகளுக்கும் ஆணி வேராக இருப்பது பரநாதமாகின்ற பிரணவமேயாகும். பிரணவமோ முன் கூறியபடி சிவசக்தி சம்மேளனத்தால் உண்டானது. பிரணவம் என்பது மூன்று அக்ஷரமாய், மூன்று பதமாய், மூன்று அர்த்தப்பிரகாசமாய் இருக்கும். இந்த நிலையில் இதற்கு அபரப்ரணவம் என்றும், வியஷ்டிப்ரணவம் என்றும், அஸம்ஹிதாப்ரணவம் என்றும் கூறுவர். அதுவே ஏகாக்ஷரமாய், ஏகபதமாய், ஏகார்த்தப்ரகாசமாக இருக்கும். இந்நிலையில் இதை பரப்ரணவம் என்றும், சமஷ்டி ப்ரணவம் என்றும், ஸம்ஹிதா ப்ரணவம் என்றும் கூறுவர். இது சகல சேதனு சேதனங்களுக்குப் பிறப்பிடமாயும், மந்த்ரங்களுக்கெல்லாம் மூலமாகவும், மூன்று வேதங்களின் சாரமாகவும் இருக்கும். இதனை உத்கிதை எனவும், சுதத்மாயை எனவும், குடிலை எனவும் கூறுவர். இதில் எல்லா உலகங்களும் தோன்றி ஒடுங்கும் என்பர். ஆலம் விதையினின்று சாகோபசாகைகள் தோன்றுவது போல இதிலிருந்தே வர்ணம், பதம், மந்த்ரம், தத்துவம், புவனம், கலை என்ற ஷடத்வாக்களும் தோன்றின. இவற்றில் வர்ணம் பதம் மந்த்ரம் என்பவை விமர்சாம்ஸம், சக்தி சொரூபம், தத்துவம், புவனம் கலை என்பன பிரகாசாம்ஸம், சிவசொரூபம், அதாவது சொல்லும் பொருளுமாய் அமையும். இந்தப் ப்ரணவத்துக்கும், அதிலிருந்து விரிந்த அஷ்டாதச வித்தைகளுக்கும் மூல காரணமாய் இருப்பவள் சக்தியே. அவளுடைய அதிஷ்டானமில்லாவிடில் சிவம் தொழிற்படாது. தொழிற்படாத நிலையில் எதுவும் தோன்ற நியதியில்லை. சிவசக்தி சம்மேளனமே பிரபஞ்ச சிருஷ்டியாதி பஞ்சக்ருத்தியங்களுக்கு நிமித்தோபாதான காரணமாயினும் சக்தியின் அதிஷ்டானத்தாலேயே சிவம் தொழில்படுவதால் சிவத்தின் அருள் சக்தியாகிற பராசக்தியே பிரதானமாகக்கொண்டு அதுவே பரஹ்மம் என்று சாக்த சித்தாந்தம் கூறும். சிவத்திலிருந்தே சக்தி ஸ்புரித்தாளாகையாலே சிவமே பிரதானம் என்று சைவம் கூறும். ஆயினும் இரண்டு சித்தாந்தங்களும் சிவ சக்தி ஸாம்யத்தை ஒப்புக்கொள்ளும். இந்நூல் சாக்த மஹானுல் எழுதப்

பட்டதால் அஷ்டாதச வித்தைகளும் பராசக்தியினின்றே தோன்றியது என்றும், அவளே வேதாகமங்களில் ஆதி நடு அந்தங்களில் உறைபவளாயும், அவளே அவற்றின் உள்பொரு ளாயும், அவளே உயிர்களுக்குத் துணையும், வழிபட வேண்டிய தெய்வமும், சேதனு சேதன பிரபஞ்சத்துக்கு மாதாவாகவும் இருக்கிறுள் என்றுர். மாதா என்றுல் பிதா வேண்டாமோ என்றுல் அம்மையும், அப்பனும் ஒரே வஸ்துவாக இரண்டற இருக்கும்போது மாதா பிதா என்ற சர்ச்சைக்கே இடமில்லை. இதற்கு ஆதாரமாக "யதா ஊர்ண நாபி:" என்று ஆரம்பிக்கும் சுருதி வாக்யத்தைக் காட்டி, எப்படி எட்டுக்கால் சிலந்தியா னது தனக்கு வேருக இருக்கும் யாதொரு காரணமின்றியே மெல்லிய நூல்களை உண்டாக்கி வலை பின்னி அதில் வசித் திருந்து மறுபடியும் அதனை விழிங்கி தனக்குள் லயப்படுத்திக் கொள்கின்றதோ அங்ஙனமே அக்ஷரமாகிற ப்ரஹ்மத்திலிருந்து வேறு ஒன்றின் துணையில்லாமல் இந்த ஜகத்தை உண்டாக்கு கின்றது என்பது அந்த சுருதி வாக்கின் பொருள். ப்ரஹ்மம் ஆணுமன்று, பெண்ணுமன்று, அலியுமன்று. ஆனுல் அதை பெண்ணுக வழிபடுவது சாக்தம். ஆணுக வழிபடுவது சைவம். இரண்டுமற்றதாய் நிருபாதிக ஸம்வித ரூபமாய் வழிபடுவது அத்வைதம். சிவமும், சக்தியும் சேர்ந்தே சகல வேதாகமங் களுக்கும் காரணமாக இருக்கின்றுர்கள் என்ற தத்துவத்தை சைவ சித்தாந்த சாஸ்த்ரங்களில் ஒன்றுகிய திருக்களிற்றுப் படியார் என்ற நூலிலும் கூறியுள்ளது.

" ஆகமங்கள் எங்கே அறுசமயம் தானெங்கே
யோகங்கள் எங்கே உணர்வெங்கே—பாகத்து
அருள்வடிவும் தானுமாய் ஆண்டிலனேல் அந்தப்
பெருவடிவை யார் அறிவார் பேசு "

என்று சிவ சக்தி மிதுனங்கள் வேதாகம சாஸ்த்ரங்களை உண் டாக்கியது எதற்கென்னின் அவர்களை உணர்வதற்கே என்ற பொருள் இருப்பது சிந்திக்கத்தக்கது. வேதாகம நூல்கள் இல்லையேல் செம்பொருளை அறிய இயலாது. அந்நூல்கள் யாவும் சக்தியும் சிவமும் சேர்ந்தே அருளினுர்கள் என்றுர்.

இனி திரிபுரசுந்தரி என்பதை ஆராய்வோம். இதுவும் பெரிய விஷயம். சாக்த சித்தாந்தத்தின் அடிப்படையான கொள்கையே இந்த நாமாவில் அடங்கியிருக்கின்றது. ஸாமான்ய

மான வாச்யார்த்தத்தில் "த்ரிபுரன்" என்று சொல்லப்பட்ட சிவபெருமானின் 'பத்னி' என்று பொருள் கொள்வர். லலிதா ஸஹஸ்ரநாமத்தில் மூன்று என்று (தாரயி)ஆரம்பிக்கும் நாமாக்கள் 22 இருக்கின்றன. அவை யாவற்றிற்கும் தனித் தனியே விளக்கம் கொடுப்பது ஸாத்யமல்ல. ஆயினும் அவை யாவற்றையும் திரட்டி சுருக்கமாகக் கூறலாம். திருபுரம் என்பது என்ன? மும்மூன்ருக இருப்பவைகள் எல்லாம் த்ரிபுரங்கள் எனப்படும். இதுவும் பதினெட்டு மும்மைகள் (அஷ்டாதச த்ரயம்) என்றும் கூறப்பட்டிருக்கின்றது. அவற்றில் சில: (1) வியஷ்டி ப்ரணவத்தின் அ, உ, ம என்ற மூன்று அக்ஷரங்கள் (2) ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம். (3) ப்ரம்மா, விஷ்ணு, ருத்ரன். (4) இச்சா, க்ரியா, ஞான சக்திகள். (5) ஸ்தூல ஸூக்ஷ்ம காரண சரீரங்கள். (6) மனஸ், புத்தி, சித்தம் என்ற அந்தக்கரணங்கள். (7) இடா பிங்கலா ஸுஷும்ன என்ற நாடி த்ரயம். (8) ஜாக்ரத, ஸ்வப்ன, ஸுஷுப்தி என்ற அவஸ்தா த்ரயம் என்றெல்லாம் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆயினும் சாக்த சித்தாந்தத்துக்கே ப்ரத்யோகமான த்ரயங்கள் சில உள்ளன. அவை (1)பஞ்சதாசாக்ஷரி மந்த்ரத்தின் வாக்பவகூடம், மத்யகூடம், சக்திகூடம் என்பனவும், (2) அக்னி கண்டம், சூர்ய கண்டம், ஸோம கண்டம் என்பனவும், (3) ப்ரம்மக்ரந்தி, விஷ்ணுக்ரந்தி, ருத்ரக்ரந்தி என்பனவும், (4) ஸ்ரீ சக்ரத்தின் மத்ய த்ரிகோணத்தின் மூன்று மூலைகளிலுள்ள காமகிரி பீடம், ஜாலந்தர பீடம், பூர்ணகிரி பீடம் என்பனவும், இவற்றில் இருக்கும் மஹா காமேச்வரி, மஹா வஜ்ரேச்வரி, மஹா பகமாலினி என்ற சக்திகள் மூவரும், வாமாஜ்யேஷ்டா ரௌத்ரீ ரூபமாகவும், ரஜஸ்ஸத்வ தமோகுணங்களாகவும, இச்சா ஞான க்ரியா சக்திகளாகவும் அம்பாளோடு அபின்னமாக இருப்பவர்கள். மேலும் ஸ்ரீ சக்ரத்திலேயே கோணத்ரயம், ரேகாத்ரயம், பூபுர த்ரயம் என்பவைகளும் இருக்கின்றன. இன்னும் இதுபோல எத்தனையோ உண்டு. இந்த த்ரயங்களுக்கெல்லாம் அதிதேவதையாகவும், அதிஷ்டான தேவதையாகவும் அவர்களுக்கு அப்பாலும் எஞ்சி நிற்பவளாயும், அவற்ருேடு ஒன்ருய், உடனாய், வேருய் மூன்று நிலைகளில் இருப்பவளாகவும், ஒன்பதாவது ஆவரணமாகின்ற பைந்தவஸ்தானத்தில் சிவத்தோடு இரண்டறக்கலந்து விளங்குபவளாகவும் இருப்பவளே திரிபுரசுந்தரியாகும். இதன் முழு விவரம் வேண்டியவர்கள், த்ரிபுரார்ணவம், லகுஸ்துதி, ஸ்ரீ லலிதாஸ்தவரத்னம், காளிகா புராணம், தந்த்ர ராஜம் முதலிய சாக்த தந்த்ர சாஸ்த்ரங்களைப் பார்க்க,

இனி அம்பாளுக்கு பாசாங்குசம், இக்ஷுகோதண்டம், புஷ்ப பாணம் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவையும் தத்துவ உருவகங்களேயாகும். இதனை லலிதா ஸகஸ்ரநாமத்தில் (1) ராகஸ்வரூபபாசாட்யா, (2) க்ரோதாகாராங்குசோஜ்வலா, (3) மனோரூபேக்ஷுகோதண்டா, (4) பஞ்ச தந்மாத்ரஸாயகா என்ற நாமாக்கள் விளக்குகின்றன. ஆங்கு கண்டுகொள்க. திரிபுரஸுந்தரியே அபிராமி என்று இந்தப் பாட்டில் சித்தாந்தப் படுத்துகிறார். இந்தக் கருத்தை ஒட்டி பின்னாலும் சில பாடல்கள் வருகின்றன. ஆங்காங்கு பார்ப்போம்.

---

3-ம் பாட்டு

## தான் அறிந்ததும் அனுஷ்டித்ததும்

அறிந்தேன் எவரும் அறியா மறையை அறிந்துகொண்டு
செறிந்தேன் உனது திருவடிக்கே திருவே! வெருவிப்
பிறிந்தேன் நின் அன்பர் பெருமை எண்ணாத கரும நெஞ்சால்
மறிந்தே விழு நரகுக்குறவாய மனிதரையே.

பதவுரை திருவே: தேவி!

எவரும் அறியா மறையை: ஸாமன்யர் எவராலும் அறியமுடியாத மந்த்ரத்தை (வித்தையை)
அறிந்தேன்: தெரிந்துகொண்டேன்
அறிந்துகொண்டு: அவ்வாறு அறிந்துகொண்டு
உனது திருவடிக்கே: உனது அழகியபாதங்களுக்கே
செறிந்தேன்: சரண் புகுந்தேன்
நின் அன்பர்: உன்னை உபாஸிப்பவர்களுடைய
பெருமை: மாட்சியை
எண்ணாத: சிந்திக்காத
கரும நெஞ்சால்: கர்மபடர்களாய்
மறிந்தே: தலைகீழாக
விழு: விழுகின்ற
நரகுக்கே உறவாய: நரகலோகத்துக்கு உடன்பாடான
மனிதரையே: கயவர்களையே
பிரிந்தேன்: அவர்களோடு உறவாடாது விலகினேன்

பொழிப்புரை

எவராலும் அறிய முடியாத மிக ரகசியமான உனது ஸ்ரீ வித்யா மந்த்ரத்தை அறிந்துகொண்டேன், அறிந்தபின் உன்

திருவடிகளையே தஞ்சமெனக்கொண்டு இடைவிடாது தியானம் செய்தேன். கர்மபடர்களாய் நரகத்துக்கே விழ இருக்கும் மனிதர்களின் சாவகாசத்தை விட்டொழித்தேன்.

கருத்து: கொள்ளவேண்டியது தேவியின் திருவடி தள்ள வேண்டியது கசடர்களின் நேசம் என்று பிரவிருத்தி, நிவிருத்தி இரண்டையும் கூறுகின்றார்,

விரிவுரை

முந்தினபாட்டில் இறைவியின் சொருபலக்ஷணத்தை அறிந்தேன் என்றார். இப்பாடலில் தேவியின் மந்த்ரத்தை அறிந்தேன் என்கின்றார். தேவியின் மந்த்ரத்துக்கு ஸ்ரீ வித்யை என்று பெயர். அது 12 மந்த்ர த்ருஷ்டர்களால் 12 விதமாக அமைந்திருக்கின்றது. அவர்கள்: 1 மனு, 2 சந்த்ரன், 3 குபேரன், 4 லோபாமுத்ரா, 5 மன்மதன், 6 அகஸ்தியர், 7 அக்னிதேவன், 8 சூர்யன், 9 இந்த்ரன், 10 ஸ்கந்தன், 11 சிவன், 12 துர்வாஸர். இந்த 12 மந்த்ரங்கள்: 1 பஞ்சதசாக்ஷரி, 2 ஷோடசாக்ஷரி, 3 மஹாஷோடஸி என்று மூன்று பிரிவுகளாக இருக்கும். மேலும் அவைகள் காதிவித்யை என்றும் ஹாதி வித்யை என்றும் இரண்டுவிதமாகவும் இருக்கும். காதிவித்யை என்பது "க" என்ற அக்ஷரத்தை முதலாக; உடையது ஹாதி வித்யை என்பது "ஹ" என்ற அக்ஷரத்தை முதலாக உடையது என்று பொருள். காதி வித்யைக்கு காமராஜர் (மன்மதன்) ரிஷியானதால் அதற்கு காமராஜ வித்யை என்றும் ஹாதிவித்யைக்கு லோபாமுத்ரா ரிஷியாதலால் அதற்கு லோபாமுத்ரா வித்யை என்றும் பெயர்களிடப்பட்டிருக்கின்றன. ஸௌந்தர்ய லஹரியில் சங்கரபகவத் பாதாள் 32 சுலோகத்தில் காதி வித்யையை பிரகடனம் பண்ணுகிறார்கள். 33-வது சுலோகம் பற்றி சில அபிப்பிராய பேதங்கள் உண்டு. அது ஹாதிவித்யை பிரகடனப்படுத்துகிறது என்பது சிலரது அபிப்பிராயம். தேவியின் உத்க்ருஷ்டமான மந்த்ரம் இரண்டாகக் கூறப்படுவது போலவே உபாஸனையிலும் இரண்டு விதம் முக்கியமாகக் கூறப்படுகின்றன. அம்பாளுடைய உபாஸனை பலவகைப்பட்டதாயினும் இவை இரண்டே முக்கியமாகக் கொள்ளப்படும். அவை தக்ஷிண மார்க்கம் அல்லது ஸமயமார்க்கமென்றும் வாமமார்க்கம் என்ற கௌலமார்க்கமும் ஆகும். கௌலமார்க்கத்திலும் பூர்வகௌலம், உத்தரகௌலம் என இரண்டு பிரிவுகள் உண்டு. அம்பாளுடைய பூஜையானது அந்தர்முகமாகவே செய்யப்படவேண்டும் என்றும், அதில் அம்பாளின் அம்ஸமாகிற குண்டலினீ சக்தியை மூலா

தாரத்திலிருந்து மேலே ஏறச்செய்து ஷட்சக்ரபேதனம் செய்து ஸஹஸ்ராரத்துக் கொண்டுவந்து அவ்விடத்தில் பூஜிக்கவேண்டும் என்பது ஸமயமார்க்க சித்தாந்தம். இவ்வாறு செய்ய சக்தியற்ற வர்கள் ஸ்ரீ சக்ரத்தை தங்கம் முதலிய தகடுகளில் எழுதி அதையே அம்பாளாக பாவித்து சது: ஷஷ்டி (64) உபசாரங் களையும் செய்து ஏகாக்ரமாய் மந்த்ரத்தை முறைப்படி ஜபித் தால் தங்களுடைய பாவனையின் உறுதியாலேயேகூட குண்டலினீ சக்தியை எழுப்ப முடியும் என்பது சித்தாந்தம். இந்த மாதிரி ஆராதிப்பதற்கு மிச்ரமார்க்கம் என்று பெயர். இது பஹிர்முக பூஜையாகும். கௌலர்கள் பஹிர்முகமாக பூஜை செய்வதோடு பாத்யக்ஷயோனியை பிந்து ஸ்தானமாகக் கருதுவதாலும், பூஜை யின்போது பஞ்சமகாரங்களை உபயோகிப்பதாலும் இவர்கள் நிந்தனைக்குள்ளானார்கள். ஆனால் லலிதா ஸஹஸ்ர நாமத்தில் கௌலமார்க்கம் அங்கீகரிக்கப் பட்டிருக்கின்றது.

மிகவும் மஹிமை பொருந்தியதாகையாலும், பரமபுரு ஷார்த்தமான ஜீவப்ரஹ்ம ஐக்கியமான மோக்ஷத்தைக் கொடுப்பதாலும் இந்த மந்த்ரத்தை அதிரஹஸ்யமாய் வைத் துக்கொண்டு உபாஸனை செய்யவேண்டுமென்று சொல்லப்பட் டிருக்கின்றது. பரசுராம கல்ப சூத்திரத்திலும் குலார்ணவம் என்ற தந்த்ர சாஸ்த்ரத்திலும் இதர மந்த்ரங்கள் வேசிகள் போலவென்றும் ஸ்ரீவித்யையானது குலஸ்திரி என்றும் கூறப்பட்டிருக்கின்றது. ரஹஸ்யத்திலும் பரமரஹஸ்யம் என்றும் கூறப்படுகின்றது. குஹ்யாத் குஹ்யா தரம்" என்று. இந்த உபாஸனையானது ஸாமான்யமான தபஸ்ஸினால் கிடைக்கக்கூடியதில்லை. எவனொருவனுக்கு மறு ஜன்மம் இல்லையோ அவனுக்குத்தான் இது கிடைக்கும். அதிகாரியில்லாதவர்களுக்கு இதை உபதேசிக்கக்கூடாது. இந்த வித்யை குருசிஷ்ய பரம்பரையாகவே அடையவேண்டும் அதனா லேதான் இந்த 3வது பாட்டில் "அறிந்தேன் எவரும் அறியா மறையை" என்றார். மறை என்ற சொல்லுக்கு அதிகாரியில்லா தவர்களுக்கு மறைக்கப்பட்டது என்று ஒரு பொருள். தொல் காப்பியத்தில் "நிறைமொழிமாந்தர் ஆணையிற்கிளந்த மறை மொழிதானே மந்திரம் என்ப" என்ற சூத்திரத்தின்படி இங்கு மறை என்பதை தேவியின் உத்க்ருஷ்டமான பஞ்சதசாக்ஷரி மந்தரத்தையே பொருளாகக் கொள்ளவேண்டும். அறிந்தபின் "லறிந்தேன்" என்கின்றார். செறிதல் என்ற சொல் லுக்கு அகராதியிலே "கலத்தல், குளித்தல், சேர்தல், நெருங்கு

தல், பொருந்தல்" என்ற பொருள்கள் உள. இங்கு இவை யாவையும் பொருந்தும். அனன்யசித்தத்தோடும், அம்பாளே உபாய உபேயம் என்று சரண் அடைதலை இச்சொல் குறிக்கின்றது. அம்பாளுடைய உபாஸகர்களுக்கு போகம், மோக்ஷம் இரண்டும் நிச்சயமாய்க் கைகூடும். ஜீவர்களை தாபத்ர்யங்களிலிருந்து காப்பவள் அவளே. ஸகலவிதமான பாபங்களும் அம்பாளுடைய பாதஸ்மரணத்தாலேயே நசிக்கப்படுகின்றன. ஆகவே அம்பாளைவிட உயர்ந்த தெய்வமில்லை. அம்பாளை ஆராதித்தால் ஸகல தேவர்களும் திருப்தி அடைகிறார்கள், எப்படியெனில் சகல தேவர்களும் தாம் செய்யும் காரியங்களுக்கு தம்மில் அபின்னமான சக்தியையே (ஆற்றலையே) அவலம்பித்திருக்கிறார்கள். ஸகுணத்தில் ஸகல தேவதாஸ்வரூபிணியான மஹாத்ரிபுரசுந்தரியாயும், நிர்க்குணத்தில் பரப்ரஹ்மசொரூபிணியாயும் அவள் இருக்கின்றாள். ஸகலவிதமான மங்களங்களையும் நமக்குக் கொடுக்க எப்பவும் ஆயத்தமாய் இருக்கிறாள். நாம் அவளை ஒன்றும் கேட்க வேண்டியது இல்லை. பால் நினைந்தூட்டும் தாய் போல நமது தேவைகளை அறிந்து அவள் கொடுப்பாள் நாம் செய்யவேண்டிது ஒன்றே தான். அது தான் "செறிந்தேன் உன் திருவடிக்கே" என்பது அம்பாளே சரணமென்று த்ருடபாவனையோடும் அநந்ய சித்தத்தோடும் நிஷ்காம்யமாயும் ஆராதிக்கவேண்டும். இதற்குத் தடைகளாய் இருப்பவற்றை விலக்கவேண்டும்என்று சொல்லவந்தவர், "நின் அன்பர் பெருமை எண்ணாத கருமநெஞ்சால் மறிந்தே விழுநரகுக்குறவாய மனிதரையே" என்று துஷ்டசாவகாசத்தை அடியோடுவிடச் சொல்லுகின்றார். துஷ்ட சாவகாசம் எல்லா பாபங்களையும் கொண்டுவந்து சேர்க்கும். சத்ஸங்கத்தாலேயே முக்தி கிட்டும் என்பதை சங்கரர் பஜகோவிந்தத்தில் சோபான முறையில் கூறியுள்ளார். அருணகிரியார் தமது கந்தரலங்காரப் பாடல் ஒன்றில் (88) "வணங்கித்துதிக்க அறியா மனிதருடன் இணங்கி குணங்கெட்ட துட்டனை யிடேற்றுவாய்" என்று பிரார்த்திக்கிறார். லலிதஸஹஸ்ர நாமத்தில் "துஷ்டதூரா" (193) என்பது ஒரு நாமா. அதாவது துஷ்டர்களால் அடைய முடியாதவள் என்று பொருள். அம்பாள் மீதும் அம்பாளின் அடியார்கள் மீதும் துவேஷம் கொண்டவர்களே துஷ்டர்கள். "அன்பர் பெருமையை எண்ணாத கரும நெஞ்சால் மறிந்தே விழு நரகுக் குறவாகிய மனிதர்" என்றதில் அபிராமி பட்டர் தனது சுய சரிதையில் ஓர் பகுதியைக் குறிப்பிடுகிறார் என்றே கருதுகிறேன். திருக்கடவூரில் வேதியர் குலத்தில் பிறந்த இவர் ஏனைய வைதிக அந்தணர்களைப் போல கர்மபடராய் இல்லாமல்,

அவர்கள் ஆசாரத்தைத் தழுவாமல் ஸ்ரீவித்யா உபாஸகராய் பூர்வ கௌல மார்க்கத்தை அவலம்பித்து சிறந்த அநுபூதி மானாக விளங்கினார். "அகன்றுள் அகலிடத்தார் ஆசாரத்தை என்றபடி இருந்தமையால் அவ்வூர் வேதியர்கள் அவரை வெறுத்து அவருக்குத் தீங்கு செய்யக் காத்திருந்தனர். அப்பொழுது தஞ்சையில் அரசாண்ட மஹாராஷ்ட்ர மன்னன் சரபோஜி அங்குவந்தான். பட்டர் அபிராமி சந்நிதியிலே அமர்ந்து ஏகாக்ரமாய் தியானித்து நிட்டைகைகூடி அபிராமியின் தேஜோ ரூபத்தில் மூழ்கி தன்வயமிழந்து இருந்ததையும் தன்னைக்கண்டு வணங்காமையும் கண்ட அரசன் "இவர் யார்?" என வினவினான். சமயம் பார்த்திருந்த வேதியர் இவர் சக்தி பூஜை பண்ணுகிறவர், துராசாரங்களையுடையவர், மது வருந்தி மயக்கத்தில் இருக்கிறார் என்று கோள்மூட்டிவிட்டனர். அரசன் பட்டரையணுகி "ஐயா இன்று என்ன திதி?" என்று கேட்க அம்பாளின் தேஜஸ்ஸில் ஈடுபட்டிருந்தவர் "இன்று பௌர்ணமி" என்றார். உண்மையில் அன்று அமாவாசை. அரசன் வெகுண்டு "இன்று பௌர்ணமியாயின் இரவு சந்த்ரோதயம் ஆகவேண்டும். இல்லையேல் நீர் நமது தண்டனைக்கு உள்ளாவீர்" என்று கூறினன். பட்டரோ இதுவும் தேவியின் அருள் என்று நினைத்து நெருப்பை வளர்த்து அதற்கு நேராகமேலே நூறுகயிறுகளால் தொங்கவிடப்பட்ட உறி ஒன்றை அமைத்து அதன் மீது அமர்ந்து "அபிராமி அந்தாதி என்ற பிரபந்தத்தைப்பாட ஆரம்பித்து ஒவ்வொரு பாட்டு முடிவிலும் ஒவ்வொரு கயிறாக அறுத்துக்கொண்டேயிருந்தார். 79ம் பாடல்பாடி "விழிக்கே அருள் உண்டு" என்றுமுடிக்கவும் அம்பாள்பிரஸன்னமாகி தனதுதாடங்கங்களில் ஒன்றைக்கழற்றி வானத்தில் எறிய அது பூர்ண சந்திரன்போல் எங்கும் ஒளிதர அரசனும் வேதியரும் அச்சமும் ஆச்சரியமும் ஒருங்கே அடைந்து அவரிடம் மன்னிப்புக்கேட்டுக்கொண்டனர். அரசனும் அவருக்கு "அபிராமி பட்டர்" என்ற திருநாமமும் சூட்டினான். அவருடைய பிள்ளைத்திருநாமம் சுப்பிரமணிய அய்யர் என்பது. இந்த சுய சரிதையில் கர்மபடர்களான வேதியரைத்தான் பிறிந்து வாழ்ந்ததைக் குறிப்பிடுகின்றார் என்னலாம். பிரிந்தேன் என்பது பிறிந்தேன் என எதுகைக்காக வல்லினம் போடப்பட்டிருக்கிறது.

---

5

4வது பாட்டு

## இறைவனும், இறைவியும் தன் உள்ளத்தில் நித்யவாசம் செய்ய வேண்டுதல்.

மனிதரும் தேவரும் மாயாமுனிவரும் வந்துசென்னி
குனிதரும் சேவடிக் கோமளமே! கொன்றைவார்சடைமேல்
பனிதரும் திங்களும் பாம்பும் பகீர தியும்படைத்த
புனிதரும் நீயும்என் புந்தியெந் நாளும் பொருந்துகவே.

பதவுரை.

மனிதரும்: பூலோகவாசிகளும்
தேவரும்: சொர்க்கலோகவாசிகளும்
மாயாமுனிவரும்: மயக்கமடையாத சித்தகணங்களும்
வந்து: உன் சன்னிதியை அடைந்து
சென்னிகுனிதரும்: தலைவணங்கும் சிறப்பைப்பெற்ற
சேவடி: சிவந்த அடிகளையுடைய
கோமளமே!: என்றும் இளமை வாய்ந்த அபிராமியே
என்புந்தி: எனது உள்ளத்தில்
பனிதரும்: குளிர்ந்த
திங்களும்: சந்திரனையும்
பாம்பும்: பாம்பையும்
பகீரதியும்: கங்கையையும்
படைத்த: தங்கியிருக்கும் (ஜடாபாரத்தையுடைய)
புனிதரும்: தூயவராகிய சிவபெருமானும்
நீயும்: (அவரோடு அபின்னமான) நீயும்
எந்நாளும்: எக்காலத்திலும்
பொருந்துகவே: நிலவுவீர்களாக.

பொழிப்புரை.

மனிதரும் தேவர்களும் முனிவர்களும் தலை வணங்கும் செவ்விய திருவடிகளையுடைய அபிராமியே சந்திரனையும், பாம்பையும், கங்கையையும் தனது முடிமேல் அணிந்த சிவ பிரானும் நீயும் என் உளமே புகுந்து நித்தியவாசம் செய்வீர்களாக.

விரிவுரை.

மாயா முனிவர் என்றது இறவாத முனிவர் என்று கொள்ளலாமோ எனில் தேவர்களும் இறவாதவர்களாதலால் அது பொருந்தாது. மனிதரும் தேவரும் இன்பதுன்பங்களிலே மயங்கியவர்கள். முனிவர்களோ எனில் இன்பம் துன்பம்,

வெற்றி தோல்வி, விருப்பு வெறுப்பு என்ற துவந்துவ உணர்ச்சியற்று மயங்காதவர்கள் என்று கூறலாம். அல்லது இறவாத தன்மை வாய்ந்த சித்தகணங்கள் அஷ்டமா சித்திகளை மாயா ஜாலம்போல் செய்யத்தக்கவர்கள் எனினும் கூடும். இறைவியின் பாதங்களில் தேவர்கள் வந்து தொழுவதை சங்கரர் ஸௌந்தர்யல ஹரி 29வது சுலோகத்தில் வெகு அழகாகக்கூறுகின்றார். பிரம்மா, விஷ்ணு, இந்திரன் முதலியவர்கள் அம்பாளின் சன்னதியில் தாங்கள் தங்கள் கிரீடங்களைக்கழற்றி வைத்துவிட்டு தேவியை சாஷ்டாங்கமாய் நமஸ்காரம் செய்துகொண்டிருந்த சமயம் பரமசிவன் அங்கேவர தனது பர்த்தாவை எதிர்கொண்டழைக்க அவசரமாய் அம்பாள் ஆசனத்தைவிட்டு எழுந்தாள். அவளைச்சூழ்ந்திருந்த பரிஜனங்களான சேடிகள் அம்பாளைப் பார்த்து "தாயே எதிரே இருக்கும் பிரம்மாவினுடைய கிரீடம் காலில் இடறப்போகின்றது. விஷ்ணுவினுடைய கிரீடத்தைத் தாண்டி வாருங்கள். இந்திரனுடைய கிரீடம் காலில் படப் போகிறது" என்று எச்சரிக்கை செய்கிறார்களாம். காளிதாஸன் கூறுவதைப் பாருங்கள் சியாமள தண்டகத்தில் "நமஸ்கரிக்கும் திக்பாலரது பத்னிகளின் முன்மயிர் உன் பாதநகங்களில் தோய்வதினால் அந்நகங்கள் களங்கமுடைய சந்திரன் போல் இருக்கின்றன. மேலும் உன்னை நமஸ்கரிக்கும் இந்திரன், விஷ்ணு, சிவன், வருணன், பிரம்மா, யமன், நிருதி, குபேரன், வாயு, அக்னி முதலியவர்களின் கிரீடங்களில் உள்ள மாணிக்கங்களின் ஒளி இளம் வெயில் போல் ஏற்கனவே செம்பஞ்சுக் குழம்பால் அழகுபடுத்தப்பட்ட திருவடிகளில் படிந்து அழகுசெய்கின்றது" என்று கூறப்பட்டிருப்பதை ஒப்புநோக்க. மூககவியின் பாதாரவிந்த சதகம் படித்தின்புறத்தக்கது.

செஞ்சடாடவிமேல் ஆற்றைப்பணியை, யிதழியைத் தும்பையை அம்புலியின் கீற்றைப் புனைந்த பெருமானையும் அவனோடு அர்த்தநாரியாக ஒன்றியிருக்கும் பராசக்தியையும் தன்னுள்ளத்தில் நித்யவாசம் செய்யவேண்டுமென்று இறைவியையே வேண்டுவதின் தத்துவம் சிந்திக்கற்பாலது. இறைவனையடைய இறைவியே உபாயம் என்றும், அவள் அருள் இல்லையாகில் இறைவனை அடைய முடியாதென்றும் சித்சக்தியின் அருள் முதலில் உள்ளத்தில் தோய்ந்தால் அன்றி இறையறிவு ஏற்படாதென்றும் இதனையே சைவசித்தாந்தம் "சத்தி நிபாதம்" என்று கூறும் என்பதும் மணிவாசகப் பெருந்தகை "தன்னிற்

பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு முன்னி அவள் நமக்குமுன் சுரக்கும் இன்னருள் “என்றருளிய திருவாக்கும் நமது நினைவுக்கு வருகின்றதல்லவா? இறைவன் திங்களை அணிந்தது அனுதரகூகன் என்பதைக்காட்டுகின்றது.

அவனடியில் வீழ்ந்து சரணடைந்தவர்களைத் தன் முடிமீது தாங்கிக்கொள்வான் என்ற பரம காருண்யத்தைக் குறித்து நிற்கின்றது. தலையில் தாங்குதலாவது அவர்களுடைய யோக க்ஷேமங்களைத் தன் பொறுப்பாக ஏற்றுக்கொள்கிறான் என்பதைக் காட்டும். பாம்பை அணிந்தது அவனது ஸர்வ ஆற்றலைக் காட்டுகின்றது. கங்கையைத் தாங்கியது அவனது தண்ணளியைக் காட்டுகின்றது. “சலமுகத்தால் அவன் சடையிற் பாய்ந்திலளேல் தரணியெல்லாம் பிலமுகத்தே புகப்பாய்ந்து பெருங்கேடாம்” என்பது திருவாசகம். இறைவனும் இறைவியும் சேர்ந்தே இருப்பதுதான் பூர்ணத்வம். ஆற்றல் உடையவனைவிட்டு அவன் ஆற்றலைமட்டும் பிரிக்கமுடியாது. அக்னியும் சூடும் போல இருவரும் அபின்னமானவர்கள். ஒரே வஸ்துவின் இரண்டு பரிணாமங்கள் குணகுணிஸாம்யம். இந்தத் தத்துவத்தை நமது சமயங்கள் யாவும் ஒப்புக்கொள்கின்றன. இதை சாக்த சிந்தாத்தத்தில் ஸ்ரீசக்ரத்தின் 9வது ஆவரணமாகின்ற பிந்துவில் ஜகன்மாதாவான ஸ்ரீலலிதா மஹா த்ரிபுரஸுந்தரி ஸதாசிவருடைய மடியில் வீற்றிருந்து இருவரும் அபின்னமாய்க் கலந்து இருபத்தாறுவது தத்துவமாகிய ஸாதாக்ய தத்துவமாக இருந்துகொண்டு பஞ்சப்ரம்மாக்களான பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், மஹேச்வரன், சதாசிவன் இவர்கள் தத்தம் தொழிலைச் செய்வதற்கு அவர்களை அதிஷ்டித்து இருக்கிறாள் என்று கூறப்பட்டிருக்கின்றது. இறைவனையும் இறைவியையும் அபின்னமாகவே பாவித்து உபாஸிக்க வேண்டும். இருவரும் வேறு வேறாய் வைத்து வழிபடக்கூடாது. இருவரும் சேர்ந்ததுதான் பூரணவஸ்து. அதுவே ப்ரஹ்மம். பொருந்துக என்ற சொல்லின் ஆழம் சிந்திக்கத்தக்கது. உபாஸகனின் உள்ளத்தில் அவர்கள் இணைந்து விடுவதால் உபாஸகனும் தாதாம்யம் அடைந்து சிவம், சக்தி, ஜீவன் மூன்றும் ஒன்றாகிவிடும் என்பதைக் குறிக்கின்றது.

(6)



5வது பாட்டு

## தேவியின் பாதம் என் சென்னியதே.

பொருந்திய முப்புரை செப்புரை செய்யும் புணர் முலையால்
வருந்திய வஞ்சி மருங்குல் மனோன்மணி வார்சடையோன்
அருந்திய நஞ்சமுதாக்கிய அம்பிகை அம்புயமேல்
திருந்திய சுந்தரி அந்தரி பாதமென் சென்னியதே.

பதவுரை

பொருந்திய முப்புரை: மூன்று புரங்களிலும் பொருந்தி யிருப்பவளாயும்
செப்புரை செய்யும்: கிண்ணங்களை உவமையாக உரைக்கத்தக்க
புணர் முலையால்: ஒன்றோடொன்று இணைந்த முலைகளால்
வருந்திய: வருத்தத்தை யடைந்த
வஞ்சி: வஞ்சிக்கொடி போன்று துவண்ட
மருங்குல்: இடையை யுடையவளும்
வார்சடையோன்: நீண்ட சடையையுடைய பரமசிவன்
அருந்திய: உட்ட
நஞ்சமுதாக்கியவள் விஷத்தை அம்ருதமாக்கியவளும்
அம்பிகை: உமாதேவியும்
அம்புயமேல்: தாமரை மீது
திருந்திய: விளங்குகின்ற
சுந்தரி: அழகியும்
அந்தரி: பரவெளியில் இருப்பவளுமான
மனோன்மணி: மனோன்மணி சக்தியானவளின்
பாதம்: திருவடிகள்
என் சென்னியதே: என் தலையின்கண் இருக்கின்றது.

பொழிப்புரை

மூன்று புரங்களில் பொருந்தியவளும், தங்கக் கிண்ணங்களுக்கு ஒப்பான இரு ஸ்தனபாரங்களால் துடங்கும் மெல்லிய இடையுடையவளும், நீண்ட சடைமுடியையுடைய பரமசிவன் ஆலால விஷத்தை உண்டும் சாகாமல் (அம்ருதத்வத்தை) அளித்தவளும், செந்தாமரையில் வசிப்பவளும், பரவெளியில் உறைபவளுமாகிய மனோன்மணி சக்தியின் பாதங்கள் என் தலையில் விளங்குகின்றன.

விரிவுரை

வேறு உரையாசிரியர்கள் திரிபுரை, மனோன்மணி, அம்பிகை, சுந்தரி, அந்தரி என்பனவற்றை தனித் தனி நாமமாக உரை செய்துள்ளனர். ஈண்டு அவை மனோன்மணி சக்திக்கு அடைமொழிகளாக உரை செய்யப்பட்டது. ஏனெனில் கூறுதும். மனோன்மணி சக்தி என்பவள் சாக்த சித்தாந்தப்படி ஸஹஸ்ரார கமலத்தில் சிவத்தோடு அபின்னமாய் முந்தின பாட்டின் விரிவுரையில் துலக்கியபடி இருக்கும் சக்தி. ஆக்ஞா சக்ரத்துக்கு மேல் மஹாபிந்து ஸ்தானமாகிய ஸஹஸ்ராரத்துக்குக் கீழ் பிந்து, அர்த்தசந்த்ரம், ரோதினி, நாதம், நாதாந்தம், சக்தி, வியாபிகா, சமனா, உன்மனி என்ற தத்துவங்கள் உள்ளன. இந்த உன்மனி வேறு ஸஹஸ்ராரத்தில் இருக்கும் மனோன்மணி வேறு. மூலாதாரம் முதல் ஆக்ஞை ஈறாக இருக்கும் ஆறு ஆதார சக்ரங்களை மூன்று கண்டங்களாகச் செய்து ஒவ்வொரு கண்டத்துக்கு இரண்டு இரண்டு ஆதார சக்ரங்களாக அமைக்கப் பட்டிருக்கின்றது. இடகலை, பிங்கலை என்ற நாடிகள் சுஷும்னையில் இரு பக்கங்களிலும் இடசாரி வலசாரியாக மாறி மாறிச் செல்லுங்கால் மூன்று இடங்களில் அவை இரண்டும் சுஷும்னையைச் சந்திக்கின்றன. இம்மூன்றும் சேரும் இடங்களுக்கு கிரந்தி அல்லது முடிச்சு என்று பெயர். அவை கீழிருந்து மேலாக பிரம்மகிரந்தி, விஷ்ணுகிரந்தி, ருத்ர கிரந்தி என்பன. இரண்டு கிரந்திகளுக்கு மத்தியிலிருக்கும் பாகங்களே கண்டங்கள் எனப் படும்.

அவை கீழிருந்து மேல் வரிசையில் அக்னி கண்டம், சூர்ய கண்டம், ஸோம கண்டம் எனப்படுவன. அக்னி கண்டத்தில் மூலாதாரமும், ஸ்வாதிஷ்டானமும் இருக்கின்றன. சூர்ய கண்டத்தில் மணிபூரகமும், அனாகதமும் இருக்கின்றன. ஸோம கண்டத்தில் விசுத்தியும், ஆக்ஞையும் இருக்கின்றன. இதற்கு மேல் ஸஹஸ்ராரம் என்று சொல்லப்பட்ட சிரசில் ஆயிரம் இதழ் கொண்ட தாமரையிருக்கின்றது. இது நான்காவது கண்டம். இதற்கு சந்த்ரகலா கண்டம் என்று பெயர். இந்த ஸஹஸ்ரதள பத்மத்தின் மத்ய கர்ணிகைதான் மஹாபிந்து என்ற ஸ்தானம். குண்டலினி சக்தி இங்கு வந்து மஹாபிந்துவை அடைந்த மாத்ரத்தில் அம்ருதம் பெருகும். இந்த ஸ்தானத்தில்தான் ஸதாசிவ மனோன்மணி அபின்னமாய் அர்த்தநாரியாய் இருப்பார்கள். இந்த மனோன்மணி சக்தியே மஹா திரிபுர சுந்தரி. அவளே திரிபுரை. அவளே அம்பிகை. அவளே சுந்தரி. அவளே அந்தரி. இப்பாட்டில் கூறப்படும் அம்புயமேல் திருந்திய

சுந்தரி என்பது ஸஹஸ்ரார பத்மத்தில் இருக்கும் மனோன் மணியையே, அந்தரி என்றால் தனக்கென்று வேறு ஆதாரமில் லாமல் தானே சகலத்துக்கும் ஆதாரமாக இருப்பவள் என்பது பொருள். நஞ்சை அமுதாக்கியவள் என்பதிலும் ஓர் தத்துவம் இருக்கின்றது. மூலாதாரத்தில் ஏற்படும் மூலக்கனலே ஆலால விஷம்.

அது குண்டலினீ ஸஹஸ்ராரத்தைச் சேரும்போது அமுதமாகின்றது. இந்த அமுதமே நமது சரீரத்தின் 72,000 நாடிகளையும் நனைத்து சாதகனுக்கு அம்ருதத்வத்தை அளிக்கின் றது. பாதம் என் சென்னியதே என்பதும் நமது சிரஸில் இருக் கும் ஸஹஸ்ராரத்தையே குறிக்கும். முந்தின பாட்டில், என் உள்ளத்தில் இருக்கவேண்டும் என்றார். அது அனாகத சக்ரத்தில் தகராகாசத்தில் கூத்தப் பெருமானையும், சிவகாமசுந்தரியாகவும் இருக்கும் அவசரம். ஷட்சக்ர பேதனம் செய்து குண்டலினீ ஸஹஸ்ரார கமலத்தைச் சேர்த்து சதாஸிவரோடு தாதாம்யம் அடைவதை சங்கரர் ஸௌந்தர்யலகரி 9வது சுலோகத்தில் விளக்கியிருக்கிறார். இப்பாட்டுக்கு சாக்த சித்தாந்தப்படி உரை கூறப்பட்டது. சாமான்ய உரையில் திருபுரையே, மனோன் மணியே, அம்பிகையே, சுந்தரியே, அந்தரியே உன் திருவடி என் சென்னிமீது விளங்குகின்றது என்று கூறுவர். மனோன் மணி என்றால் சதாசிவருடைய மனதிற்கு ஆஹ்லாதத்தை உண்டு பண்ணுகிறவள் என்று பொருள். வடமொழி தாதுவின்படி உன்மனி என்பது துடிப்பு, அசைவு, சலனம் என்று பொருளா கும். பரசிவத்தின் மனதில் ஓர் சலனத்தை உண்டுபண்ணுகிற வள் என்று பொருள். இதுதான் ப்ரஹ்மத்தில் சக்தி ஸ்புரிக் கும்போது ஏற்படும் துடிப்பு அல்லது Vibration என்று ஆங்கி லத்தில் சொல்லப்படும் ஸ்பந்தனம் அல்லது அசைவு. இந்த அசைவே பரநாதமாகிற பிரணவத்துக்குக் காரணம். இந்த அசைவே சிருஷ்டியின் ஆரம்பம். இந்தத் துடிப்பினாலேயே பராசக்தி பரசிவத்தை "சிருஷ்டி உன்முகமாக்குகின்றாள்" என்பர். அந்தரி என்பதை சிதாகாசப் பெருவெளியில் உறைபவள் என் றும் பொருள் கொள்ளலாம். ஈண்டு தனக்கென வேறு ஆதார மில்லாதவள் எனப் பொருள் கொள்ளப்பட்டது. சக்திக்கு ஆதாரம் சிவமல்லவோ அப்படியிருக்க ஆதாரமில்லாதவள் என்று எப்படி கூறுவது என்றால் "சிவம் சக்திதன்னையீன்றும் சக்திதான் சிவத்தையீன்றும்" என்று வருகிற சிவஞான சித்தி யார் பாடலையும், "வாயும் மனமும் கடந்த மனோன்மணி,

பேயும் கணமும் பெரிதுடைப் பெண்பிள்ளை ஆயு மறிவுங்கடந்த வரனுக்குத் தாயும் மகளும் நற்றாரமுமாமே" என்ற திரு மந்திரச் செய்யுளையும், "இமவான் மகட்குத் தன்னுடைக் கேள்வன் மகன் தகப்பன் தமையன்" என்ற திருவாக்கையும் உற்றுநோக்குவோர்க்கு இனிது புலப்படும். மேலும் சாக்த சித்தாந்தப்படி பரப்ரஹ்மமே பராசக்தி என்பதால் ப்ரஹ்மத்துக்கு வேறு ஆதாரம் இருக்க முடியாதல்லவா? திரிபுரை என்பதற்குப் பொருள் முன்பே கூறப்பட்டது. பிரபஞ்சத்தில் மும்மையாக இருக்கும் சகலமும் அவளுடைய ஸ்தானங்கள். புணர் முலையால் "ஈர்க்கிடை போகா இளமுலை" என்றார் மாணிக்க வாசகர். அம்பாளின் ஸ்தனங்கள் இரண்டும் ரக்தபிந்து, சுக்ல பிந்து என்ற தத்துவங்கள் என்று அவையே முறையே சப்த அர்த்த சிருஷ்டி ஹேது என்று சாக்த தந்த்ரங்கள் கூறும். சங்கரர் ஸௌந்தர்யலஹரி 19வது சுலோகத்தில் "ரவீந்துஸ்தந யுகாம்" என்று சூர்ய சந்த்ரர்களை அம்பாளின் ஸ்தனங்கள் என்கின்றார். அதே சுலோகத்தில் அம்பாளின் முகத்தை ஒரு பிந்துவாகவும், அதற்குக் கீழே இரண்டு ஸ்தனங்களை இரண்டு பிந்துக்களாகவும், அதாவது தமிழின் ஆயுத எழுத்துப் போல ஃ அமைத்து அவற்றிற்குக் கீழே த்ரிகோணம் வரைந்து அதன் மத்தியில் காமகலாபீஜமாகின்ற "க்லீம்" என்ற அக்ஷரத்தை எழுதி ஜபிப்பதே காமகலாத்யானம் என்றும் கூறப்பட்டிருக்கின்றது. ஸ்தனபாரங்கள் இடையை வருத்தும் என்பது காவ்ய ரஸனை. கம்பனும் பாலகாண்டம் கோலங்காண் படலத்தில் "இடையினுக்கு இடுக்கண் செய்தார்" என்றான்.

---

## 6வது பாட்டு

### உபாஸனையும் பாஹ்ய பூஜையும்

சென்னியதுன் பொற்றிரு வடித்தாமரை சிந்தையுள்ளே
மன்னிய துன்திரு மந்திரஞ் சிந்துர வண்ணப் பெண்ணே
முன்னிய நின்னடியாருடன்கூடி முறைமுறையே
பன்னிய தென்றுமுன்றன் பரமாகம பத்ததியே.

பதவுரை

சிந்துர வண்ணப் பெண்ணே: செந்நிறம் பொருந்திய திருமேனியுடைய அபிராமி தேவியே!

உன்பொற்றிருவடித்தாமரை: உன்னுடைய பொன் போற் பிரகாசிக்கும் பாதபங்கயம்

சென்னியது: (எனது) சிரசில் அமர்ந்திருக்கிறது
சிந்தையுள்ளே: என் உள்ளத்தில்
உன் திருமந்திரம்: உன்னுடைய மஹிமை பொருந்திய மந்திரம்
மன்னியது: நிறைவுற்றிருக்கிறது
முன்னிய: உன்னை இடைவிடாது தியானிக்கின்ற
நின்னடியாருடன்கூடி: சாக்தோபாஸகர்களுடன் சேர்ந்து
முறைமுறையே முறைதவறாமல் (யதோக்தமாய்)
பன்னியது: ஆராய்வது (அவலம்பிப்பது)
என்றும்: எப்பொழுதும்
உந்தன் பரமாகம பத்ததியே: பெருமை பொருந்திய
சாக்தாகமங்களில் விதிக்கப்பட்ட பூஜாவிதானமே.

பொழிப்புரை.

செந்நிறம் பொருந்திய திருமேனி யுடைய அபிராமி அம்மையே உன்னுடைய பொன் போன்று பிரகாசிக்கும் திருப்பாத கமலம் என் சிரசில் (ஸஹஸ்ராரத்தில்) அமர்ந்து இருக்கின்றது. என் உள்ளத்தில் உன்னுடைய மஹிமை பொருந்திய மந்திரம் நிறைவுற்றிருக்கிறது. உன்னை இடைவிடாது தியானிக்கின்ற சாக்தோபாஸகர்களுடன் சேர்ந்து முறை தவறாமல் ஆராய்வது எப்பொழுதும் பெருமைபொருந்திய சாக்தாகமங்களில் விவரிக்கப்பட்ட பூஜாவிதானமேயாகும்.

விரிவுரை.

சிரஸில் திருவடியும் மனதில் தேவியின் உத்க்ருஷ்டமான மந்த்ரமும், செயலில் உளது ஆகமங்களில் விதிக்கப்பட்டுள்ள பூஜாவிதானமும் என்கின்றார். பன்னியது என்பதைப் பேசுவது என்று பொருள் கொண்டு இதர சாக்த உபாஸகர்களோடு சேர்ந்து சர்ச்சை செய்வது என்று பொருள் கொண்டனர் பலர். பன்னியது என்பதற்கு ஆராய்தல் என்றும் பொருள். ஆகமங்களை ஆராய்வது என்றும் கூறலாம். பத்ததி என்றால் முறை விதானம் என்று பொருள்.

உன் திருமந்திரம்: முன்பே குறித்தபடி தேவியின் மந்த்ரம் பஞ்சதசாக்ஷரி யென்றும், ஷோடசாக்ஷரி என்று மஹா ஷோடசி என்றும் மூன்று விதமாக உள்ளது. பன்னிரண்டு மந்த்ர த்ருஷ்டர்கள் பன்னிரண்டு விதமான மந்த்ரங்களைக் கண்டிருக்கிறார்கள். அவையாவுமே மேலே சொன்ன மூன்று பிரிவில் அடங்கும். இது தவிர தேவியின் ரூபம் அனந்தம். இத்தனையென்று கணக்கிட்டுக்கூற இயலாதது

தனித்தனி மந்தரங்களும் உள. நவாக்ஷரி, ஷாடக்ஷரி, த்ரய க்ஷரி என்றெல்லாம் பல உள. மஹா கவி காளிதாஸன் இயற்றியதாகக் கருதப்படும் "லகுஸ்துதி" என்ற ஓர் அரிய சாக்த தந்த்ர சாஸ்த்ரத்தின் 18வது சுலோகம் "மாயாகுண்டலினி" என்று ஆரம்பிக்கும் சுலோகத்தின் பாஷ்யங்களில் மந்திரங்கள் ஒரு லக்ஷத்து தொண்ணூறுயிரத்து எண்ணூற்று நாற்பதாகும் என்று கூறப்பட்டிருக்கின்றது. முன்பு சொல்லப்பட்ட பஞ்சதசாக்ஷரி, ஷோடசாக்ஷரி அல்லது மஹா ஷோடசி என்ற மந்த்ரங்களில் யாதாமொன்றை குருமுகமாக தீக்ஷைபெற்று உபதேசம் பெற்று குரு வகுத்துக் கொடுத்த வழியே நின்று மந்த்ர ஜபம் செய்யவேண்டும் என்று விதிக்கப்பட்டிருக்கின்றது. குருமுகமாக உபதேசம் செய்யப்படாத மந்த்ரம் பயனை அளிக்காது. மேலும் குருமுகமாகவே பெற்றாலும் சாதகனுக்கு ஏகாக்ர சித்தம், இந்திரிய அடக்கம், சதாச்சாரம், ஸத் சங்கம் முதலிய அங்கங்கள் அவசியம் தேவை. அம்மட்டேயன்றி ஏதோ ஒரு லக்ஷம் தரம் ஜபித்துவிட்டோம் உடனே சித்தியாகிவிடும் என்று நினைப்பதும் தவறு. "தீர்க்க கால நைரந்தர்ய ஸத்காரம்" என்று கூறப்பட்டிருக்கின்றது. நீண்ட காலம் நிரந்தரமாய் உபாஸித்து வரவேண்டும்.

இவை தவிர அவரவரின் பூர்ம ஜன்ம புண்ய விசேஷமும் கூடவேண்டும். இத்தனை பொருளையும் குறிக்கத் தான் இப்பாடலில் "மன்னியது" என்ற ஆழ்ந்த கருத்துள்ள சொல்லை வைத்தார். மந்த்ரம் உள்ளத்தைப் பூரணமாக நிரப்பி வேறு யாதொன்றுக்கும் இடமில்லாத நிலையில் இருக்க வேண்டும். இதன் ஆழத்தை அறிவுடையவர்கள் சிந்திப்பார்களாக. நின் அடியார் என்றதால் சாக்தர்கள் என்று பொருள். அதாவது பராசக்தியே முழுமுதல் என்பதையறிந்து அவளை மன மொழி மெய்களால் வழிபடுவது மட்டுமேயன்றி சாக்தாகமங்களை நன்கு கற்றுத் தேர்ந்து அவற்றின்படி தீவிர சாதனை செய்பவர்கள். உன்தன் பரமாகம பத்ததியே: என்று கூறியதால் பராசக்தியின் பூஜா விதானமே சொன்னதாகக் கொள்ள வேண்டுமேயன்றி சில உரையாசிரியர்கள் சிவகாமபத்ததி என்று பொருள் செய்திருக்கிறுர்கள். தேவியின் மந்த்ரங்கள் மேலே சொன்னபடி மூன்று விதமாய் இருப்பதுபோல பூஜா முறையும் மூன்று விதமாக அமைந்துள்ளனவாயினும் குறிப்பாக இரண்டு பத்ததியே அனுஷ்டிக்கப்படுகிறது. உபாஸனுகிரமத்தில் வாம மார்க்கம் என்றும் தக்ஷிணமார்க்கம் என்றும் இரண்டு மார்க்கங்கள் இருக்கின்றன. வாம மார்க்கம் மிகக் கடுமை

யானது என்றும் தக்ஷிண மார்க்கம் சுலபமானதாலும் ஸாமான்ய உபாஸகர்கள் தக்ஷிணமார்க்கத்தையே கடைப்பிடித்து வருகிறார்கள். இந்நூல் ஆசிரியர் வாம மார்க்கத்தைக் கடைப்பிடித்தவர் என்று கூறப்படுகிறது. இது சம்பந்தமாய் இன்னும் அறிய ஆவல் உள்ளவர்கள் லலிதாஸஹஸ்ர நாமத்தின் 912வது நாமாவாகிய "ஸவ்யா பஸவ்ய மார்கஸ்த்தா" என்பதற்கு பாஸ்கரராசார்யரின் உரையைப் பார்க்கலாம். "சிந்துர வண்ணப் பெண்ணே! சென்னிய துன்பொற்றிருவடி" என்பதில் ஓர் விசேஷார்த்தம் உளது. சிந்துரம் அல்லது சிந்தூரம் என்பது செந்நிறமான சூர்ணத்தால் இடப்படும் திலகத்தையும் குறிக்கும்.

ஆதலால் இங்கு சாக்தர்கள் தங்கள் நெற்றியில் செஞ் சந்தனம் அல்லது குங்குமத்தைத் திலகமாக இட்டுக் கொள்வதையும் குறிக்கும். இதைப்பற்றி அகஸ்த்ய சூத்ரத்தில் "ப்ருவோர் மத்யே ஸ்ரீபாதுகார்ச்சன ப்ரஸாத்:" என்று இருக்கிறது. அதாவது தேவியின் பாதத்தில் அர்ச்சனை செய்யப்பட்ட குங்குமத்தை புருவமத்தியில் தரிக்க வேண்டும் என்பது. அது ப்ரகாசமாய் இருக்கும் என்பதனால் பொற்றிருவடி என்றார் பொலிவுற குங்குமம் வைத்துக்கொள்ளல். ஆயினும் அப்படி தரிப்பதில் சைவர்கள் விபூதி தாரணமும், வைஷ்ணவர்கள் நாமம் இட்டு குங்குமத்தையும் சேர்த்து வைத்துக்கொள்ள வேண்டும் என்றும் விதிக்கப்பட்டிருக்கிறது. ஏனெனில் பிறருக்குத்தான் சாக்தன் என்று தெரியாமல் இருக்கும் பொருட்டு. இதைக் குறித்து கௌலோபநிஷத்தில் "அந்த: சாக்த: பஹி: சைவ: லோகே வைஷ்ணவ:" என்று கூறியிருப்பது காண்க. இது நடைமுறையில் நம்மில் இருப்பது நிதர்சனம்.

ஸ்மார்த்தர்கள் என்ற அந்தணர்கள் விபூதி இட்டுக்கொள்வதுடன் சாக்தனுடைய குங்குமத்தையும் வைத்துக்கொள்வார்கள். ஆயினும் நித்யான்ஹிகங்களில் நாராயண நாமாக்களே கூறுவார்கள். பூஜையில் மூன்று விதம் உண்டு. பரா, பராபரா, அபரா என்று யோகினீஹ்ருதயம் என்ற நூலில் கூறப்பட்டிருக்கின்றது. ஸௌந்தர்யலஹரி 27வது சுலோகம் (ஜபோ ஜல்ப:) பாரா பூஜையை விவரிக்கின்றார். நிரந்தரமாய் சிவோஹம் பாவனை செய்கின்றவர்கள் அம்பாளே "அத்விதீய ப்ரஹ்மம்" என்றும், எக்காரியத்தைச் செய்தாலும் அது ப்ரம்ஹார்ப்பணம்

என்றும், தனது மனோ வாக்காயங்களால், சுபாவமாகவே செய்யும் காரியங்கள் அதாவது நடத்தல், சாப்பிடுதல், படுத்தல், பேசுதல், கைகளால் செய்யப்படும் சில்பம், ராயஸம் போன்ற சகல காரியங்களும் அம்பாளுக்குச் செய்யும் பூஜையாக திடமாக நினைத்தல் பரா பூஜையாகும். இவர்களுக்கு பாஹ்ய பூஜையாவது அதன் க்ரியைகளாவது, அவைகளைச் செய்ய தேவையான சாமக்ரியைகளை சம்பாதிக்கும் சிரமம் கிடையாது. அபரா பூஜை யென்பது பூஜா திரவியங்களை சேகரித்துக் கொண்டு அம்பாளின் விக்ரஹத்தையோ, ஸ்ரீசக்ரத்தையோ, மேருவையோ வைத்துக்கொண்டு அதற்கு அபிஷேக அலங்காராதி ஸகல உபசாரங்களையும் செய்து வழிபடுவது. இவர்கள் மந்த்ரம் உபதேசம் பெற்றவர்களாக இருக்க வேண்டியதுகூட அவசியமில்லை. இதைத்தான் சாமான்யர்கள் செய்துவருகிறார்கள். பராபரா பூஜை என்பது ஆந்தர் பூஜையாகிற மந்த்ரோபாஸனையும், ஆகமபத்ததிப்படி கலஸ ஸ்தாபனம், சாமான்ய விசேஷ அர்க்கியங்கள், அங்கந்யாஸ கரந்யாஸங்கள், ஆஸன பூஜை, கண்டா பூஜை, திக்பந்தனம், தேஹரக்ஷை, பிராண பிரதிஷ்டை, முத்ரைகள், ஆவரண விவரங்கள், ஆவரண தேவதைகள், அந்த தேவதைகளின் மந்தரங்கள் இன்னும் இதுபோன்ற அநேக விஷயங்களோடு செய்யப்படும் பாஹ்ய பூஜையாகும்.

ஸ்ரீவித்யோபாஸனைக்கு மந்த்ரம், சக்ரம், பூஜை என்று மூன்று அங்கங்கள் உண்டு, மந்த்ரம் என்பது ஸ்ரீவித்யா பஞ்சதசாக்ஷரியாகும். இது ஸௌந்தர்ய லஹரி "சிவ: சக்தி: காம:" என்ற 32வது சுலோகத்தில் கூறப்பட்டிருக்கின்றது. சக்ரம் என்பது ஒன்பது ஆவரணங்களோடு கூடிய ஸ்ரீசக்ரம் பூஜை என்பது ஆகமங்களில் கூறியபடி செய்வது. இது நமதாச்சார்யாள் மடத்தில் நடந்து வருகின்றது. இதுதான் "உன்தன் பரமாகம பத்ததி" என்பதால் குறிக்கப்படுகின்றது. இப் பாடலுக்கு இவ்வளவு விரிவுரை தேவையில்லை யென்றோ, வலிந்து பொருள் கொண்டதாகவோ சிலர் கருதவும் கூடும். சாக்த சித்தாந்தம் அறிந்தவர்களும் அறிய ஆவல் உள்ளவர்களும் அவ்வாறு கருதமாட்டார்கள் என்று நம்பியே எழுதப்பட்டது.

(8)

7வது பாட்டு

ததியுறு மத்திற் சுழலுமென் ஞவி தளர்வில தோர்
கதியுறு வண்ணம் கருது கண்டாய் கமலாலயனும்
மதியுறு வேணி மகிழ்நனும் மாலும் வணங்கியென்றும்
துதியுறு சேவடியாய்! சிந்துரானன சுந்தரியே.

பதவுரை

கமலாலயனும்: தாமரையைத் தனது இருப்பிடமாகக் கொண்ட பிரம்மாவும்
மதியுறு வேணி மகிழ்நனும்: சந்திரனை உடைய சடையையுடைய உனது கணவனும்
மாலும்: மஹாவிஷ்ணுவும்
துதியுறு சேவடியாய்: துதிக்கின்ற செவ்விய திருவடியுடையவளே!
சிந்தூரானன சுந்தரியே: குங்கும திலகம் அணிந்த திருமுகம் அமைந்த அழகியே!
ததியுறு மத்திற் சுழலும்: தயிரில் இடப்பட்ட மத்துப்போல மாறி மாறிச் சுழலும்
என் ஆவி: எனது உயிர்
தளர்விலாத: வருத்தம் சிறிதும் இல்லாத (பேரானந்தமான)
ஓர்: ஒப்பற்ற
கதி: மோக்ஷம், வீடு, சாயுஜ்யம்
யுறுவண்ணம்: அடியேன் அடையும்படி
கருதுகண்டாய்: திருவுளம் பற்றவேண்டும்.

பொழிப்புரை

பிரம்மா, பரமசிவன், திருமால் முதலியோர் துதி செய்து வணங்கும் செவ்விய திருவடியும் குங்குமத்திலகமிட்ட திருநுதலும் அமைந்த பேரழகியே, என் உயிர்மத்தினுல் அலைக்கப்பட்ட தயிர் போல் நிலையில்லாமல் அல்லல்படுகிறது. அதை நிலைபெற்ற சாயுஜ்யத்தில் சேர்க்க நீ திருவுளம் கொள்ளவேண்டும் என்று பிரார்த்திக்கின்றார்.

விரிவுரை

பராசக்தியின் அதிஷ்டானம் இல்லாவிடில் பஞ்ச ப்ரம்மாக்கள் என்ற பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், மகேச்வரன், ஸதாசிவன்

தத்தம் தொழிலைச் செய்ய இயலாது. சக்தியற்றவன் எவ்வாறு தொழிலைச் செய்யமுடியும்? இதன் காரணமாக சாக்த தந்த்ரங்களில் இவ்வைவரும் "ப்ரேதங்கள்" என்றே கூறப்பட்டிருக்கின்றன. மேலும் இவர்களில் பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், ஈசானன் ஆகிய நால்வரும் அக்னிமூலை துவக்கமாக நான்கு கால்களாகவும், சதாசிவன் மேல் பலகையாகவும் உடைய கட்டிலில் பராசக்தி பரப்ரம்ஹத்தோடு அர்த்தநாரியாக அமர்ந்திருப்பதாகச் சொல்லப்படுகின்றது. அதனால் லலிதா ஸஹஸ்நாமாவில் (58) பஞ்சப்ரும்ஹாஸன ஸ்திதா என்றும் (249) பஞ்சப்ரேதாஸனாசீநா என்றும் (947) பஞ்சப்ரேதமஞ்சாதி சாயினீ என்றும் சொல்வதோடு அம்பாளே பஞ்சக்ருத்யங்களையும் செய்பவள் (274) என்றும் பஞ்சப்ரும்ஹ ஸ்வரூபிணி என்றும் கூறப்பட்டிருக்கின்றது. ஸத்ய ஞானனந்த லக்ஷணங்களையுடையவரும், நிற்விகார, நிருபாதிக, நிர்விசேஷமாயும் பிரகாசிக்கும் சிவம் தன்னிலின்றும் பிரவிலா சக்தியுடன் சேர்ந்தே பஞ்ச க்ருத்யங்களைச் செய்பவர் என்றும், அதனாலேயே சமஷ்டி ரூபத்தில் ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்யோஜாதம் என்ற ஐந்து முகங்களையுடையவராயும், வியஷ்டி ரூபத்தில் பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், ஈசானன், சதாசிவன் என்ற பஞ்ச பிரமாக்களாக பரிணமிக்கிறார் என்றும், அவர்கள் செய்யும் பஞ்ச க்ருத்யங்களும் சக்தியின்றேல் செய்யமுடியாதாகையால் அவரவர்கள் தத்தம் தொழிலைச் செய்ய சக்தியை துதித்து வணங்கி பிரார்த்திக்கிறார்கள் என்று கூறப்பட்டது.

மேலும் அறிய விரும்புவோர் துர்வாஸர் அருளிய ஸ்ரீ லலிதா ஸ்தவரத்னம் என்ற கிரந்தத்தின் சுலோகங்கள் 148 முதல் 160 முடிய உள்ள சுலோகங்களைப் பார்க்க.

ததியுறுமத்து என்றதை விரிப்போம்: தயிர் கடைவதற்காக தயிர்ப் பானையில் இடப்பட்டு கயிற்றினால் இழுக்கப்பட்டு இடசாரி வலசாரியாகச் சுழலும் மத்து. இங்கு பிரபஞ்சமே தயிர்ப் பானை. மத்து என்பது ஜீவன். நல்வினை, தீவினை இரண்டும் கயிற்றின் இரு நுனிகள். அபிராமியே தயிர் கடையும் சிற்றிடைச்சி. தயிர் உடைந்து வெண்ணெய் திரண்டு மோருக்கும் வெண்ணெய்க்கும் சம்பந்தம் இல்லாமல் விலகும்போது கடைதலும் நிற்கும். மத்து ஒருபடித்தாய்ச் சுற்றாது, மாறி மாறிச் சுற்றும். பிரபஞ்ச வாழ்க்கையிலே மத்தாகிய ஜீவனானது நல்வினை தீவினைகளால் மாறி மாறி சுற்றுகின்றது. "அறம் பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டி" என்பது தமிழ்மறை. அம்பிகையின் கருணா விலாசமே திரோபவ சக்தியாகி பிரபஞ்சத்தில் மாறி மாறிப்

பிறக்கச்செய்து பிரபஞ்சு நீங்கி தயிர் உடைந்து மோராகி வெண்ணெய்யும் திரண்டுவிட்டது போல் ஜீவன் பக்குவ நிலையடைந்தால் மோரில் ஒட்டாத வெண்ணெய்போல், பானையிலே கிடந்தாலும் தனித்திருக்கும். அப்போது கடைவது நிற்கும். பக்குவ நிலை கண்டு கடைதலை நிறுத்துபவளும் அபிராமியேதான். பக்குவம் வரக் கடைபவளும் அவளேதான். ததியுறு மத்து ஓர் அழகான உவமையணி.

இந்தக் கருத்தை அனுசரித்தே முருகனை "வள்ளி பதம்பணியும் அதிமோக தயாபரன்" என்று கூறியுள்ளார். சிருஷ்டியாதி க்ருத்யங்களைச் செய்யும் பஞ்ச ப்ரம்மாக்களும் சக்தியின் அதிஷ்டானத்தாலேயே செய்கிறார்கள் என்பது பல சாஸ்த்ரங்களில் கூறப்பட்டும் இருக்கின்றது. விரிவஞ்சி விடுத்தனம்.

தளர்விலதோர்கதி என்பதில் தளர்வு என்பதற்கு நெகிழ்ச்சி, இளக்கம், வருத்தம் என்ற பொருள்கள் உண்டாதலால் இவை யாவும் அறவே அற்ற சாஸ்வத நிலையைக் குறித்தது. அதுவே ஜீவப்ரம்ஹ ஐக்கியமாகிற சாயுஜ்ய நிலை. ஆன்மாவும் சிவமும் இரண்டறக் கலத்தல். அவ்வாறு கலந்த உயிருக்கு இறப்பு, பிறப்பு, வருத்தம், விஷயாதி சுக துக்கங்களில் ஈடுபடுதல் முதலிய உபாதிகள் இருக்க நியாயமில்லை. சிந்தூரானன சுந்தரி என்பதைப் பொது இலக்கணமாகக் குங்குமம் போன்ற சிவந்த முகலாவண்யமுடையவள் என்றே கூடக் கூறலாம். மேலே சேவடி என்றதனால் திருப்பாதங்களும் செந்நிறம் முகமண்டலமும் செந்நிறம் என்பது பொருந்தும். சக்தி சிவத்துக்குத் தாயாரும் ஆவள் என்பதை முன்பே குறிக்கப்பட்டது.

சுபாவமாக உயிருக்கு உண்டான தாப த்ரயங்களிலிருந்து காப்பாற்றி நிலைபெற்ற இன்பத்தைத் தந்தருளுமாறு பிரார்த்திக்கின்றார். இதனை ஸஹஸ்ர நாமத்தில் (357) "தாபத்ரயாக்னி ஸம்தப்த ஸமாஹ்லாதன சந்த்ரிகா" என்ற நாமா கூறுகின்றது. அதாவது தாபத்ரயங்களால் பொசுக்கப்படும் ஜீவனை அம்பாள் தன் கருணையாகிற நிலவினால் அவனுடைய தாபத்தைப் போக்கி ஆனந்தத்தை அளிக்கிறாள் என்பது.

8-வது பாட்டு

## துர்க்கா தியானம்

சுந்தரி எந்தை துணைவிஎன் பாசத்தொடரையெல்லாம்
வந்தரி சிந்துர வண்ணத்தினுள் மகிடன் தலைமேல்
அந்தரி நீலி அழியாத கன்னிகை ஆரணத்தோன்
கந்தரி கைத்தலத்தாள் மலர்த்தாள் என் கருத்தனவே

பதவுரை

சுந்தரி: நிகரற்ற அழகுடையவள்
எந்தை துணைவி: என் தந்தையாகிற சிவபிரானின் மனைவி
என் பாசத்தொடரையெல்லாம்: சங்கிலித்தொடர்போல அநாதி காலமாய்ப் பற்றிப் பிணிக்கும் மும்மலங்களாகிற பாசங்கள் யாவற்றையும்
வந்து+அரி: தானே கருணையினால் வந்தருளி அழித்தவள்
சிந்துர வண்ணத்தினால்: குங்குமம்போன்ற செந்நிறத் திருமேனி யுடையவள்.
மகிடன் தலைமேல்: மஹிஷாசுரனது சிரஸின் மீது நின்று
அந்து+அரி: (எனது) தீமையை அழித்தவள்
நீலி: நீலநிறத் திருமேனியுடையவளும்
அழியாத கன்னி: கன்னிகழியாதவளும்
ஆரணத்தோன்: பிரம்மா (வால் விதிக்கப்பட்ட)
கந்து + அரி கைத்தலத்தாள்: கட்டை அழிப்பவள் என்பதைக் காட்டு அபய முத்திரையுடையவளும் ஆகிய அபிராமி அம்மையின்
மலர்த்தாள்: பாதபங்கயங்கள்
என் கருத்தனவே: என் உள்ளம் குடிகொண்டது

பொழிப்புரை

நிகரற்ற அழகுடையவளும், என் தந்தையாகிய சிவபெருமானுக்கு மனைவியாயும், சங்கிலித்தொடர்போல் அநாதி காலமாய் என்னைப் பற்றியிருக்கும் மும்மலங்களாகிற பாசத்தளைகளை, தானே கருணையினால் வந்தருளி அழித்தவளும், குங்குமம் போன்ற நிறத்தையுடையவளுமான அபிராமவல்லி மஹிஷாசூரன் தலைமீது நின்று எனது தீமையெல்லாம் அழித்தவளும், நீலநிறத்திருமேனி யுடையவளும், கன்னிகழியாத பிரம்மச்சார்ணியாயிருப்பவளும் எனக்கு பிரம்மனால் விதிக்கப்பட்ட கட்டை அறுப்பவள் என்று காட்டும் அபய முத்திரையுடைய திருக்கரத்தையுடையவளுமான

துர்க்காதேவியாக வந்து அவளுடைய திருப்பாத கமலங்கள் என் உள்ளத்திலே நித்திய வாசம் செய்கின்றன. அதாவது அபிராமியே துர்க்கையாவாள்.

விரிவுரை

இந்தப்பாட்டில் ஆசிரியர் அபிராமாம்பிகாவை துர்க்கையாக வர்ணித்திருக்கிறார். அம்பிகையின் ரூபங்கள் அனந்தம். உலகத்தைப் படைத்துக் காத்து அழிக்கும் க்ருதயங்களுக்குத் தக்கபடியும், அந்தந்த ஸ்தானங்களுக்குத் தக்கபடியும், அம்பாளிடம் பிரார்த்திக்கும் பலன்களுக்குத் தக்கபடியும் ரூபபேதங்கள் எண்ணிக்கையற்றன. ஆயினும் அவற்றில் துர்க்கா, லக்ஷ்மி, சரஸ்வதி என்ற மூன்றே பிரதானமானவை. அம்பாளின் ரூபபேதங்களுக்குத்தக்க நிறம், வஸ்த்ரம், ஆபரணம், ஸ்தானம், பீடம், கரங்கள், ஆயுதங்கள் முதலியன ஆகம சாஸ்த்ரங்களில் கூறப்பட்டிருக்கின்றன. பரமேச்வரருடைய சக்தி ஒன்றேதான். விநியோகத்தில் போகேச பவானி, புருஷேச விஷ்ணு: கோபேச காளீ ஸமரேச துர்கா என்று கூறப்பட்டிருக்கின்றது. இப்பாட்டில் "சிந்துரவண்ணத்தி" என்று கூறினவர் அடுத்த வரியிலேயே "நீலி" என்று கூறுகின்றார். அம்ஸுபேதாகமத்தில் "ஸ்யாச்ச்யாமநிபர்" என்றும் ஸுப்ர பேதாகமத்தில் "ஸ்யாமவர்ணும்" என்றும் கூறப்பட்டிருகின்றது. பராசக்தி சிவத்தின் விமர்ஸ சக்தியாதலாலே அவளுடைய சுபாவநிறம் சிவப்புத்தான். ஆனால் அவள் துர்கையாக ஆவிர்பவிக்கும் அவசரத்திலே "நீலி"யாகக் கூறப்பட்டிருக்கிறாள். "சியாமளாங்கீம்" "சியாமாயா" என்றெல்லாம் வர்ணிக்கப்படுகிறாள். மஹிடன் தலைமேல் அந்தரி. ஆதமங்களிலும் சில்ப சாஸ்திரங்களிலும் துர்கை ஓர் எருமை மாட்டின் தலை மீது சமபாதகமாக நிற்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. பூர்வகாரணுகமத்திலும், ஸப்ரபேதாகமத்திலும் "மஹிஷஸ்ய சிரஸ்திதாம்" என்று வருகின்றது. ஆலயங்களில் சிவமூர்த்தியின் கோவில் வடக்குப்புற சுவற்றில் கோமுகிக்கு மேல் துர்க்கா தேவியின் திருவுருவத்தை தரிசிக்கலாம். சங்கு, சக்கரம், அபயம், வரதம் என்ற நான்கு திருக்கரங்களும், கரண்டமகுடமும், பருத்த ஸ்தனங்களும், திருவடியின் கீழ் மஹிஷனுடைய தலையும் இருக்கும். துர்காதேவிக்கே ஒன்பது பேதங்கள் இருப்பதாக ஆகமங்கள் கூறுகின்றன. இவள் மோக்ஷ பிரதாயினி என்றும், சத்ருவிநாசினியென்றும் ஜீவர்களின் சகல அரிஷ்டங்களையும் போக்குபவள் என்றும் அதனாலேயே அவளுக்கு "துர்கை" என்ற பெயர் உண்டாயிற்று என்றும் கூறுப.

"துர்கா தாரயஸே துர்கே தத்வம் துர்கா ஸ்ம்ருதா ஜனை" அழியாதகன்னி என்பதுவும் துர்கைக்கே பொருந்தும் துர்கா அவசரத்தில் அவள் கல்யாணம் ஆகாத ப்ரம்ஹசாரிணி அதனால்தான் கன்னி என்றுமட்டும் சொல்லாமல் அழியாத கன்னி என்றார் கன்னி விவாகமாயின் கன்னி கழிந்தவளாகிவிடுவாள் இவள் எப்போதுமே பிரமசாரிணியாதலால் அழியாத கன்னி என்றார். ரூபமண்டனத்தில் "க்ஷேமங்கரீ ததாநாம க்ஷேமா ரோக்யப்ரதாயினி" என்பதால் அவளுக்கு க்ஷேமங்கரி என்ற திருநாமம் உண்டு. சில்பசங்க்ரஹத்தில் துர்கை என்ற மூர்த்தம் ப்ரம்மா, விஷ்ணு, ருத்ரன் மூவரும் தமது உக்ரரூபரங்களை ஒருங்கே உடையது என்று கூறுகிறது. ஆரணத்தோன் கந்தரி கைத்தலத்தாள்" என்பது கம்+தரி+கைத்+தலம் என்று பிரித்து பிரம்மாவின் மண்டைஓட்டைக் கையில் தரித்தவள் என்று பொருள் கொள்கின்றனர். ஆயினும் தந்து + அரி + கை + தலத்தாள் என்பது கட்டை அழித்ததைக் காட்டும் அபயமுத்ரையுடைய கையை உடையவள் என்பது மிகப் பொருத்தம். ஆரணத்தோன் தந்து என்பது பிரம்மனால் படைக்கப் பட்ட உடலாகிய பந்தம் அல்லது கட்டு துர்கைக்கு அபயஹஸ்தம் உண்டென்பது "சதுர்புஜெச வாமேது சங்கம்" வரத ஹஸ்தகம்! சக்கரம் ச அபயஹஸ்தம் தக்ஷிணே து ஸமாயுதா!! என்று பூர்வ காரணாகமத்திலும் "அபயம்தக்ஷிணம் ஹஸ்தம் கடகம் வாமஹஸ்தகம்" என்று அம்சுமத் பேதாகமத்திலும் இதர ஆகமங்களிலும் கூறப்படுகின்றது. நமோ அஸ்து வரதே க்ருஷ்ணே குமாரி ப்ரம்ஹசாரிணி.....தான் வை தாரயதே பாபாத்பங்கே காமிவ துர்பலாம்" என்று துர்கா ஸ்தோத்ரம் கூறுகின்றது. சேற்றில் விழுந்த பசுவைக்காப்பதுபோல் பிரபஞ்சம் என்னும் சேற்றில் விழுந்த உயிர்களை (பசுக்களை) காப்பாற்றுபவள் துர்கை. மஹிஷன் தலைமீது நிற்பது உயிர்களின் பாசங்களைப்போக்க என்பதும் "த்ரைலோக்ய ரக்ஷணார்த்தாய மஹிஷாசுர நாசினி" என்பதால் அறியலாம். இந்த அரிய தத்துவங்களையெல்லாம் அமைத்து இந்தப் பாட்டில் அபிராமாம்பிகையை துர்கையாக தியானம் செய்கின்றார். பரமசிவனின் பத்னியாகிய அம்பிகையே துர்கையாக வரும்போது அவள் நித்ய ப்ரம்ஹசாரிணியாக இருக்கிறாள் என்பதை "எந்தைதுணைவி" என்றும் "அழியாத கன்னிகை" என்று கூறியிருக்கும் நயம் சிந்திக்கத்தக்கது. ஸாமான்ய உரையில் "அகிலாண்ட கோடியீன்ற அன்னையே பின்னையும் கன்னி என மறைபேசும் ஆனந்த ரூப மயிலே" என்றும் கூறலாம். அம்பாள் ப்ரக்ருதி ரூபமாகையாலே "Virgin Nature" என்று கூறுவது போல என்றும் கன்னியாகவேயிருக்கிறாளாம். துர்கையின் தூம்

ஒன்றில்“பானபாத்ரம்” “ரக்தபாத்திரம்”என்று ஒன்று இருப்பதாக ஆகமங்கள் கூறுகின்றன. ஆயினும் அது ப்ரம்ம கபாலம் என்று கூறினதாகத் தெரியவில்லை. இருந்தாலும் அருப நிலையிலே அப்பனும் அம்மையும் அபேதமாகையாலே உருவ நிலையிலும் அப்பன் கையில் இருக்கும் பிரம்ம கபாலம் அம்மை கையிலும் இருப்பதாகச் சொல்வதில் குற்றம் ஒன்றும் இல்லை. காச்யப சில்பத்தில் 48-வது படலம் 15-வது சுலோகத்தில் துர்காலக்ஷணம் கொடுக்கப்பட்டிருக்கின்றது. அங்கு “சியாமநிபா” (பச்சைமேனி) “அபயம்தக்ஷிணே” (வலது கை அபயம்) என்றும் வருகின்றது.

---

9வது பாட்டு

## அம்மே! என் முன்னே வா!

கருத்தன எந்தைதன் கண்ணன வண்ணக் கனகவெற்பிற்
பெருத்தன பாலழும் பிள்ளைக்கு நல்கின பேரருள்கூர்
திருத்தன பாரமும் ஆரமும் செங்கைச் சிலையுமம்பும்
முருத்தன மூரலும் நீயும் அம்மே வந்தென் முன்னிற்கவே.

பதவுரை

எந்தைதன்: என் அப்பனை சிவபெருமானின்
கருத்தன: உள்ளத்தில் தங்கியிருப்பதும்
கண்ணன: அவர் கண்முன் தோன்றுவதும்
வண்ணக் கனகவெற்பிற்: அழகிய பொன்மலையாகிய மேருவைப் போல்
பெருத்தன: பருத்தனவாயும்
பாலழும் பிள்ளைக்கு: பால்வேண்டியழுத பிள்ளைக்கு
நல்கும்: பாலை ஈந்த
பேரருள்கூர்: வரையாது வளங்கும் அருள்சொரியும்
திருத்தனபாரமும்: அழகிய முலைகளும்
ஆரமும்: மார்பில் துலங்கும் முத்துமாலையும்
செங்கை: சிவந்த கைகளில் தாங்கும்
சிலையுமம்பும்: கருப்பு வில்லும் புஷ்பபாணங்களும்
முருத்தன மூரலும்: பற்களின் வெண்மை நிறம் காட்டும் புன்சிரிப்பும் கூடியவளாய்
அம்மே!: தாயே!
வந்தென்முன் நிற்கவே: அடியேனுக்கு முன்வந்து காட்சியருளல் வேண்டும்.

பொழிப்புரை

என் தந்தையான சிவபெருமானின் உள்ளத்தில் எப்போதும் தங்கியிருப்பனவும், அவர் கண்ணால் கண்டு மகிழ்வனவும், பொன் மயமான மேருமலை போல் பருத்தனவும் பால் வேண்டி அழுத (முருகப் பெருமானுக்கு) பிள்ளைக்கு பாலை அளித்து வரையாது வழங்கும் அருள் பால் சொரியும் அழகிய முலைகளும், அவற்றில் துலங்கும் முத்துமாலையும் சிவந்த கைகளில் தங்கும் கருப்பு வில்லும் புஷ்ப பாணங்களும், பற்களின் வெண்ணிறம் சிறிது காட்டும் புன்முருவலும் கூடியவளாய் அடியேன்முன் தோன்றிக் காட்சியருளல் வேண்டும்.

விரிவுரை

எந்தை கருத்தன கண்ணன்: என்ற கருத்தை குமரகுருபரர் மீனுக்ஷியம்மை பிள்ளைத்தமிழ் 62வது பாடலில் "எறிதரங்கம் உடுக்கும் புவனங்கடந்து நின்ற ஒருவன் திருவுள்ளத்தில் அழகு ஒழுக எழுதிப் பார்த்திருக்கும் உயிரோவியமே" என்று அழகுபடக் கூறியிருப்பது நினைவுக்கு வருகிறது. இதில் ஓர் தத்துவ ரகசியம் உள்ளது. உபாதிரஹிதமான ப்ரம்ஹம் நான் ஜகத்தை சிருஷ்டிப் பேன் என்று நினைத்தது. "தத்ஈக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயேயஇதி" (சாந்தோக்யம்) "ஸஈக்ஷத லோகாந்து ஸ்ருஜா இதி" (தைத்திரீயம்) இவ்வாறு நினைத்ததால் அதற்கு "அஹம்" என்ற பாவம் உண்டா னது. இதற்கு அஹந்தாஸ்புரணம் என்று சொல்லுவது. இதுவே சக்தியின் பிறப்பாகும். இறைவனுடைய சங்கல்ப மாத்திரத்தில் தோன்றியவள் ஆதலால் அவளுக்குச் சித்சக்தி யென்றும் பெயர். ஆகவே சிவத்தின் கருத்தில் தோன்றியவள் என்பதையே "கருத்தன" என்று சொல் சூசிப்பிக்கின்றது. அறிவாகிய அக்னி குண்டத்தி லிருந்து தோன்றிய பரப்ரம்ஹ ஸ்வரூபிணியாதலால் அவளை "சிதக்னிகுண்ட ஸம்பூதா" என்கின்றது ஸஹஸ்ரநாமம். இதற்குப் புராண ரீதியாய் வேறு வரலாறும் உண்டு. "புரமதிது: ஆஹோ புருஷிகா" என்கின்ருர் சங்கரர். த்ரிபுராந்தகனுன பரமசிவ னுடைய அஹங்கார ரூபிணியே பராசக்தி எனபது. பாலமுழும் பிள்ளைக்கு நல்கின என்பதற்கு திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்கு திருமுலைப்பால் ஊட்டியதைக் குறிக்கும் என்பர். ஆனல் சம்பந்தர் பாலுக்கு அழுகவில்லையாதலால் பாலமும் பிள்ளை என் பது பொருந்துமோ என்ற ஐயப்பாடு உள்ளது. சரவணப் பொய் கையில் தோன்றி பாலுக்கு அழுதவர் முருகப் பெருமானல்லவா. கந்தர் அலங்காரம் 5வது பாட்டிலும், 81வது பாட்டிலும் சொல்லு வது காண்க. மேலும் பகழிக்கூத்தர் திருச்செந்தூர் முருகன் பிள்ளைத் தமிழில் "எள்ளத்தனை வந்துறு பசிக்கும் இரங்கிப் பரந்து சிறுபண்டி எக்கிக் குழைந்து மணித்துவர்வாய் இதழைக் குவித்து விரித்தழுது" என்பதையும் பார்க்க. கந்த புராணம் உற்பத்தி காண்டம் சரவணப் படலத்தின் 23வது பாடலிலும் அம்பிகை முருகனுக்குப் பால் கொடுத்ததைக் கூறப்பட்டிருக்கின்றது. சங்கர ருடைய ஸௌந்தர்ய லஹரியின் 72 முதல் 75 முடிய நான்கு சுலோகங்களில் அம்பாளின் ஸ்தனங்களின் மஹிமைக் கூறுகிருர். அவற்றில் 72வது சுலோகத்தில் முருகனுக்குப்பால் கொடுத்ததையும் 75ல் சம்பந்தருக்குப்பால் கொடுத்ததையும் வர்ணிக்கிருர். ஸ்தனத் தில் பால் சுரத்தல் தாய்மையின் அன்பைக்குறிக்குமாதலால் பேரருள்கூர் திருத்தனபாரம் என்ருர் ...

என்பதோடு அம்பிகையின் பாசாங்குசமும் சேர்த்துக்கொள்ள வேண்டும். அம்பாளின் ஆயுதங்களை பரிவார தேவதைகளாகவும் அவர்களுக்குத் தனி பீஜாக்ஷரங்கள் இருப்பதாகவும் கூறுவது சாக்த சித்தாந்தம். அதாவது அவற்றிக்கு ஸ்தூலஸூக்ஷ்ம பரரூபங்கள் என்ற ரூபபேதங்கள் உண்டு ஸ்தூல ரூபத்தில் பசாங்குசம் இக்ஷுகோதண்டம் புஷ்பபாணம் என்பன. அவற்றின் பரஸ்வரூபமானது லலிதா ஸகஸ்ரநாமத்தில் ராகஸ்வரூப பாசாட்யா-க்ரோதாகார அங்குசோஜ்வலா-மனோரூபேக்ஷு கோதண்டா-பஞ்சதன்மாத்ரஸாயகா என்றதில் கூறப்பட்டது. ஸூக்ஷ்மரூபம் அவைகளின் பீஜாக்ஷரங்களும் சக்திகளும். அக்ஷரங்களை குருமுகமாக அறியவும். அல்லது தந்த்ரராஜதந்த்ரம்-பரசுராம கல்பசூத்ரம் முதலிய பூஜாவிதானங்கள் அடங்கிய நூல்களில் பார்க்கவும். அவற்றின் தேவதைகள் பாசத்துக்கு அச்வாரூடாவும் அங்குசத்துக்கு சம்பத்கரியும், வில்லுக்கு மந்த்ரிணியும், பாணத்துக்கு தண்டநாதாவும் அதிதேவதைகள் என்று பாஸ்கரரார்யர் தமது பாஸ்யத்தில் கூறியுள்ளார். இப்பாட்டில் பாசாங்குசத்தை நீக்கி தனுஸையும் பாணங்களையும் மட்டும் கூறுவதிலும் ஓர் சம்பிரதாயம் உண்டு தூர்வாஸர்லலிதாஸ்தவரத்னத்தின் 190வது சுலோகத்தில் "குஸும பாணமில்லாதவர்களும், கரும்பு வில் இல்லாதவர்களும், சந்த்ர கலையை சிரஸில் தரிக்காதவர்களும் இவ்வுலகத்தில் தேவதைகள் என்று தம்மை நினைத்துக் கொண்டிருப்பவருமான பிறதேவதைகளால் அடைந்த பலன் போதும் போதும் என்று கூறுகின்றார். அதாவது இதர தேவதைகள் க்ஷுத்ரமான அதாவது அல்பமான பலன்களைக் கொடுப்பவர்கள். கரும்பு வில்லும் புஷ்ப பாணமும் சந்த்ர கலையும் உடைய மஹாத்ரிபுரஸுந்தரியே மேலான சாயுஜ்ய பதத்தைக் கொடுக்கக்கூடும் என்பது பொருள். முருத்தன மூரலும் முருந்தன என்பது வலித்து முருத்தன என்று இருக்கிறது. முருந்து என்றால் வெண்மை நிறம், பக்ஷிகளின் இறக்கைகளின் அடிக்குருத்து என்றும் பொருள். அம்பாள் மந்தஹாசம் செய்யும்போது அவளுடைய பல்வரிசைகள் சிறிது தெரிகின்றதாம். "முத்தன்ன வெண்நகையாய்" என்றார் பிறரும். புன்சிரிப்பு அம்பாளின் அன்பையும் ஆனந்தத்தையும் காட்டுகின்றன. முலைகள் அருளையும் "வெண்ணகை" அடியார்கள் தன்னைத்தேடி அடைந்ததற்கு தான் கொண்ட ஆனந்தத்தையும் காட்டுகின்றது. ஆரம் என்பது பொதுவாக மாலையையும் சிறப்பாக முத்துமாலையையும் குறிக்கும். பொற்கலசம் போன்ற இரண்டு ஸ்தனங்களுக்கு இடையே முத்தாரம் தோன்றுவதை முலையை மேருமலை என்று வர்ணித்ததால் ஆரம் அதிலிருந்து விழும் அருவியோ என்று தோன்றுகின்றதாம். இந்தப்

பாட்டோடு ஸௌந்தர்யலஹரியின் 7வது சுலோகம் ஒப்பு நோக்கற்பாலது. அங்கே சங்கரர் "தாயே! சப்தம் செய்கின்ற சலங்கைகளையுடைய ஒட்டியானம் தரித்தவளாயும், யானையின் மஸ்தகம் போன்ற இருஸ்தன பாரங்களையுடையவளாயும், மெலிந்த இடையுடையவளாயும், பூர்ண சந்த்ரன் போன்ற முகத்தையுடையவளாயும், தனுஸ், பாணம், பாசம், அங்குசம் தரித்தவளாயும், திரிபுராந்தகனுடைய அஹந்தா ரூபினியாகிய நீ என் முன்னால் தோன்றுவாயாக என்கின்றார். இந்த ரூபம் அம்பாள் மணிபூரக சக்ரத்தில் இருக்கும் அவசரம் என்று லக்ஷ்மீதரர் வியாக்யானம் செய்கின்றார். லலிதாஸ்தவரத்னத்தின் 185வது சுலோகத்தில் பரமசிவனது அந்தக்கரணமே பரதேவதை என்பது "கருத்தன" என்பதின் பொருளாகக் கொள்ளலாம்.

———

10வது பாட்டு

## பராபூஜா லக்ஷணம்

நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும் நினைப்பதுன்னை
என்றும் வணங்குவதுன் மலர்த்தாள் எழுதா மறையின்
ஒன்றுமரும் பொருளே யருளே யுமையே இமயத்
தன்றும் பிறந்தவளே அழியா முத்தியானந்தமே,

பதவுரை

எழுதா மறையின் ஒன்றும்: எழுதாக்கிளவி என்று சொல்லப் பட்ட வேதத்தின் உட்பொருளாய் அமைந்தவளே!
அருளே: சிவபெருமானின் அருள் சக்தியே
உமையே!: உமாதேவியே
அன்று இமயத்துப் பிறந்தவளே!: இமவானுக்குப் புத்திரியாய் அவதரித்தவளே!
அழியா முக்தி ஆனந்தமே!: சாஸ்வதமான பேரின்ப நிலையான மோக்ஷ ஸ்தானமே
நின்றும், இருந்தும், கிடந்தும், நடந்தும்: நிற்றல். உட்காருதல், படுத்தல், களிநடத்தல் போன்ற சகல அவஸ்தைகளிலும்
நினைப்பதுன்னை: உன்னையே தியானம் செய்கின்றேன்.
வணங்குவது உன்மலர்த்தாள்: நான் வழிபடுவது உன்பாத கமலங்களையே!

பொழிப்புரை

எழுதாக் கிளவி என்று சொல்லப்பட்ட வேதத்தின் உட் பொருளாய் அமைந்தவளே! உமாதேவியே! அக்காலத்தில் இமவானுக்குப் புத்திரியாய் அவதரித்தவளே! சாஸ்வதமான பேரின்ப நிலையான மோக்ஷ ஸ்தானமே! நான் நிற்றல், உட்காரு தல், படுத்தல், நடத்தல் போன்ற சகல நிலைகளிலும் உன்னையே தியானம் செய்கின்றேன். நான் வழிபடுவது உன் திருப்பாத கமலங்களையே.

விரிவுரை

உமையே இமயத்தன்றும் பிறந்தவளே என்பது சுருதி வாக்கு. கேனோபநிஷத்தில் அம்பாளை உமா ஹைமவதி ஸர்வஸோபமானு என்று கூறப்பட்டிருக்கின்றது. அவளே இந்திராதி தேவர்களுக்கு ப்ரம்ஹஸ்வரூபத்தை போதிக்கின்றுள். உமா என்ற சொல்லில் பிரணவத்தின் அ-உ-ம் என்ற அக்ஷரங்கள் இருக்கின்றன. அகரம் ப்ரம்ஹத்தை யும், உகரம் சக்தியையும், மகரம் உயிர்களையும் குறிக்கும் அது ஓம் என்ற பிரணவம். பிரணவமே ஸ்மஷ்டி ரூபத்தில் ஓம் என்ற ஒரே அக்ஷரமாய் பிரம்ஹத்தையே குறிக்கும்;

உமா என்பதில் உகர மகர அகரம் என்ற வரிசையில் இருக்கின்றது. அதாவது சக்தி வாசகமான உகரத்தில் ஆரம்பிக்கின்றது. ஆதலால் "உமா" எப்பதை சக்தி ப்ரணவம் என்பார்கள். இமவானின் புத்ரி ஹைமவதி. வேதத்தின் உட்பொருள் பிரணவமாதலின் சக்தி பிரணவமும் வேதத்தின் உட்பொருளாயது. அகர உகர மகரங்கள் ரிக் யஜுஸ் சாமம் என்ற மூன்று வேதங்களின்றும் எடுக்கப்பட்ட அக்ஷரங்கள் ஆதலால் அது வேதசாரமாகின்றது. மூன்று தாழியில் கடைந்த வெண்ணெயை ஒன்று சேர்த்தது போல என்று வைஷ்ணவ ஆசார்யர்கள் கூறுவர். இதைத்தான் எழுதாமறையின் ஒன்றும் அரும்பொருளே என்பது குறிக்கின்றது. ப்ரம்ஹஸ்வரூபிணி யாதலாலே அம்பாளை அழியா முத்தி ஆனந்தமே என்றார். சச்சிதானந்தமாய் இருப்பது. பிறப்பு இறப்பு இல்லாதவளாயினும் தாக்ஷாயிணி என்ற பெயரை மாற்றிக்கொள்ளவும், இமவானின் தபஸ் ஈடேறவும் இறைவன் ஆக்ஞையால் அயோ நிஜையாய்த் தோன்றி பார்வதி என்ற பெயரை அடைந்தவள் என்பதைக்காட்ட அன்று பிறந்தவளே என்றார். இப்பாடல் சங்கரரின் ஸௌந்தர்யலஹரி 27வது சுலோகத்தில் கூறப்படும் ஆந்தர பூஜையைக் குறிக்கும். எத்தொழிலைச் செய்தாலும் அனைத்தும் தனக்காக அல்ல அம்பாளுக்கே அர்ப்பணம் என்ற மனோதிடத்துடன் செய்யப்படும் மானஸ பூஜையே ஆந்தர பூஜை அல்லது "பரா பூஜா" என்று சொல்லப்படும். இதனை சங்கரர் "நிற்குண மானஸ பூஜா" என்ற கிரந்தத்தில் அழகாக வர்ணித்திருக்கிறார்கள். ஆத்ம ஸ்வரூப பிரஹ்மாபின்ன சித் சக்தியானது அகண்டிதமாய் உள்ளும் புறமும் வியாபித்துபரிபூர்ணமாய் இருக்கிறது. அதை ஆவாஹணம் எப்படிச் செய்வது அர்க்யம் எப்படிக் கொடுப்பது, நைவேத்யம் எப்படி சமர்ப்பிப்பது என்றெல்லாம்கூறி ப்ரம்மாத்ம ஐக்யத்தை உணர்ந்த ஞானிகள் எப்பொழுதும் எல்லா அவஸ்தைகளிலும் ஏகாக்ர விருத்தியோடு செய்வதையே பரா பூஜா எனப்படும். இதற்கு பூஜா விதானங்கள், திரவ்யங்கள், இடம், காலம், முதலியன யாதொன்றும் தேவையில்லை. நடப்பதே பிரதக்ஷிணம், பேசுவதே மந்த்ரம், நினைப்பதே தியானம், செய்வதெல்லாம் உபசாரம், சாப்பிடுவதெல்லாம் நைவேத்தியம், படுப்பதுவே நமஸ்காரம் என்று இருப்பது. பாவனோப நிஷத்திலும் இது விரிவாக்கக் கூறப்பட்டிருக்கின்றது. சாதகன் ஆரம்பத்தில் பத்ததிப்படி பூஜை செய்து அநுபவம் முற்றிய நிலையில் அம்பாளோடு தரதாம்யம் அடைந்த பின் பாஹ்ய பூஜை அவஸ்யமில்லை. இப்பாடல் அபிராமி பட்டருடைய ஜீவன்முக்தி நிலையைக் காட்டுகின்றது.

## 11வது பாட்டு

## பராசக்தியே இறைவன் திருமுடியை அலங்கரிக்கிருள்.

ஆனந்த மாய்என் அறிவாய் நிறைந்த அமுதமுமாய்
வானந்தமான வடிவுடையாள் மறைநான்கினுக்கும்
தானந்தமான சரணரவிந்தம் தவளநிறக்
கானந்தம் ஆடரங்காம் எம்பிரான் முடிக்கண்ணியதே

### பதவுரை

ஆனந்தமாய்: பேரின்ப ஸ்வரூபமாய்
அறிவாய்: ஞானமே வடிவாய் நிறைந்த அமுதமாய் எங்கும் வியாபித்து அழியாத தத்துவமாய்
வானந்தமான: ஆகாசத்தை ஈருகக் கூறப்படும் ப்ரதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்ற பஞ்ச பூதங்களையே
வடிவுடையாள்: தனது திருமேனியாக உடையவளுடைய
மறை நான்கினுக்கும்: நான்கு வேதங்கட்கும்
தான் அந்தமான: தானே முடிவாய்த் திகழும்
சரணரவிந்தம்: பாத பங்கயம்
தவளநிற: வெண்மை நிறமான
கான்: காட்டை
அந்தம் ஆடரங்காம்: ஸம்ஹார திருநடனம்புரியும் இடமாகக் கொண்ட
எம்பிரான்: எனது இறைவனின்
முடிக்கண்ணியது: தலை மாலையானது (தலையில் தரித்திருக்கும் மாலையானது)

### பொழிப்புரை

பேரின்ப சொருபமாய், ஞானமே வடிவமாய், எங்கும் வியாபித்து அழியாத தத்துவமாய், ஆகாசத்தை ஈருகக் கூறப்படும் பிரதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்ற பஞ்ச பூதங்களாய் தனது திருமேனியாய் உடையவளாகிய அபிராமி அம்மையின் வேதங்கட்கெல்லாம் முடிவாகத் திகழும் பாத பங்கயங்கள் வெண்மை நிறமான ஸ்மாஸனத்தையே தனது திரு நடனம் புரியும் அரங்கமாகக் கொண்ட என் இறைவனது திருமுடியின் (கொன்றை மாலை) தலையில் சூட்டும் மாலையாயின.

விரிவுரை

"ஆனந்தமாய்: ஆனந்தோ ப்ரஹ்மஇதி வ்யஜாநாத்" என்று தைத்ரிய உபநிசத் பிருகுவல்லி 6-வது அநுவாகம் கூறுகின்றது. ஆனந்தத்திலிருந்தே சகலமும் உண்டாயின. அதிலேயே யாவும் ஜீவிக்கின்றன. அதிலேயே லயமடைகின்றன என்பது சுருதி வாக்கு. அறிவாய்: அதே உபநிஷத்தின் 5வது அநுவாகத்தில் "விக்ஞானம்" "ப்ரஹ்ம இதி வ்யஜாநாத்" என்றும் கூறப்பட்டிருக்கிறது. அறிவிலிருந்தே இவையாவும் தோன்றின. அறிவிலேயே ஜீவித்திருக்கின்றன அறிவிலேயேலய மடைகின்றன. ஆதலால் ப்ரஹ்மத்தை ஞானானந்த ஸ்வரூபம் என்று வேதம் கூறும். மேலும் ப்ரஹ்மம் நிறைந்த அமுதுமுமாய் என்றதால் பூர்ணமாக எங்கும் வியாபித்து அழியாமல் இருப்பதுமாகும்.

அமுதம் என்பது அம்ருதம்! அதாவது இறப்பற்றது என்று பொருள். இவ்வாறு இருக்கும் ப்ரஹ்மஸ்வரூபிணியான அம்பாள் தன் மேலான கருணையினால் பஞ்ச பூதங்களாய் விரிந்து அவற்றின் வடிவாய்த்திகழ்கின்றாள். தைத்ரியஉபநிஷத்தின் பிரம்மாநந்தவல்லி முதல் அநுவாகத்தில் "ஆத்மன: ஆகாசம்: ஸம்பூத: /ஆகாலாத் வாயு:/ வாயோரக்னி:/ அக்கேராப:/ அப்த்ய:/ ப்ருதிவீ:/என்று கூறுகின்றது. அதாவது ப்ரம்ஹத்திலிருந்து ஆகாசமும், ஆகாசத்திலிருந்து வாயும், வாயுவிலிருந்து அக்னியும், அக்னியிலிருந்து அப்புவும், அப்புவிலிருந்து ப்ருதிவியும் தோன்றன. இந்த பஞ்ச பூதங்களையும் தன் சரிரமாக உடையவள். "பஞ்ச பூதேசி" என்று லலிதாஸஹஸ்ர நாமாவும் (949) கூறுகின்றது. இதற்கு உரை எழுதிய பாஸ்கரராயர் பஞ்ச பூதங்களின் ஆத்மாவாக அம்பாள் இருப்பதால் "பஞ்சபூதேசி" என்று சொல்லப்படுகிறது என்கின்றார் பஞ்ச பூதங்களை தன்னிடத்தில் சூக்ஷ்ம நிலையில் வைத்திருக்கும் மூலப்ரக்ருதியே அம்பாள் என்பதும் சாஸ்த்ர சம்மதமானது.

லலிதாஸஹஸ்ரநாமம் 397 வது நாமா "மூலப்ரக்ருதி" என்பது அதன் உரையில் மூலப்ருக்ரிதி என்பது எதிலிருந்து சகலம் தோன்றுகின்றதோ அதுவே மூலப்ரக்ருதி எனப்படும். அது ப்ரஹ்மமே அது அவ்யக்தவம். அது அழியாதது என்றும் கூறுவதோடு இதனையே மாயை என்றும் கூறுவார்கள் அது சிவத்தினன்று வேறல்ல என்றும் கூறப்பட்டிருக்கிறது. முன்பே சொல்லப்பட்டபடி ப்ரஹ்மமாகிற சிவம் "ஸஈக்ஷத லோகான்னுஸ்ருஜ" (ஐதரேயம்) ததைக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயேய (சாந்தோத்யம்) "ஸோS காமயத பஹுஸ்யாம் ப்ரஜாயேய (தைத்ரீயம்) என்று நான் ஸ்ருஷ்டிப்பேன், பலவாக விரிவேன் என்று இச்சை கொண்டது இந்த பரமசிவனை...

மாயா விருத்தியே அம்மாளாகும். மேலும் பஞ்ச பூதங்களின் வடிவாய் இருப்பாள் என்பது இன்னொரு ரஹஸ்ய அர்த்தமும் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகாசத்துக்கு ஒரு தன்மாத்ரை. வாயுவுக்கு இரண்டு, அக்னிக்கு மூன்று, அப்புவுக்கு நான்கு, ப்ருதிவிக்கு ஐந்து ஆகமொத்தம் பதினைந்து தன்மாத்ரைகள் ஆகின்றன.

பஞ்ச பூதங்களின் சூக்ஷ்ம நிலையே தன்மாத்ரைகள் என்பவை அவை சப்த, ஸ்பரிஸ, ரூப, ரஸ, கந்தம் என்பன. ப்ருக்ருதியில் இருக்கும் பதினைந்து தன்மாத்ரைகளே அம்பாளின் அம்ஸமான பதினைந்து நித்யா தேவதைகள். அவர்கள் 1. காமேச்வரி, 2. பகமாலினி, 3. நித்யக்லின்ன, 4. பேருண்டா, 5. வன்ஹி வாஸினி, 6. மஹாவஜ்ரேச்வரி, 7. சிவதூதி, 8. த்வரிதா, 9. குலஸுந்தரி, 10. நித்யா, 11. நீலபதாகா 12. விஜயா, 13. ஸர்வ மங்களா, 14. ஜ்வாலாமாலினி, 15. சித்ரா என்பவர்கள்.

இவர்கள் ஸ்ரீ சக்ரத்தின் எட்டாவது ஆவரணமாகிற மத்யத்ரி கோணத்தின் மூன்று கோடுகளிலும் வைத்துப் பூஜிக்கப்படுகிறவர்கள். இவர்களை காலத்தைக் குறிப்பிடுகிறவர்கள் என்று பாவனோபநிசத் கூறும். "பஞ்சதசாதி இதி ரூபேண காலஸ்யபரிணம அவலோகனம்" என்று இவர்களே பதினைந்து திதிகள். இவ்வாறு அம்பாள்ப்ருக்ருதியாயும் காலமாயும் இருப்பதோடு அவற்றிற்கும் அதிதமாய் ப்ரஹ்மஸ்வருபிணியாய் விளங்குகிறாள்.

"காலமாய்க் காலமின்றி கருமமாய்க் கருமமின்றிக் கோலமாய் கோலமின்றிக் குணங்களாயக் குணங்களின்றி, ஞாலமாய் ஞாலமின்றி" என்று வரும் கந்த புராணச் செய்யுளும் ஒப்பு நோக்குக. மறை நான்கினுக்கும் தான் அந்தமான சரணாரவிந்தம் என்றதை ஸஹஸ்ரநாமத்தில் (213) "ச்ருதி ஸிமந்தஸிந்தூரீ க்ருத பாதாப்ஜ தூளிகா" என்று வர்ணிக்கப்பட்டிருக்கின்றது.

வேதத்தைப் பெண்ணாகவும் அவள் அம்பாளின் பாத கமலங்களில் இருக்குமகாந்தமாகிற குங்குமத்தை தனது சிரஸின் தலை மயிர் வகுட்டில் ஸிமந்தமாக தரிக்கிறாள் என்று பொருள். சரணாரவிந்தம் எவ்வாறு பரமசிவனின் தலைக்கு மாலையாயது? பரம சிவன் அணிவது கொன்றை மலர். அது ப்ரணவாகாரமானது. ப்ரணவமே வேதத்தின் ஆதியும் அந்தமும், ப்ரணவமே ப்ரம்ஹம் என்பது வேதங்களால் கூறப்பட்டிருக்கின்றது.

ஆகக் கொன்றையைத் தலையில் அணிவது ப்ரணவத்தை அணிவதாகும். ப்ரணவமே பரப்ரஹ்ம ஸ்வரூபிணியான அம்பாள். ஆதலால் அம்பாளின் சரணாரவிந்தம் பரமசிவனின் தலைக்கு மாலையாக வர்ணிக்கிறார் என்க. தவள நிறக்கான் என்பதை ஸாமான்ய வாச்யார்த்தமாய் வெண்காடு என்று பொருள் கொண்டு திருவெண்காட்டுத் தலத்தைக் குறிப்பதாகக் கூறுவர்.

ஆனால் அது இறைவன் ஆடும் சுடுகாட்டையே குறிக்கும். காரைக்கால் அம்மையார் பாடியருளிய திருவாலங்காட்டு பூதத் திருப்பதிகம் பார்க்க. மேலும் மஹா ப்ரளய காலத்திலே யாவும் ஒடுங்கி பரமசிவம் ஒன்றே ஏகசேஷமாகி மிஞ்சியிருப்பார் என்றும் அப்போதும் அம்பாளும் அவனோடு ஒன்றி அவனுடைய மஹா கல்பதாண்டவத்து சாக்ஷியாய் இருப்பாள் (லலிதா ஸஹஸ்ர நாமம் 232-வது நாமா மஹேச்வர மஹா கல்ப மஹா தாண்டவ சாக்ஷிணி) இந்த மஹாப்ரளய நிலையே சுடுகாடு அதுப்ரகாசாம்ஸமாதலாலே வெண்மையாகக் கூறப்படுகிறது. ஆக "தவளநிறக் கான்" என்பது மஹா ப்ரளயம் அங்கு அவன் ஆடும்போது அம்பாள் அவனுடைய தலையில் கொன்றை மாலையாக அமர்ந்து ப்ரளய தாண்டவத்துக்கு சாக்ஷியாய் இருப்பாள் என்பதுதான் இதில் அடங்கிய தத்துவார்த்தம். இந்த நிலையில் ஞானானந்த ப்ரம்ஹ ஸொரூபமாய் இருக்கும் அம்பாள் புனர் ஸிருஷ்டி ஆரம்பிக்க பஞ்சு பூதங்களாய் விரிகிறாள் என்பது இப்பாடலின் கருத்துரை.

12வது பாட்டு

## பூர்வ ஜன்ம புண்ணியத்தாலேயே அம்பாளின் அனுக்ரஹம் பெறமுடியும்.

கண்ணிய துன்புகழ் கற்பதுன் நாமம் கசிந்துபத்தி
பண்ணிய துன்இரு பாதாம் புயத்தில் பகலிரவா
நண்ணிய துன்னை நயந்தோர் அவையத்து நான்முன்செய்த
புண்ணியம் ஏதென் அம்மே புவிஏழையும் பூத்தவளே !

பதவுரை

புவிஏழையும் பூத்தவளே! ஏழு உலககங்களையும் தோற்றுவித்தவளே!
என் அம்மே !: என்தாயே ! (அடியேன்)
கண்ணியது: பக்திசிரத்தையோடு கருதினது
உன்புகழ்: உன்னுடைய கீர்த்தியையே ப்ரபாவத்தையே உன்னுடைய கீர்த்தியையே.
கற்பது: நான் ஆசார்யன் மூலமாகக் கற்றது உன் திருநாமத்தையே
கசிந்து: உள்ளம் குழைந்து, மனம் உருகி
பக்திபண்ணியது: அன்பு பூண்டு வழிபடுவது
உன் இரு பாதாம்புயத்தில்: உன்னுடைய இரண்டு திருப்பாதக்கமலங்களையே.
பகலிரவா (க): இராப்பகலாக எப்போதும்.
நண்ணியது: நான் நெருங்கிப் பழகியது
உன்னை நயந்தோர் அவையத்து: உன்னை உபாஸனை செய்வோரின் சங்கமே
நான் முன்செய்த புண்ணியம்: (இவ்வாய்ப்பு எல்லாம் அடியேன்பெற) அடியேன் பூர்வ ஜன்மத்தில் என்னபுண்ணியம்
ஏது: என்ன? நான் அறியேன் நீயே அறிவாய் என்றபடி.

பொழிப்புரை

ஜகஜ்ஜனனீ ! என் அன்னையே நான் உன் புகழையே எப்பொழுதும் சிந்திக்கின்றேன். உன் திருநாமத்தையே கற்கின்றேன். உன் திருவடிகளுக்கே பக்திபண்ணுகின்றேன். உன் அடியார்களுடனேயே கூட்டுறவு கொள்கின்றேன். இந்தமாதிரி நான் பெற்ற வாய்ப்பு நான்பூர்வ ஜன்மத்தில் செய்த பண்ணிய புண்ணியத்

தினுலேயே ஏற்பட்டிருக்கவேண்டும் அப்புண்ணியம் ஏதென்றும்நானொ அறியேன் நீயே அறிந்து இந்த வாய்ப்பை எனக்கு ஈய்ந்துள்ளாய்.

விரிவுரை

இப்பாட்டில் அபிராமிபட்டர் தன் இயல்பைக் கூறுவது பிறர் அனுஷ்டிக்கவேண்டிய மார்க்கத்தை உபதேசிப்பதோடு இத்தகைய வாய்ப்பு பூர்வபுண்ணிய வசத்தினுலேயே ஏற்படும் என்று முடிக்கிருர். அவருடைய சாதனையையும் சோபான முறையில் கூறுகின்ருர். ஒரு பொருளில் நமக்கு ஆர்வம் உண்டாக வேண்டுமானுல் முதலின் அப்பொருளின் பெருமையை நன்கு உணரவேண்டுமாதலாலே கண்ணியது உன் புகழ் என்ருர். அவ்வாறு அம்பிகை பிரபாவத்தை அறிந்து அதில் ஆர்வம் கொண்டபின் அம்பாளின் திருமந்திரம் உபதேசம் பெறலாம். அவ்வாறு உபதேசம் அடைந்தபின் உபாஸனை ஏற்படும் அந்த உபாஸனை யாது நிலைத்திருக்க ஸத் சங்கம் அவசியம். என்று க்ரமமாய்க் கூறுகின்ருர். நாமங்கள் என்று சொல்லாமல் நாமம் என்று ஒருமையில் சொன்னதால் எந்த ஒரு நாமாவானது அம்பாளின் சான்னித்யத்தைக் கொடுக்குமோ அதுவேதான் ஆகும். அது எது? அம்பாளின் நாமாக்களில் மிக சிரேஷ்டமானதும், அவளுடைய பீஜாக்ஷரமாகத் கருதப்படுவதும், பஞ்சதாசாக்ஷரிமந்த்ரத்தில் மும்முறை வருவதும், அதுவேதான் நாமாவாகவும் மந்த்ரமாகவும், தன்இருப்பிடமாகவும், தனது ரூபமாகவும், வேறு எந்த தேவதைக்கும் இல்லாதத் தனிப்பெருமையுடையதுமாகிய புவனேஸ்வரிபீஜம் என்ற அக்ஷரமேயாகும். அந்த அக்ஷரம் "ஹ்ரீம்" என்பதாகும். அதுவே அம்பாளின் நாமாவுமாகும் என்பதை லலிதாத்ரிசதியில் 99வது நாமா கூறுகின்றது. இந்த ஒரு அக்ஷரத்துக்கொண்டதான 60 நாமாக்கள் த்ரிசதியில் உள்ளன. இந்த 60 நாமங்களையும் பொருளுணர்ந்து கற்ருல் அந்த அக்ஷரத்தின் பெருமை நன்கு விளங்கும். லலிதாஸஹஸ்ர நாமத்திலும் 301வது நாமா "ஹ்ரீம் காரீ" என்று கூறப்பட்டிருக்கின்றது.

"கல்யாண வ்ருஷ்டிஸ்தவம்" என்றகிரந்தத்தில் பகவத் பாதாள்" ஹ்ரீம்காரம் ஏவதவ நாம க்ருணந்தி வேதா: என்கின்ருர் அதாவது (தாயே) வேதங்கள் உனது பெயர் "ஹ்ரீம்" என்ற அக்ஷரமே என்று கூறுகின்றன என்பது பொருள். வேருெரு தந்த்ர சாஸ்த்திரத்திலும் (புவனேஸ்வரி கல்பம்) "ஹ்ரீம்காரேண ஏவ ஸம்ஸித்த: புக்திம் முக்திம் சவிந்ததி" என்று கூறப்பட்டிருக்கின்றது அதாவது ஹ்ரீம் என்ற மந்திரத்தின் ஸித்தி ஒருவனுக்கு ஏற்பட்டு விட்டால் அவன் புக்தி முக்தி இரண்டையும் அடைகிருன் என்று

பொருள். இந்த ஏகாக்ஷரமந்த்ரத்தின் பொருளேயும் பெருமையை யும் விவரிக்க இது இடமல்ல, வேண்டியவர்கள் லலிதாத்ரிசதி போன்ற ஏனைய சாக்ததந்த்ர சாஸ்த்திரங்களேப் பார்க்கவும்." முன் செய்த புண்ணியம்" என்பது ருத்ரயாமளத்தில் அநேகஜன்மங்களில் செய்த புண்ணியத்தினுலேயே தேவியின் உபாஸனே கிட்டும் என்றும், லலிதாஸஹஸ்ர நாமம் உத்திரபாகம் 74-வது சுலோகத்தில் எவ னொருவன் கோடிக்கணக்கான ஜன்மங்களில் இதர தேவதைகளின் நாமாக்களே கீர்த்தனம்செய்து வந்தானே அவனுக்கே தேவியின் உபாஸனே கிடைக்கும் என்றும். லலிதாத்ரிசதி பலச்ருதியில் 24வது சுலோகத்தில் யாருக்கு புனர்ஜன்மம் இல்லேயோ அல்லது யார் ஸ்வயமாகவே சங்கர ஸ்வரூபமாக இருக்கிறுரோ அவரால்தான் ஸ்ரீவித்யை என்ற அம்பிகையின் உபாஸனே அடையப்படுவதாகும் என்றும் கூறப்பட்டிருக்கின்றது. ஸ்ரீ வித்யையை அறிந்தவனே "வித்வான்" என்று அழைக்கத் தகுந்தவன்,

"உன்னே நயந்தோர் அவையத்து" என்றும் உன்னே நயந்தோர் வையத்து" என்று இருவித பாடங்கள் காணப்படுகின்றன. சாக்த உபாஸகர்கள் அறியவேண்டிய முதற் கடமை என்னவெனில் லலிதாத்ரிசதி பலச்ருதி 28-வது சுலோகம் கூறுவதுபோல்தான் உபாஸகனுய் இருந்தாலும் ஏனைய சாக்த உபாஸ்கர்களேப் போற்ற வேண்டும். அவர்களிடம் துவேஷம் காட்டக்கூடாது. அதனுலேயே பூஜாபத்ததியின் ஆரம்பத்தில் அதுவும் முதன்முதலாக எந்தெந்த இடத்திலெல்லாம் எந்தெந்த லோகத்திலெல்லாம் ஸ்ரீவித்யா உபாஸகர்கள் இருக்கிறுர்களோ அவர்கள் அனேவருக்கும் என் நமஸ்காரம்" என்று ஆரம்பிக்கின்றோம்.

மேலும் ஸ்ரீவித்யோபாஸகர்கள் சத்சங்கத்தில் பிரவர்த்திக்க வேண்டும். இல்லேயேல் உபாஸனுத்ராட்யம் ஏற்படாது என்பது சித்தாந்தம் "பூந்தவளே" என்பதில் பொருள் அடுத்த பாட்டில் விவரிப்போம். யாருக்கும் எளிதில் கிடைக்கக்கூடாத ஸ்ரீவித்யா உபாஸனே பூர்வ ஜென்மபுண்ணியத்தாலேயே அடையமுடியும் என்ருயிற்று.

13வது பாட்டு

## தேவியன்றி வேறு தேவு உளதோ?

பூத்தவளே ! புவனம் பதினான்கையும் பூத்தவண்ணம்
காத்தவளே ! பின் கரந்தவளே ! கறைகண்டனுக்கு
மூத்தவளே ! என்றும் மூவா முகுந்தற்கிளையவளே
மாத்தவளே ! உன்னையன்றி மற்றோர் தெய்வம்வந்திப்பதே.

பதவுரை.

புவனம் பதினான்கையும்: பதினான்கு உலகங்களையும்
பூத்தவளே: ஈன்றவளே
பூத்தவண்ணம்: சிருஷ்டித்தவாறே
காத்தவளே: பாதுகாக்கின்றவளே
பின்கரந்தவளே: இறுதியில் அவற்றை தன்னுள் வயப்படுத்திக் கொள்பவளே !
கறைகண்டனுக்கு: திருநீலகண்டனுக்கு
மூத்தவளே !: முன்தோன்றியவளே !
முகுந்தற்கு: திருமாலுக்கு
மூவாஇளையவளே !: எக்காலத்தும் முதுமைஅடையாத தங்கையே!
மாத்தவளே !: பெரியதவத்திரு மேனியுடையவளே !
உன்னையன்றி: உன்னையல்லாது
வேறுதெய்வம்: இதரதெய்வங்களை
வந்திப்பதே: வழிபடஇயலுமா

கருத்துரை

பராசக்தியே சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்ற முத்தொழிலுக்கு மூலகாரணமாதலாலும், சிவனும், திருமாலும் அவளுடைய அதிட்டிப்பினாலேயே தொழில் படுவதாலும் அம்பாளையன்றி வழிபடக்கூடிய தெய்வம் வேறிலது என்பதாம்.

விரிவுரை

மேல்பாட்டிலும் இப்பாட்டிலும் அம்பிகையை பூத்தவளே ! என்கின்றார். அதாவது அவளே பிரபஞ்சமாக சங்கல்பமாத்திரத்தில் விரிந்தாள் என்பதைக் காட்டுகின்றது. முந்தியபாட்டில் ''புவி ஏழையும்'' என்றவர் இப்பாட்டில் ''புவனம் பதினான்கையும்'' என்ற

தால் முந்தின புவிஏழு என்பதை ஸப்த தீபங்கள் என்ற ஜம்பு, பிலக்ஷ, குச, கிரௌஞ்ச, சாக, சான்மல, புஷ்கரம் என்ற ஏழு தீவுகளைச் சொன்னதையும், புவனம் பதினான்கு என்றதை பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், ஜனலோகம், தபோலோகம், மஹாலோகம், சத்தியலோகம் என்ற மேலுலகேழும், அதலம், விதலம், சுதலம், தார்தலம், மஹாதலம், இரசாதலம், பாதாளம் என்ற கீழுலகமேழும் கூறினதாய் எடுத்துக்கொள்வது பொருந்தும். கறைகண்டனுக்கு மூத்தவள் என்பது சக்தி தத்துவத்தினின்றே சதாசிவ தத்துவம் தோன்றலால் என்க: சித்தியாரில் "சக்திதான் சிவத்தை ஈன்றும்" என்று வருவதும், திருமந்திரத்தில் "தாயும் மகளும் தாரமுமாமே" என்று வருவதும் திருக்கோவையாரில் "அவள் அத்தனும் மகளும் தில்லையான்" என்றும் திருவாசகத்தில் "இமவான்மகட்குத் தன்னுடைக்கேள்வன் மகன், தகப்பன், தமையன்" என்று வருவதும் இக்கருத்துப்பற்றியேயாம். அம்பிகையே மும்மூர்த்திகளின் ரூபமாக இருந்து முத்தொழில் இயற்றுவதை லலிதா ஸஹஸ்ரநாமத்தில் "ஸ்ருஷ்டி கர்த்ரீப்ரம்ஹரூபா, கோப்த்ரீ கோவிந்தரூபிணி, ஸம்ஹாரிணீ ருத்ரரூபா" என்று கூறப்பட்டிருக்கிறது. பூத்தவண்ணம் காத்தவள் என்றதால் எவ்வாறு யாதொரு பாஹ்யப்ரயத்னம் இன்றியே சங்கல்ப மாத்திரத்தில் சிருஷ்டித்தாளோ அதுபோலவே பாதுகாக்கின்றாள் என்பதாம். பூத்தவண்ணம் என்றதை "கரந்தவளே" என்பதோடும் கூட்டிக்கொள்க. "மூவா முகுந்தர்" என்று சேர்ப்பதில் பொருள் விசேஷமில்லை. கறைகண்டனும் மூவாதவனேயாதலால், ஆகையால் மூவா இளையவளே என்பது பொருத்தமுடைத்து. மாத்தவளே! என்றதன் பொருள் வாச்சியார்த்தத்தில் பெரிய தவத்தை யுடையவளே! தவத்தின் ரூபமாயிருப்பவள் யக்ஞரூபிணீ என்று பொருள் கொள்ளலாமாயினும் பெரிய தவத்தாலேயே அடையப்பட்டவள் என்று லக்ஷியார்த்தமும் கொள்ள இடமுண்டு.

திருமாலுக்கு அம்பிகை தங்கை என்ற கருத்தை புராணாந்தரங்களில் பரக்கக்காணலாம். அம்பாளே ஜகத்ஸ்ருஷ்டி ஸ்திதிலயகாரிணீ என்பதை ஸப்தஸதி கிரந்தத்தில் முதல் அத்யாயம் 75, 76, 77-வது சுலோகங்களில் பார்க்க, மூவா என்றதால் நரை, திரை, மூப்புப்பிணி இல்லாதவள் என்று பொருள். என்றும் இளமையாகவே இருப்பவள்.

தேவர்கள் என்று பேசப்பட்ட பஞ்சப்ரஹ்மாக்களும் இதர இந்த்ரன் அக்னி முதலியவர்களும், தத்தம் சக்தியினாலேயே அவ

ரவர் தொழிற்படுவதால் சக்தியே பிரதானமாகின்றது. ஆதலால் அவளை வழிபடுவது மற்றெல்லா தேவுகளையும் வழிபட்டதும் ஆகும். அம்பாளையன்றி வேறு தெய்வங்களை வழிபடவேண்டிய அவசியம் இல்லை. லலிதாத்ரிசதியில் (183) "லயஸ்தித்யுத்பவேச்வரீ" என்று கூறப்பட்டிருக்கின்றது காண்க. சுருதியில் ''யதோவா இமானி பூதானி ஜாயந்தே ........." என்று தொடங்கும் மந்தரத்தின் லக்ஷியார்த்தமாக இருப்பவள். அவளே ப்ரஹ்மம், (தைத்ரீயம்).

---

14 வது பாட்டு

## அடியார்க்கு எளியவள்

அர்ச்சா மூர்த்தத்தில்

வந்திப்பவர் உன்னை வானவர் தானவர் ஆனவர்கள்
சிந்திப்பவர் நற்றிசைமுகர் நாரணர் சிந்தையுள்ளே
பந்திப்பவர் அழியாப் பரமானந்தர் பாரில் உன்னைச்
சந்திப்பவர்க்கு எளிதாம் எம்பிராட்டியின் தண்ணளியே.

பதவுரை

உன்னை !. அபிராமி அம்மையாகிய உன்னை
வந்திப்பவர் : வழிபடுகிறவர்கள்
வானவர் : தேவர்களும்
தானவர் : அசுரர்களும்
(உன்னை) சிந்திப்பவர் : தியானம் செய்கிறவர்கள்
நற்றிசைமுகர் : நான்முகனை ப்ரம்மாவும்
நாரணர் : திருமாலும்
சிந்தையுள்ளே : தமது உள்ளத்தில்
பந்திப்பவர் : (உபாஸனையால்) கட்டுப்படுத்தினவர்
அழியாப்பரமானந்தர் : எப்பவும் அழியாத பரமானந்தத்தை அனுபவிக்கும் சாக்த உபாஸகர்கள்.
பாரில் உன்னை : உலகத்தில் உன்னை
சந்திப்பவர்க்கு : தரிசிப்பவர்க்கு
எளிதாம் : (உன் அருள்) லகுவாக சித்திக்கின்றது
எம்பிராட்டி : என் தலைவியே ! (இவ்வாறு எளிதாய் இருப்பது)
நின் தண்ணளியே ! : உனது குளிர்ந்த அருளேயல்லவா ?

பொழிப்புரை

உன் கருணையைப்பெற தேவர்களும் அசுரர்களும் உன்னை வந்திக்கின்றார்கள். பிரம்மனும் திருமாலும் உன்னையே தியானிக்கிறார்கள். ஸாக்த சாதகர்கள் உபாஸனையால் உன்னை தமது உள்ளத்தில் கட்டுப்படுத்திவைத்திருக்கிறார்கள். ஆயினும் வந்திப்பது, சிந்திப்பது, உபாஸனையால் கட்டுவது முதலிய யாதொரு பிரயத்னமும் இல்லாமல் உன் திருவுருவத்தை ஆலயங்களில் தரிசித்த மாத்திரத்தில் உன் அருளுக்குப் பாத்திரமாகின்றனர் உலகத்தவர். இது உன்னுடைய எல்லையற்ற கருணையல்லவா ?

கருத்துரை

அம்பாளின் அருளை அடைய தேவர்களும், அசுரர்களும் நான்முகனும் திருமாலும் உபாஸகர்களும் அதிக பிரயாசைப்பட்டுக் கொண்டிருக்க அடியார்களுக்கு அம்பாளின் அர்ச்சாமூர்த்தத்தை தரிசித்த மாத்ரத்திலேயே அருள் கிட்டிவிடுகின்றதாம். இது அவளுடைய அவ்யாஜமான கருணையின்பாற்பட்டது என்று வியக்கின்றார்.

விரிவுரை

''தேவரிஷிகண ஸங்காதஸ்தூய மானாத்மவைபவா. என்பது ஸஹஸ்ர நாமத்தில் 64-வது நாமா. அசுரர்களும் அம்பாளை வழிபட்டே அநேக வரங்களைப் பெற்றார்கள் என்பதும் புராணாந்தரங்களில் கூறப்பட்டிருக்கின்றது. ''ஹரிப்ரம்ஹேந்த்ரஸேவிதா'' என்பதும் 297-வது நாமா. ஹரிப்ரம்ஹேந்த்ரவந்திதா'' என்பதுத்ரிசதியில் 106-வது நாமா. ''முகுந்த ப்ரம்ஹேந்த்ரஸ்புட மகுட நீராஜிதபதாம்.'' என்று ஸௌந்தர்ய லஹரியில் கூறப்பட்டிருக்கிறது. ''பந்திப்பவர் அழியாபரமானந்தர்'' என்பது ஸாக்த உபாஸகர்களையே குறிக்கவேண்டும். ஸாக்த சித்தாந்தப்படி ஸமய மார்க்கத்தை அவலம்பிக்கின்றவர்கள் தமது உபாஸனா பலத்தால் குண்டலினி சக்தியை எழுப்பி ஷட்சக்ர பேதனம்செய்து ஸஹஸ்ரார பத்மத்துக்குக் கொண்டுவந்து அங்குபெருகும் அம்ருதப்ரவாகத்தை சரீரத்தின் 72000 நாடிகளிலும் பரவச்செய்து அதனால் அழிய பரமானந்தத்தை அடைகிறார்கள் என்பதை லக்ஷ்மிதரர் ஸௌந்தர்ய லஹரி 9-வது சுலோகத்தின் வியாக்யானத்தில் கூறியிருக்கின்றார். இந்த நூல் ஒரு சிறந்த சாக்த அநுபூதிமானால் ஆக்கப்பட்டது. என்பதை மறந்து ஏனைய சித்தாந்தக்கருத்துக்களைப்புகுத்தி உரை எழுதுகிறார்கள். பந்திப்பது என்பது சுவாஸபந்தனத்தால் குண்டலினிசக்தியை எழுப்பும் குண்டலினியோகம் என்பதைக் காட்டும். யோகமார்க்கமேயல்லாமல் உபாஸனையின் முதிர்ச்சியாலும் அடையமுடியும் என்பது சமயாச்சாரக்கொள்கை. சந்திப்பவர் என்றதால் அம்பாளின் அர்ச்சாமூர்த்திகளை திவ்யக்ஷேத்ரங்களில் தரிசிப்பது என்று பொருள் கொள்ளவேண்டும். ''தண்ணளி'' அம்பாளின் கருணாகடாக்ஷத்தைப்புகழ்ந்து பேசாதவர்களேயில்லை; அவள் க்ஷிப்ரப்ரஸாதினி. அவ்யாஜகருணாமூர்த்தி. தரிசனமாத்திரத்திலேயே தண்ணளி சுரப்பவள்.

''கருணைதரங்கிதாக்ஷிம்'' என்றும் ''கருணாரஸஸாகரா'' ''கருணாம்ருதஸாகரா'' ''கடாக்ஷஸ்யந்திகருணா'' என்றெல்லாம் துதிக்கப்பட்டிருக்கிறாள். தேவர்களும், அசுரர்கள், நான்முகனும் நாரணனும் யோகிகளும் உபாஸகர்களும் வெகுவாக பிரயத்தனம் செய்யவேண்டியிருக்க ஸாமான்ய அடியார்கள் அம்பாளின் திருவுருவத்தை ஆலயங்களில் தரிசித்தமாத்திரத்தில் அடைகிறார்கள் என்பது அம்பாளின் ஈடுஇணையற்ற பேரருளைக்காட்டுகின்றது என்கின்றார். இப்பாட்டில் ''திசைமுகர்-நாரணர் என்ற சொற்களை பன்மையாகக்கூட எடுத்துக்கொள்ளலாம்.'' ஏனெனில் ''எண்ணிலியிந்திரர் எத்தனையோ பிரமர்களும் மண் மிசைமால் பலர் மாண்டனர்'' என்று மாணிக்கவாசகரும் ''நூறு கோடி பிரமர்கள் நொந்தினர், ஆறு கோடி நாரணர் அங்ஙனே ஏறு கங்கை மணலெண்ணிலிந்திரர்'' என்று அப்பர் பெருமானும் ஸூத ஸம்ஹிதை சிவமஹாத்ம்ய காண்டம் 8-வது அத்யாயம் 28-வது சுலோகத்தில் ''கணக்கற்ற பிரம்மாக்கள் லயமடைத்தார்கள். அப்படியே கணக்கற்ற விஷ்ணு, ருத்ரர், இந்திரன் முதலானவர்களும் லயமடைந்தனர்'' என்றும் கூறப்படுவதால் மஹாபிரளயம் தோறும்யாவும் சக்தியோடு அபின்னமான சிவத்தில் லயமடைந்து பின் புனர் சிருஷ்டியின்போது மறுபடியும் சிருஷ்டிக்கப்படுவார்கள் ஆதலாலேயும் அம்பாள் ஒருவளே மஹாப்ரளயத்திலும் சிவத்தோடு ஒன்றியிருப்பாளாதலாலும் அவர்கள் யாவரும் ஒவ்வொரு புனர் சிருஷ்டியில் தோன்றும் போதெல்லாம் அம்பாளையே வழிபடுவார்கள் என்று கூறலாமல்லவா? அதனால்தான் நான்முகன் நாரணன் என்று கூறாமல் நான்முகர், நாரணர் என்று பன்மையில் கூறினர் என்க.

---

15வது பாட்டு.

## அம்மையின் அருளால் இம்மையும் மறுமையும் வீடும் எய்துமே.

சியாமளா உபாஸனை.

தண்ணளிக்கென்று முன்னே பலகோடி தவங்கள் செய்வார்
மண்ணளிக்கும் செல்வமோ பெறுவர்? வானவர் தம்
விண்ணளிக்கும் செல்வமும் அழியாமுத்தி வீடுமன்றோ
பண்ணளிக்கும் சொல்பரிமள யாமளைப் பைங்கிளியே.

பதவுரை.

பண்ணளிக்கும் சொல்: (கேட்பவர்களுக்கு) இன்னிசையாக விருந்தளிக்கும் இனிய சொற்களையுடையவளும்
பரிமளயாமளை: வாடாத மணமுடைய சியாமள நிற மேனியுடை யவளுமான
பைங்கிளியே: பச்சைக்கிளியே! (அபிராமியே!)
தண்ணளிக்கென்று: (உன்னுடைய) குளிர்ந்த அருளைப்பெற வேண்டுமென்று
முன்னே: முற்பிறப்புகளில்
பலகோடி தவங்கள் செய்வார்: எண்ணிறந்த தவங்களைச் செய்த பாக்கியவான்கள்
மண்ணளிக்கும்: இந்த உலகம் தருகின்ற
செல்வமோ பெறுவர்: ஐஸ்வரியத்தை மட்டுமா அடைவர்
மதிவானவர்த்தம்: யாவரும் மதிக்கின்ற இந்திராதி தேவர்கள் வசிக்கின்ற
விண்ணளிக்கும்: சொர்க்கலோகம் தருகின்ற
செல்வமும்: சங்கநிதி, பதுமநிதி, கல்பகவிருக்ஷம் போன்ற செல்வங்களையும்
அழியாமுத்தி வீடுமன்றோ: என்றும் அழியாத பிறப்பு இறப்புச் சுழலிருந்து விடுதலையடைந்த ஸாயுஜ்ய பதவியையும் கூடவல்லவோ (அடைவர்)

பொழிப்புரை.

அநேக ஜன்மங்களில் செய்த எண்ணிலா அருந்தவம் செய்து அம்பாளின் கருணைக்கு இலக்கானவர்கள் இம்மையில் அஷ்ட

ஐஸ்வர்யங்களையும் அடைவதோடு சொர்க்கலோகபோக வாழ்க்கையும் அடைந்து அதன் பின்பிறவா நிலையாகிற மோக்ஷத்தையும் அடைவர். அவளை "பண்ணளிக்கும் சொற் பரிமளயாமளை" யாக உபாஸிப்பவர்கள்,

விரிவுரை.

இப்பாட்டில் உபாஸனு முகூர்த்தம் ஒன்று கொடுக்கப்பட்டிருக்கின்றது என்பதை அன்பர்கள் உணரவேண்டும். காளிதாஸன் தனது "சியாமளா தண்டகம்" என்ற கிரந்தத்தின் இறுதியில் "கிம் நளித்தயேத் வபு" என்று ஆரம்பிக்கும் வரியில் அதிகோமளமும் சியாமளமும் சந்த்ரகலை அணிந்ததுமான உன்திருவுருவை தியானிப்பானே அவனுக்கு எந்த சித்திதான் சாத்தியமாகாது? அவனுக்கு சமுத்திரம் விளையாடும் குளமாகும். இந்திரனுடைய நந்தவனம் விளையாடும் சோலையாகும். பூலோகம் பத்ராஸனமாகும். ஸரஸ்வதி பணிப்பெண்ணுவாள். ஸ்ரீதேவி தானுகவே வந்து அவனது வேலைக்காரி ஆகின்ருள் என்று கூறுகிருன். அம்பாளின் உபாஸனு முகூர்த்தங்கள் பல. கோறும் பலனுக்குத் தக்கபடி உபாஸனு முகூர்த்தங்கள் வேறுபடும். அவற்றில் பண்ணளிக்கும் சொற் பரிமளயாமளப் பசுங்கிளியாக வழிபடுவது ஒன்று. பண்ணளிக்கும் சொல். அம்பாளின் மாதுர்ய வசனத்தை லலிதா ஸஹஸ்ரநாமத்தில் 27-வது நாமா "நிஜஸல்லாப மாதுர்ய விநிர்பாத்ஸித கச்சபீ" என்பது. அதாவது தன்னுடைய சொல்லின் இனிமையால் ஸரஸ்வதி தேவியின் கச்சபி என்ற வீணையின் நாதத்தைத் தோற்கடித்தவள் என்று கூறப்பட்டிருக்கின்றது.

சங்கரர் தமது ஸௌந்தர்ய லஹரி 66-வது சுலோகத்தில் கூறுகின்ருர்: ஒருசமயம் அம்பாளின் சன்னிதியில் சரஸ்வதி வீணை வாசித்தாளாம் அம்பாள் அதனைக்கேட்டு சில புகழுரை செப்பினுளாம். அம்பாளின் சொல்லின் இனிமையைக் கேட்ட ஸரஸ்வதி இந்தச் சொற்களின் இனிமைக்கு என் வீணை எம்மட்டு? என்று நினைத்துத் தன் வீணையை உரையில் போட்டு மூடி விட்டாளாம். அவ்வளவு மதுரம் அம்பாளின் சொல். பண்ணளிக்கும் என்பதற்கு வேறு உரை கூறியுள்ளனர். இங்கு "கேட்பவர் செவிக்கு இன்னிசை விருந்தளிக்கும் சொல் என்று பொருள் கொண்டோம் முன்னே பலகோடி தவங்கள் செய்வார்" என்பது லலிதா

ஸஹஸ்ரநாம உத்தரபாகம் 74. 75 சுலோகங்களில் “எவனுல் கோடிக்கணக்கான ஜன்மங்களில் இதர தேவதைகளின் நாமாக்கள் கீர்த்தனம் செய்யப்பட்டனவோ அவனுக்கு மட்டும்தான் அம்பாளின் நாமகீர்த்தனத்தில் சிரத்தையுண்டாகின்றது. எவனெருவனுக்கு கடைசி ஜன்மாவே அவனுக்கே இது கிட்டும்” என்று கூறப்பட்டிருக்கின்றது. இதுபோலவே ருத்ரயாமளத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றது.

லலிதா ஸஹஸ்ர நாமத்தில் 100, 101-வது சுலோகங்களிலும் 485 முதல் 494 முடிய நாமாக்களிலும் சியாமளாதேவி வர்ணிக்கப்படுகிருர். அவள் ஹ்ருதய கமலமான அனுகதத்தில் இருப்பவள். இரண்டு முகங்களோடு கூடியவள் அக்ஷமாலையை உடையவள் என்று கூறப்பட்டிருக்கிறது. 486வது நாமா “ச்யாமாபா” “யாமளா” யாமளம் என்ற சொல்லுக்கு இளமை. பச்சை என்ற பொருள்கள் உண்டு. அதோடு யாமளா என்பதே தேவியின் பெயர்களில் ஒன்று. அம்பாளின் நிறம் பச்சை என்பது முன்பும் சொல்லப்பட்டது. “நீலி” என்று அம்பாளைச் சொல்வார்கள். சியாமளா என்றதின் திரிபு யாமளா “நீலோத் பலத்யுதே” என்கிருன் காளிதாஸன். அதாவது கரு நீலமலர் போன்று அழகுடையவள் என்று பொருள். உபாஸனு பேதத்தைப் பொருத்து நிறமும் மாறும். “பைங்கிளி” அடுத்த பாட்டிலும் அம்பாளைக்கிளி என்று வர்ணிப்பதால் அங்கு விரித்துரைப்போம்.

16-வது பாட்டு

## அடியேனையும் ஆண்டு கொண்ட அதிசயம் கண்டோமே.

கிளியே! கிளைஞர் மனத்தே கிடந்து கிளர்ந்தொளிரும்
ஒளியே! ஒளிரும் ஒளிக்கிடமே! எண்ணில் ஒன்று மில்லா
வெளியே! வெளிமுதற் பூதங்களாகி விரிந்த அம்மே
அளியேன் அறிவளவிற்களவானது அதிசயமே.

பதவுரை

| | |
|---|---|
| கிளியே!: கிளியே! | |
| கிளைஞர் மனத்தே கிடந்து | உன்னையே அண்டின உறவினரான சாதகர்களின் உள்ளத்தில் இருந்து |
| கிளர்ந்து ஒளிரும் | மேலும் மேலும் ஓங்கிவளரும் |
| ஒளியே! | பிரகாசமே! |
| ஒளிரும் ஒளிக்கு | தோற்றமாய் இருக்கின்ற ஒளிகளாகிய சந்த்ர சூரிய அக்னிகளின் |
| இடமே | ஆதாரமாய் இருப்பவளே! |
| எண்ணில் | ஆராய்ந்து பார்க்குமிடத்து |
| ஒன்றுமில்லா வெளியே | ப்ரக்ருதி சம்மந்தமே இல்லாத வெரும்பாழே! |
| வெளிமுதற் பூதங்களாகி | ஆகாயம் முதலாக உள்ள பஞ்ச பூதங்களாக |
| விரிந்த | விகஸித்த |
| அம்மே | யாவற்றிற்கும் தாயே! |
| அளியேன் | இரக்கத்துக்குரிய அடியேனது |
| அறிவு அளவுக்கு அளவான | சிற்றறிவிற்கும் அளவாக |
| ஆனது | உன்னைக்சுருக்கிக்கொண்டது |
| அதிசயமே | வியக்கத்தக்கதே |

பொழிப்புரை

கிளியே: சாதகர்கள் மனத்தினில் எப்பொழுதும் இருந்து ஒளிவீசிக் கொண்டிருக்கும் பிரகாசமே! உனது ஸ்வரூபத்தை ஆராய்ந்து பார்த்தபோது அருவமாய் சுத்த சைதன்யமானய் வெறும் பாழாக இருப்பவளே! ஒளியுருவாக இருக்கும் சூர்யன் சந்த்ரன் அக்னி என்ற முச்சுடருக்கும் ஆதாரமாய் இருப்பவளே! பஞ்ச பூதங்களாக சங்கல்ப மாத்ரத்தில் விரிந்து விளங்குபவளே!

இத்தகையது என்று கூற முடியாத அப்ராக்ருதமான பேரொளியானது எளியேனது சிதாகாசத்தின் அளவுக்குத்தக்கபடி என் சிந்தையிலும் நிறைந்து இருப்பது அதிசயமல்லவா.

விரிவுரை

இப்பாடலுக்கும் சாக்தசித்தாந்த பரமாகவே உரை கூற முற்படுகிறேன். கிளியே! என்றார். அம்பாளை "கிளி" என்று பல புலவர்களும் கூறியிருக்கிறார்கள். மந்தர தந்தர சாஸ்த்ரங்களிலும் அம்பிகையைகிளியாகக் கூறப்பட்டிருக்கின்றது. லலிதாத்ரிசதியில் "ஹ்ரீங்கார பஞ்ஜரசுகி" என்றும் (215) "ஹ்ரீம்கார தருசாரிகா" என்றும் (286) கூறப்பட்டிருக்கிறது. அதாவது ஹ்ரீம் காரமாகும் கூண்டில் பிரகாசிக்கும் கிளி என்றும் ஹ்ரீரகாமாகும் மரத்தில் வஸிக்கும் பெட்டைக்கிளி என்றும் வர்ணிக்கப் பட்டிருக்கிறது. கிளி அழகாக இருப்பதோடு, தனது பேச்சும் இனிமையாய் இருக்கப்பெற்றது. அதை வளர்ப்பவர்களுக்கு மனதில் சந்தோஷத்தைக் கொடுக்கக்கூடியது. மேலும் மனிதர்களுடன் பழகி அவர்களைப்போல பேசும் திறமையும் வாய்ந்தது. அது போலவே பரதேவதையும் உபாஸகர்களின் பக்குவத்தை யறிந்து அதற்குத்தக்கபடி கர்மோபாஸனை பலன்களையும் ஞானத்தையும் ஈந்து ஜீவர்களை சந்தோஷிப்பிக்கின்றவள் என்பது சங்கரபாஷ்யம் அதுவேயன்றி அம்பாளைக் கிளி யென்பதில் ஓர் விசேஷார்த்தமும் இருக்கிறது.

கிளியின் உடல் பச்சை. அதன் மூக்கு சிவப்பு. ஒரே உடலில் சிவப்பும் பச்சையும் சேர்ந்து இருப்பது. சிவனுடைய உருவம் சிவப்பு. செந்தழல் மேனியன், செந்தாமரைக் காடனைய மேனி, பவளமால்வரை என்றெல்லாம் வருவது காண்க. அம்மையின் நிறம் பச்சை. இவ்விரண்டு நிறங்களும் கலந்திருப்பது சிவசக்தி சம்மேளனத்தைச் குறிக்கும். "பாதித்திருவுருபச் சென்றவர்" என்று வருவதும் காண்க. சக்தி சக்தனன்றித்தனித்து இயங்காது அதுபோல சக்தன் சக்தியின்றித் தனித்து இயங்கான். இரண்டும் சேர்ந்தே பூர்ணவஸ்து வாகின்றது. இந்ததத்துவத்தை விளக்கவே அம்பாளைக் கிளியென்று சாக்ததந்தர சாஸ்த்ரங்கள் கூறுகின்றன.

சங்கரரும் "ஓங்காரபஞ்ஜரசுகீ" என்று கூறுவதும் காண்க. கிளைஞர் மனைத்தே---ஒளியே. என்பது சாக்த சாதகர்களும், குண்டலினி யோகம்பயிலும் யோகிகளும். குண்டலினி ஷட்சக்ர

பேதனம் செய்து கொண்டு மேல் ஏறும் போது ஆங்காங்குசில ஒளிகளை ஆந்தரத்ருஷ்டியில் காண்பார்கள் ஆதலால் ''கிளர்ந்து ஒளிரும் ஒளி'' அதாவது மென்மேல் எழுகின்ற ஒளி என்றார் என்க. இது ஆசிரியரின் உயர்ந்த அனுபவ நிலையைக் காட்டுகின்றது. ஒளிரும் ஒளிக்கு இடமே. நமதுத்ருஷ்டிப்புலனாகி ஒளிர்கின்ற முச்சுடர்களுக்கும் அவளே ஆதாரம் என்றார். சங்கரர் ஸௌந்தர்ய லஹரி 19வது சுலோகத்தில் ''ரவீந்துஸ்தனயுகாம்'' அதாவது சூர்ய சந்த்ரர்களை தனது இரண்டு ஸ்தானங்களாக உடையவள் என்றும் 48வது சுலோகத்தில் அம்பாளின் வலது கண் சூர்யனாகவும் (தவஸவ்யம்நயனம் அர்க்காத்மகதயா) இடது கண் சந்த்ரனாகவும் (தேவாமம் நயனம் ரஜனிநாயகதயா) என்றும் வர்ணித்திருக்கிறார்.

அதோடு அம்பாளின் நெற்றிக்கண்ணானது அக்னி நேத்ரம் என்று கூறப்பட்டிருக்கின்றது. ஆக முச்சுடர்களும் அம்பாளின் திவ்யத்திருமேனியின் அவயவங்களாக இருப்பதால் அவற்றிற்கு அம்பாள் ஆதாரமாகின்றாள். ''எண்ணில் ஒன்றும்மில்லா ஒளியே'' ஆராய்ந்து பார்த்தால் ஜகத் காரணவஸ்துவான சிவசக்தி மிதுனங்களுக்கு உருவம், நாமம், காலம், இடம், உபாதி, யாதொன்றும் இல்லாமல் இருப்பதால் வேதாந்த சித்தாந்த சாஸ்த்ரங்கள் அதனைப்பாழ்' என்றே கூறிப்போந்தனர். பாழ் என்பதால் சூன்யம் என்று பொருளல்ல. சூன்யத்தினின்று எதுவும் தோன்றாது. பாழ் என்று சொன்னவர் அது சூன்யமல்ல என்று எடுத்துக் காட்டுவதற்காக ''வெளிமுதற் பூதங்களாகி'' என்று விவரிக்கின்றார்.

அநாதியிலே வெளியில் விளைந்த வெறும் பாழைப் பெற்ற வெறும் தனியை என்ற அருணகிரியாரின் வாக்கையும் நோக்குக. பாழ் என்றது பொறிபுலன் கரணம் முதலியவை பாழாகிய இடம் அவை இறந்த இடம் ''முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனிய மாய்அப்பாழும்பாழாய் அறும்'' என்றதிருவாக்கு சிந்தனைக்குரியது. விரிந்த அம்மே! என்றார். அதாவது அம்மையே புவனமாக மலர்கின்றார். விரிகின்றாள். ஒன்றாய் இருந்தது பலவாகப் பரிணமிக்கின்றது. ''அறிவளவிற்களவான'' சாந்தோக்ய உபநிஷத்தின் 8வது ப்ரபாடகம் முதலாவது கண்டத்தில் சிஷ்யன் குருவைப் பார்த்து இந்த சரீரம் மிகச்சிறியது அதில் இருக்கும் ஹ்ருதயமோ அதை விடச்சிறியது அதற்குள் எப்படி ஓர் மஹத்தான ப்ரம்ஹ வஸ்து இருக்கக்கூடும்? என்று கேட்டதற்கு குருபதில் சொல்கின்றார் (3வது மந்தரம்) ஹ்ருதயாகாசம் எப்படி இருக்கின்றது என்றால் இதோ காணப்படுகின்ற பௌதிக ஆகாசத்தை விடப் பெரியது,

எப்படி யெனில் சிருஷ்டிக்கப்பட்ட ப்ரபஞ்சத்தில் இருக்கும் ஸர்வமும் ஹ்ருதயாகாசத்தில் அடங்கியிருக்கின்றன எப்படி ஓர் சிறு ஆலம்விதையில் மரம் ஒடுங்கிக்கிடக்கின்றதோ அதுபோல ப்ரம்ஹும் என்பது ''அணோரணீயான் மஹதோமஹீயான்'' அணுவை விடச்சிறியது. மிகப் பெரியதை விடப் பெரியது. இவ்வாறு ஜீவர்களுடைய ஹ்ருதயத்தில் அதனுடைய அளவுக்குச் சரியாக சைதன்ய கேவலமான ப்ரம்ஹவஸ்து இருக்கின்றது. இது ஆச்சரியமல்லவா? அளியேன் என்பதை அருளைப்பெற்ற அடியேன் என்றும் பொருள் கூறுவர். அங்கே அருளைப்பெற்றதான ''தான்,, என்ற அறிவு இருப்பதாலே அப்பொருள் பொருந்தாது. பிறர் கண்டு இரக்கப்படும் படியான நிலையில் இருக்கும் அடியேன் என்றது சிறந்ததாகக்காண்கின்றது. எளியவன் என்று பொருள். ''அளியன் தானே முதுவாய் இரவலன்'' என்று வருவதும் காண்க. ஒளி ''தடில்லதாஸமருசி''. என்றும் ''வித்யுல்லேகாஇவபாஸ்வரா'' என்றும் வருவது காண்க. அதாவது மின்னல் கொடிக்கு ஸமானமான காந்தயுடையவள். அம்பாள் (குண்டலினி) ஸஹஸ்ராரத்தில் இருக்கும்போது இப்படி கோடி சூர்யப்ரகாசமாய் இருப்பதாகக் கூறப்படுகிறது. இதனை ஞானகாசப்ரகாசம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்தப் பாடல் ஸ்ரீமுக பஞ்சசதீ என்ற கிரந்தத்தின் ஸ்துதிசதகத்து 90வது சுலோகத்தை நினைவூட்டுகின்றது. அங்கும் அம்பாள் குண்டலினிரூபமாக ஸஹஸ்ராரத்தில் இருக்கு அனுபவம் கூறப்பட்டது. இங்கும் அதுவே.

---

17வது பாட்டு.

## யோகி யோகியானது.

அதிசய மானவடிவுடையாள் அரவிந்தமெல்லாம்
துதிசய வானன சுந்தரவல்லி துணையிரதி
பதிசய மானதபசயமாகமுன் பார்த்தவர்தம்
மதிசய மாகஅன்றோ வாமபாகத்தைவவ்வியதே!

பதவுரை.

அதிசயமான: ஆச்சரியத்தை விளைவிக்கக்கூடிய
வடிவுடையாள்: அழகிய திருமேனியை உடையவள்
அரவிந்தமெல்லாம்: தாமரை மலர்கள் அனைத்தும்
துதி: துதி செய்கின்றதான
சயவானன: வெற்றியை அடைந்த திருமுகமுடைய
சுந்தரவல்லி: அழகிய பூங்கொடி போன்றவள்
துணைஇரதிபதி: இரதியின் துணைவனும் பதியுமான மன்மதனின்
சயமானது: தோல்வியே கண்டறியாத வெற்றியானது
அபசயமாக: தோல்வியுறும்படி
முன்பார்த்தவர்: முற்காலத்தில் நோக்கிய சிவபெருமானின்
மதி: சங்கல்பமானது
சயமாகவன்றோ: வெற்றிபெறுவதற்காக வல்லவா
வாமபாகத்தை: சிவபெருமானின் இடது பாகத்தை
வவ்வியது: ஆக்ரமித்தது

பொழிப்புரை

அதிஅற்புதமான அழகேஉருவாக அமைந்தவளும் தாமரை மலர்கள் எல்லாம் தம்மில் எஞ்சிய முகாரவிந்தத்தைக்கண்டு துதி செய்யும்படியான ஜயத்தை உடையவளும் அழகிய பூங்கொடி போன்றவளுமான பராசக்தி தோல்வியே அறியாத மன்மதனும் தோல்வியுறும்படி தமது கண்ணால் பார்த்துச் சுட்டெரித்த பரமசிவனது சங்கல்பமானது ஈடேறவன்றோ அவனுடைய இடது பாகத்தை ஆக்ரமித்துக்கொண்டாள்.

விரிவுரை

இந்தப் பாட்டில் வரும் அரவிந்தமெல்லாம் துதி என்ற கருத்தையும் பரமசிவன் காமதகனம் செய்த கருத்தையும் ஒருங்கே

வைத்து அம்பாளின் முகலாவண்யத்தை சங்கரரும் ஒரே சுலோகத்தில் வைத்து வர்ணித்திருக்கிறார். (சௌந்தர்யலஹரி 45வது சுலோகம்) அங்கு ''பரிஹஸதி பங்கேருஹருசிம்'' என்றார் அதாவது தாமரஸ புஷ்பத்தின் அழகு, மென்மை, மணம், நிறம் இவற்றை அவமானப்படுத்துகிறது என்று பொருள்.

அந்த சுலோகத்திலேயே ''ஸ்மரதஹனசக்ஷுர் மதுலிஹ மாத்யந்தி'' என்றார். அதாவது மன்மதனை எரித்தவரான பரம சிவனுடைய கண்களாகிற தேனிக்கள் மயக்கத்தை அடைகின்றன என்றார். இந்த இரண்டு பாடல்களும் ஒப்புநோக்கி மகிழத்தக்கன ஈடு இணையற்ற அப்ராக்ருத ஸௌந்தர்யமாகையாலே அதிசயமான வடிவு என்கின்றார். வல்லி என்றதால் அது தாவிப்படரக் கொழுங் கொம்பு தேவை என்பதையும் குறிப்பாய்க் காட்டுகின்றார். சக்தியாகிற கொடி சிவமாகிற கொம்பையன்றி வேறு எங்கு படர முடியும்? துணை இரதிபதி என்றால் இரதியும் மன்மதனும் இணை பிரியாத மிதுனங்கள். இருவரும் சேர்ந்தேதான் செயலாற்றுவர். கந்தபுராணம் காமதஹனப் படலத்திலும் இரதியும் மதனனும் சேர்ந்தே கயிலை சென்றனர் என்று கூறப்பட்டிருக்கிறது இணை பிரியாமல் ஒருவருக்கொருவர் துணையாக நின்றே செயல்படுவாராதலின் துணை இரதிபதி என்றார்.

''பார்த்தவர்'' என்ற சொல் கந்த புராணம் காமதகனப் படலம் 89வது செய்யுளில் ''விட்டவெம் பகழியைந்தும் வியத்தகு விமலன் மீது பட்டலும் சிறிதே வேளைப் பார்த்தனன்'' என்றே பிரயோகித்திருப்பது கொண்டு ஈண்டும் அதையே கூறிற்று. வாம பாகத்தை வவ்வியது: லலிதாஸஹஸ்ரநாமத்தில் 861 வது நாமா ''காந்தாரத விக்ரஹா'' என்பது. அதாவது தனது பர்த்தாவின் சரீரத்தில் பாதிபாகத்தை உடையவள், இதற்கு உரை எழுதிய பாஸ்கரராயர் சாக்த மதஸ்தராகையாலே ''அம்பாளை பிரதானமாகச் சொல்லி அவள் சரீரத்தில் பரமசிவன் பாதியாக இருக்கிறார்'' என்று பொருள் கூறுகிறார். அதுவும் சரியே. மதிசயமாக என்ற சொற்றொடருக்கு உரிய பொருள் யாதெனில் நிருபாதிகஸம்வித் ரூபமாய் ''ஸத்'' தாகத் தனித்திருந்த ப்ரம்ஹம்'' நான் பஹுவாக விரிவேன் என்று சங்கல்பித்தது. அந்த ஸங்கல்பத்தின் விளைவுதான் சக்தியின் ஸ்புரணம் (தோற்றம்) ''ஸதேவமக்ரமாஸீத்'' ததைக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயேய இதி'' என்ற சுருதி வாக்கியங்கள் முன்பே விளக்கப்பட்டன.

இந்த ஸங்கல்பம் வெற்றியடைய வேண்டுமானுல் சக்தியின் தோற்றமின்றி வேறு எவ்வகையிலும் முடியாது. பார்த்தவர் நம்மதி என்றதற்கு பரமசிவனுடைய எண்ணம் சங்கல்பம் என்று பொருள்.

மதி என்ற சொல்லுக்கு புத்தி, நினைவு, விருப்பம் என்ற பொருள்கள் உள: மதி சயமாவது. விருப்பம் நிறைவேறுவது: எண்ணம் ஈடேறுவது என்று பொருள், சயம் என்பது ஜயம் என்றதின் திரிபு இறைவனுல் உள்ளத்தில் விஞ்ஞானிகளும் Static மதித்தது அல்லது எண்ணியது என்று பொருள். மேனுட்டு Energy அக இருப்பது Potential Energy ஆக மாறிபின் Kinetic கவிரியும் என்பார்கள். Static Energy என்பதுதான் ''ஸ்தாணு' என்ற சொல்லால் குறிப்பிடப்பட்டது. அசையாதது என்று பொருள் அதினின்று சக்தி ஸ்புரண மாகும் போது அது Potential ஆக மாறுகிறது. பின்புபிரபஞ்சமாகவிரியும்போது Kinetic Energy என்கின்ருேம் இறைவனை சிருஷ்டியுந்முகமாக்குபவள் பரா சக்தி. அவளிடத்திலிருந்தே பிறந்து பின் அவனின்றும் பிரிந்து விரிக்கின்ருள். சிவத்திலிருந்து சக்திமுதல் முதல்தோன்றும் அவசரமே அர்த்தநாரி என்ற முகூர்த்தம்.

இடது பாகத்தை வவ்வியது ஏன்? மனிதர்களுக்கு இருப்பது போலவே இறைவனுக்கும்ஹ்ருதயம் இடதுபக்கம்இருக்கவேண்டும் என்றதாலும் ஹ்ருதயமே துடிப்பு(Vibration)க்கு இடமாக இருப்பதாலும் சிவத்தில் எற்படும் துடிப்பே சக்தியாதலாலும் அம்பாளை இடது பாகத்தில் வைப்பது மரபு. இப்பாட்டில் இருக்கும் காவ்ய ரசனையும் மகிழ்ச்சியை யூட்டுகின்றது. மன்மதனையே எரித்து காம வாஸனையே இல்லாத பரமசிவனையும் அம்பாள் தனது அற்புதமான வடிவழகால் மயக்கி அவன் சரீரத்தில் பாதியையும் ஆக்ரமித்துக் கொண்டாள். இணைபிரியாமல் இருவரும் சேர்ந்தே தொழில்படும் ரதி மதன மிதுனங்களில் மன்மதனை எரித்து ரதியை பிரித்தார். அதற்கு பழிவாங்குவது போலவும் அவனுக்கு மறுபடியும் உயிர் கொடுப்பதற்காகவும் சக்தி பரமசிவனின் சரீரத்தை ஆக்ரமித்து யோகியை போகியாக்கினுள்.

சக்தியைப் பிரிந்திருந்த சிவம் மன்மதனை எரித்தது சக்தியுடன் சேர்ந்தவுடன் மன்மதனுக்குப் பத்துயிர் வழங்கப்பட்டது. அதனுல் அம்பாளை "'ஹரநேத்ராக்னி ஸம்தக்த காம ஸஞ்ஜீவ நௌஷதி" என்று ஸகஸ்ரநாமமும் கூறுகின்றது. அதாவது பரமசிவனுடைய

நெற்றிக்கண் அக்கினியால் பஸ்மீகரமாக்கப்பட்ட மன்மதனுக்கு ஸஞ்சீவி என்ற மூலிகை போல இருந்தவள் என்று பொருள். இதற்கு பாஷ்யம் எழுதிய பாஸ்கரராயர் ஓர் அறிய பெரிய கருத்தைக் கூறியிருக்கிறூர். பரமசிவத்தைப் பார்க்குமுன் தேஹத்தோடு இருந்தான். அவன் எரிந்தபின் தேஹமில்லாதவனுனுன், அம்பாளின் கடாக்ஷத்தால் இரதியின் கண்களுக்கு மட்டும் தெரியும்படியான ஸூக்ஷ்ம தேஹத்தைப் பெற்ருன். அநங்கன் என்ற பெயரும் பெற்ருன். இதனுல் தெரிகிறது என்னவென்ருல் ஆன்மா அவித்யையினுல் சரீரத்தை அடைகின்றது பரமாத்மாவின் பார்வையால் அவித்யை விலகி சரீரம் நழுவி விடுகிறது பின் அது ப்ரஹ்ம சொரூபத்தை அடைகிறது என்று அழகாக கூறுகின்ருர் ஆழ்ந்து சிந்திக்கத் தக்க கருத்தல்லவா?

அதனுலேயே போலும் அபிராமி பட்டரும் பார்த்தார் என்ற பதப்ரயோகம் பண்ணுகின்ருர். இறைவனுல் பார்க்கப்பட்டால் சரீரப்ரக்ஞை ஒழிந்து ஆத்ம ஸாக்ஷாத்காரம் உண்டாவது இயல்பு என்பதையே காமதஹன விருத்தாந்தம் சூசிப்பதாக பாஸ்கர ராயர் கருதுகின்ருர்.

---

18-வது பாட்டு

## காலனுர் வந்துற்ற போது காட்சி தந்தருளல் வேண்டும்.

வவ்விய பாகத்திறைவரு நீயுமகிழ்ந்திருக்கும்
செவ்வியுமுங்கள் திருமணக்கோலமுஞ் சிந்தையுள்ளே
அவ்வியந்தீர்த்தென்னை யாண்ட பொற்பாதமுமாகி வந்து
வெவ்விய காலனென்மேல் வரும்போது வெளி நிற்கவே.

பதவுரை

வவ்விய பாகத்து இறைவரும்: உன்னால் ஆக்ரமிக்கப்பட்ட இடது பாகத்தையுடைய சிவபெருமானும்

நீயும்: அவரது இடது பாகத்தை விட்டகலாத பராசக்தியாகிய நீயும்

மகிழ்ந்திருக்கும் செவ்வியும்: நீங்கள் இருவரும் இணைந்து மகிழ்ந்திருக்கும் காட்சியின் அழகும்

உங்கள் திருமணக்கோலமும்: உங்கள் இருவரின் திருக்கல்யாணக் கோலமும்

என் சிந்தையுள்ளே: என் உள்ளத்தில் எப்பொழுதும் இடைவிடாது வதிந்து இருப்பதால்

அவ்வியம்: எனது மனக்கோணல்களை

தீர்த்து: நசிக்கச்செய்து

என்னை ஆண்ட: அடியேனை ஆட்கொண்ட

பொற்பாதமும் ஆகிவந்து: பொலிவுபெற்ற திருவடிகளாகி வந்து

வெவ்விய காலன்: கொடிய யமன்

என்மேல் வரும்போது: என்னை எதிர்த்து வரும்போது

வெளி நிற்கவே: (என்முன்) வெளிப்பட்டு நின்றருளல் வேண்டும்.

பொழிப்புரை

அடியேனுடைய சிந்தையில் அம்பிகையாகிய நீயும் உன்னோடு பாதி உடலாக இருக்கும் இறைவனும் அர்த்தனாரி சொரூபமாகவும், இருவரும் பிரிந்து பின் ஒருவரை ஒருவர் மணந்துகொண்ட கல்யாணத் திருக்கோலமுன் எப்பொழுதும் நிலவி வருவதால் என்னை கொடிய காலன் உயிர்கொள்ள வரும்போது என்னுடைய

மனக்கோணல்களை நீக்கி ஆண்டருளிய உன் திருவடி தரிசனம் தந்து ரட்சிக்க வேண்டும்.

விரிவுரை

ஸத்தாக இருந்த சிவத்தில் முதன் முதலில் சக்தி தோன்றி இருவரும் அர்த்தநாரியாக இருந்து பின்பு சக்தி சிவத்தினின்றும் பிரிந்து மறுபடியும் இருவரும் சேர்ந்து ப்ரபஞ்சத்தைத் தோற்றுவித்தனர் என்பது வேத சம்மதமான கருத்து. அர்த்தநாரியாக இருவரும் ஒன்ருய் இருக்கும் காட்சி சாக்த உபாஸகர்களுக்கு ஸஹஸ்ராரத்தில் தோன்றுவது. பின்பு சக்தியும் சிவமும் வெவ்வேருக ஆனல் ஒருவரைவிட்டு ஒருவர் பிரியாமல் இருக்கும் காட்சி மூலாதாரம் முதல் ஏனைய ஆதாரங்களில் தோன்றும் காட்சி, ஆங்காங்கு அந்தந்த சிவசக்திகளுக்கு வெவ்வேறு பெயர்களும் ரூபங்களும் உண்டு. ஸஹஸ்ராரத்தில் மட்டும் அர்த்தநாரியாக இருப்பார்கள் மற்ற இடங்களில் தம்பதிகளாக இருப்பார்கள். இந்தக் கருத்தை ஸௌந்தர்யலஹரி ''மஹீம் மூலாதாரே'' என்ற 9-வது சுலோகத்திலும் ''ஸுதாதாரர்'' என்ற 10-வது சுலோகத்திலும் அவற்றின் வியாக்யானங்களிலும் கண்டு தெளிக. ''அவ்வியம்'' ஔவியம் என்றது எதுகையை முன்னிட்டு அவ்வியமாயிற்று. கபடு, பொருமை, வஞ்சகம், மனக்கோட்டம் என்ற பொருள்கள் உண்டு. இங்கு மனக்கோட்டம் என்ற பொருள் சிறப்பாகக் கொள்ளப்பட்டது.

மனதில் ஏற்படும் விகாரங்களை அதாவது சித்த விருத்திகளை பதஞ்ஜலியோக சூத்ரத்தில் விபர்யயம், விகல்பம், நித்திரை, ஸ்மாணம் என்று கூறப்பட்டிருக்கின்றது. விபர்யயம் என்பது ஒரு வஸ்துவில் அதற்கு மாருன வேருெரு வஸ்துவைக் காண்பது. கயிற்றில் பாம்பு, சிப்பியில் வெள்ளி போன்று. விகல்பம் என்பது ''என் ஆத்மா'' என்றவிடத்து நானும் ஆன்மாவும் வேறு போலக்கூறுவது. நானே ஆத்மாவாக இருக்க என் ஆத்மா என்றது விகல்பத்தால் உண்டாவது. நித்திரை என்பது அபாவம். எதையும் அறியாதிருத்தல். ஸ்மாணம் என்பது முன் கண்டு அனுபவித்த இன்பதுன்பங்களை நினைத்துக்கொண்டு அந்த நினைவிலேயே அந்த இன்ப துன்பங்களை அனுபவிப்பது. இந்த நான்கும் அவித்தையால் ஏற்படுவன. அவித்தையோ அஹங்கார மமகாரங்களால் ஏற்படுவது. ஆக இங்கு அவ்வியம் என்பதை சுருக்கமாக அகங்கார மமகாரம் என்றே கூறிவிடலாம். அதைத்தான் ஆணவ மலம் என்று ஆன்ருேர் கூறுவர்.

ஆணவத்தை அழிப்பது. ஆன்மா சுதந்திரன் என்ற எண்ணம் நீங்கி பரதந்திரன் என்று அறிவு பெறுவது. காலன் வரும்போது எழுந்தருளிக்காக்க வேண்டுமென்ற பிரார்த்தனையை எல்லா மெய்யடியார்களும் கேட்டிருக்கிறார்கள்.

அப்பரடிகள் ''சாதல் நாள் நாயேன் உன்னை எங்குற்றாய் என்ற போதால் இங்குற்றேன் என் கண்டாயே (4·75·8) என்கின்றார். அருணகிரியார் தமது நூல்கள் ஒவ்வொன்றிலும் பலதடவை இந்த பிரார்த்தனையைச் செய்கின்றார். " உயிர் மங்கும் பொழுது கடிதே மயிலின்மிசைவர வேண்டும்". (திருப்புகழ்) கார்மா மிசைகாலன்வரிற் கலபத்தேர்மாமிசை வந்தெதிர்ப்படுவாய் (அநுபூதி) ''கூற்றுவன் பாசத்தினால் பிடிக்கும்பொழுது வந்து அஞ்சலென்பாய்" (அலங்காரம்) இப்படிப்பல இடங்கள். அம்பிகையை ''இறுகிய சிறுபிறை யெயினுடை யமபடர் எனதுயிர் கொளவரின் யானேங்குதல் கண்டு எதிர் தானேன்று கொளுங்குயில்" என்று திருவகுப்பில் கூறுவது அடியார்களின் மரண காலத்தில் அம்பிகையே வந்து அஞ்சல் என்பாள் என்றக்கருணைத் திறத்தை அழகாகப் பாடியுள்ளார். இப்பாடலில் பிரார்த்தனை செய்வதோடு சாதனையும் கூறப்பட்டது. அம்பாளை சதா தியானம் செய்து தமது உள்ளத்தில் இருத்தி வைப்பவர்களுக்கே அவள் மரண சமயத்தில் தரிசனம் தருவாள் என்பது குறிப்பாய்க்காட்டப் பட்டது.

யோக ஸாதகர்களுக்கு அதாவது அம்பாளை (குண்டலினியை) ஆதார ஸ்தானங்களிலும் ஸஹஸ்ராரத்திலும் தரிசிக்கும் இருப்பதனால் உயிர் போம் பொழுதும் அவளே வருவாள் என்றாயிற்று.

19-வது பாட்டு

## அம்பாளின் ஸ்தூல ஸூக்ஷ்ம ரூபங்கள்

வெளி நின்ற நின் திருமேனியைப்பார்த்து என் விழியும் நெஞ்சும்
களி நின்ற வெள்ளம் கரைகண்டதில்லை கருத்தினுள்ளே
தெளிநின்ற ஞானம் திகழ்கின்றது என்ன திருவுளமோ
ஒளி நின்ற கோணங்கள் ஒன்பதும் மேவி உறைபவளே

பதவுரை

**ஒளி நின்ற:** பிரகாசம் பொருந்திய
**கோணங்கள் ஒன்பது:** நவகோணங்களிலும்
**மேவி உறைபவளே:** வியாபித்து வசிப்பவளே!
**வெளிநின்ற நின் திருமேனியைப்பார்த்து:** ஸ்தூலரூபமாய் அர்ச்சா மூர்த்தியாய் இருக்கும் உனது உருவத்திருமேனியை தரிசித்து
**என் விழியும் நெஞ்சும்:** புறத்தே கண்ட கண்களும் அகத்தே கண்டஎன் உள்ளமும்
**களி நின்ற வெள்ளம்:** நிறைந்து நிற்கும் ஆனந்தவாரிதி
**கரைகண்டதில்லை:** எல்லையற்றதாக இருக்கின்றது
**கருத்தினுள்ளே:** (அதன் காரணமாக) எனது சிந்தையில்
**தெளிநின்ற ஞானம்:** தெளிந்தமெய்ஞ்ஞானம்
**திகழ்கின்றது:** ஒளி செய்கின்றது
**என்ன திருவுளமோ:** இதுவும் உன் திருவுளக்குறிப்போ ?

பொழிப்புரை

நவகோணயந்த்ரத்தில் இருப்பவளே உன்னுடைய உருவத்திரு மேனியை தரிசித்து விழியும் நெஞ்சும் ஆனந்தமடைந்தன. அந்த ஆனந்தத்துக்கு எல்லையே இல்லை. அம்மட்டா? எனது சிந்தையுள்ளே விஷயாகார விருத்திகள் நீங்கித்தெளிந்த ப்ரம்ஹஞானமும் உதயமாகி விட்டது உன்னுடைய திருவருள் விலாஸம் எத்தகையது? நீயேதான் கூற முடியும்.

இந்தப்பாட்டில் ஆசிரியர் முதலில் அர்ச்சா ரூபமான அபிராமியம்மையின் விக்ரஹத்திருமேனியைக்கண்டார் அதினுல் எல்லையற்ற ஆனந்தமடைந்தார். அவளையே தியானம் செய்தார். அதன் காரணமாக அஞ்ஞான இருள் அகன்று மெய்ஞ்ஞானம் பெற்ருர். இதற்கு சாதகமாக இருந்த யந்த்ரபூஜையையும் நினைத்து அதன் ஒன்பது கோணங்களிலும் அம்பாளை தரிசித்ததையும் கூறுகின்ருர்.

அம்பாள் வழிபாட்டில் ஸ்ரீசக்ரபூஜை அதிக முக்யஸ்தானம் வகிக்கின்றது. அம்பாளின் ரூபங்கள் ஸ்தூலம், ஸூக்ஷ்மம், ஸூக்ஷ்மதரம், ஸூக்ஷ்மதமம் என்று நான்கு வகையாகக்கூறுவர். ஸ்தூலரூபம் ஆலயங்களில் பிரதிஷ்டை செய்யப்பட்ட விக்ரஹங்கள், அதை இப்பாட்டின் முதல்வரியில் "வெளிநின்ற நின் திருமேனி" என்பதால் கூறுகின்றார். பின்னால் "கருத்தினுள்ளே தெளிநின்ற ஞானம்" என்பதால் அம்பாளின் ஸூக்ஷ்மரூபம் கூறுகின்றார். ஸூக்ஷ்மரூபம் என்பது அம்பாளின் மந்த்ரரூபம். அது பஞ்சதசிவித்யா என்று கூறப்படும். இந்த மந்த்ர தியானத்தால் ஏற்படும் அனுபவத்தையே "கருத்தினுள்ளே தெளிநின்ற ஞானம்" என்றார் அடுத்தவரியில் "ஒளி நின்ற கோணங்கள் ஒன்பது" என்று அம்பாளின் அருவுருவத்திருமேனியாகின்ற ஸ்ரீசக்ரத்தைக்குறிப்பிடுகின்றார். ஸ்ரீசக்ரமானது சிவாத்மகமான் நான்குமேல் நோக்கிய முக்கோணங்களும ஐந்து கீழ் நோக்கிய சக்தியாத்மகமான முக்கோணங்கள்ஆக ஒன்பதும் சேர்வதால் மொத்தம் நாற்பத்தி மூன்று முக்கோணங்கள் உண்டாகின்றன. மத்தியில் இருக்கும் முக்கோணத்தின் நடுவே ஒரு பிந்துரூபம் வரைந்து அதில் சிவசக்திகள் அபின்னமாய் அர்த்தநாரியாய் தியானம் செய்யவேண்டும்.

இந்த 43 முக்கோணங்களுக்கு வெளியே "திரிவலயம் என்ற மூன்று வட்டங்கள் உண்டு. அவற்றிற்கு அடுத்து வெளியே எட்டு இதழ் கமலமும், அதற்கும் வெளியே பதினாறு இதழ் கமலமும் இருக்கும். இவற்றிற்கு வெளியே நான்கு திசைகளிலும் வாசல்கள் உடையனவாய் மூன்று சதுரங்கள் இருக்கின்றன. இவை மூன்றும் சேர்த்து பூபுரம் என்று பெயர். ஸ்ரீசக்ரத்தில் ஒன்பது பிரிவுகள் உண்டு. ஆவற்றிற்கு ஆவரணங்கள் என்று பெயர். ஸூக்ஷ்மதரம் என்பது காமகலாக்ஷரம் ஸூக்ஷ்மதமம் என்பது குண்டலினி. இவற்றைப்பின் விளக்குவோம். ஸ்ரீசக்ரத்தின் ஒன்பது கோணங்களுக்கும் அதிஷ்டான தேவதை பராசக்தியே யாகும். இந்தப் பாட்டில் திருக்கடவூர் அபிராமியை பிரம்மாபின்னமான சித்சக்தியாகவே கூறப்பட்டிருப்பது கவனிக்கத்தக்கது.

---

23-வது பாட்டு

## அம்பாள் நித்ய வாசம் செய்யும் ஸ்தலங்கள்.

உறைகின்ற நின்திருக் கோயில்நின் கேள்வர் ஒரு பக்கமோ
அறைகின்ற நான்மறையின் அடியோ முடியோ அமுதம்
நிறைகின்ற வெண்டிங்க ளோகஞ்சமோ என்றன் நெஞ்சகமோ
மறைகின்ற வாரிதியோ பூரணாசலமங்கலையே.

பதவுரை

பூர்ணாசல மங்கலையே!: பூரணமாயும் அசலமாயும் இருக்கும் நித்ய கல்யாணியே!
உறைகின்ற நின் திருக்கோயில்!: நீ நித்ய வாசம் பண்ணும் விசேஷ ஸ்தானங்கள்
நின்கேள்வர் ஒரு பக்கமோ: உன் கணவராகிய பரசிவத்தின் ஓர் பகுதியோ
அறைகின்ற: சப்திக்கின்ற—கோஷிக்கின்ற
நான்மறையின் அடியோ!: வேதங்களின் மூலமாகின்ற பிரணவமோ
முடியோ: வேதத்தின் முடிவாகிய உப நிஷதங்களோ
அமுதம் நிறைகின்ற வெண்திங்களோ!: அமுதம் நிறைந்திருக்கின்ற சந்திர மண்டலமோ.
கஞ்சமோ: அச்சந்த்ர மண்டலத்திலிருக்கும் ஸஹஸ்ரார கமலமோ
என்தன் நெஞ்சகமோ!: உன்னை இடைவிடாது தியானம் செய்யும் என்னுடைய உள்ளமோ.
மறைகின்ற வாரிதியோ: சாமானியருக்கு மறைந்து இருக்கும் பாற்கடலோ.

பொழிப்புரை

என்றும் பூரணமாயும், அசைவில்லாததாயும் இருக்கும் நித்ய கல்யாணியான அபிராமி அம்மையே! நீ நித்யவாசம் செய்யும் விசேஷ ஸ்தானங்கள் எவை எனின், உன்னுடைய கணவராகிய சிவத்தின் ஒரு பகுதியோ, உம்மிருவரின் புகழை கோஷம் செய்கின்ற நான்கு வேதங்களின் மூலமாகின்ற பிரணவமோ, அவ்

வேதங்களின் சிரோபாகமான உபநிஷதங்களோ, அமுதம் பெருகும் சந்திரமண்டலமோ, அம்மண்டலத்தில் இருக்கும் ஸஹஸ்ரார பத்மமோ, இடைவிடாது தியானம் செய்து கொண்டிருக்கும் அடியேனின் நெஞ்சத்தின் உள்புரமோ, சாமான்யர்களுக்கு மறைந்து நிற்கும் பாற்கடலோ என்று.

விரிவுரை

பிரபஞ்ச காரண வஸ்துவாகின்ற சிவம் அதோடு அபின்னமாய் இருக்கும் ஆற்றல் அல்லது சக்தியாலே தொழிற்படுகின்றது. நிரூபாதிகஸம்வித்ரூபமாயிருக்கும் பரமசிவத்தை சிருஷ்டியோந்முகமாக்குவது அச்சிவத்தில் அக்னியில் சூடுபோலஅபின்னமாயிருக்கும் ஆற்றல் அல்லது சக்தி சிவப் பரம் பொருள் ஆணலன், பெண்ணலன். அலியுமல்லன். ஆயினும் அவனது அளவற்ற ஆற்றலை சக்தி என்று பெண்பாலாகக் கூறுவதால் சிவத்தை அவளது கணவன் என்று கூறுவது மரபு. சக்தியே சிவத்தை தொழிற் படச் செய்வதை சிவஞான சித்தியாரில்

"சிவஞ்சத்தி தன்னையீன்றும் சத்திதான் சிவத்தை யீன்று
முவந்திரு வரும்புணர்ந்திங் குலகுயிரெல்லா மீன்றும்"

என்று கூறப்பட்டிருக்கின்றது. இருவரும் அபின்னமாய் ஒரே வஸ்துவின் இரண்டு பரிணாமங்களாய் இருப்பதால் "பாகத்திலொருவன் வைத்தான்" என்று கம்பனும், உண்ணாமுலை உமையாளொடு உடனாகிய ஒருவன் என்று சைவத் திருமுறைகளும் கூறுவது காண்க. ஆற்றலை ஆற்றலுள்ளவனிடமிருந்து பிரிக்க இயலாதல்லவா? சிவசக்தி சம்மேளனமே தொன்மைக்கோலம் என்பார் மணிவாசகப் பெருந்தகை.

"தோலும் துகிலும் குழையும் சுருள் தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்கவளையும் உடைத்தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பி!"

என்பது காண்க. "தோடுடைய செவியன்" என்றே தமிழ் மறை ஆரம்பிக்கின்றது.

சிவத்தினின்று சக்தி ஸ்புரணமாகுங்கால் தோன்றுவது விந்து நாதம். இவற்றை பரபிந்து, பரநாதம் என்று சாக்த சித்தாந்தம்

கூறும். இந்த பரநாதமே "பிரணவம்" என்ற ஏகாக்ஷர மந்திரம். இப்பிரணவமே வேதத்தின் முளை. அல்லது வித்து. அதுவே மற்றெல்லா மந்திரங்களுக்கும் ஆதி. ஆகையால் நான்மறைஅடி என்பது பிரணவத்தையே குறிக்கும். தமிழ் மறையில் முதற்றிருமுறை "தோ" என்ற ஓங்கார ஒலியோடு ஆரம்பித்து பன்னிரண்டாம் திருமுறை இறுதியில் உலகெலாம் என்று"ம்" என்ற எழுத்தில் முடிவது காண்க.

"வேத சிரஸ்" என்று புகழப்படுவது உபநிஷதங்கள். வேதம் உபாஸனா காண்டம், கர்ம காண்டம், ஞானகாண்டம் என்ற முப்பிரிவினையுடையது. உபாஸனா காண்டத்தில் ஸ்தோத்திரங்களும், காம காண்டத்தில் யாக யக்ஞாதிகள் செய்யுமுறையும் அவற்றின் மந்திரங்களும், ஞான காண்டத்தில் உப நிஷதத் தொகுதிகளும் உள்ளன.

உபாஸனையும் கிரியைகளும், ஞானத்தில் கொண்டு சேர்க்க சாதனங்களாக இருப்பதால், ஞானகாண்டமாகிற உபநிஷதங்களை "தேவசிரஸ்" என்று புகழ்ந்தார்கள். உபநிஷதங்களில் "கேனோபநிஷத்" என்பது ஒன்று. இது ஸாமவேதத்தைச் சேர்ந்தது. அதில் மூன்ருவது கண்டம் 25-வது மந்திரத்தில் "ஸர்வஸோபமானா உமா ஹைமவதீ" என்று அம்பிகையைக்கூறி அவளே தேவர்களுக்கு பிரம்மம் என்பதை தெளிவுறுத்தினுள் என்றும் ஓர் அழகான கதை உருவமாய் சித்தரிக்கப்பட்டிருக்கின்றது. ஆகையால் வேதமறிந்த அபிராமி பட்டரும் வேதத்தின் முடியோ என்ருர்.

இனி அமுதம் நிறைகின்ற வெண்திங்கள் என்பது என்ன? சாக்த சித்தாந்தத்தில் யோகமார்க்கம், உபாஸனா மார்க்கம் என்ற இரண்டு வழிகள் கூறப்பட்டிருக்கின்றன. இரண்டும் ஒரே இலக்ஷியத்தை உடையன. சரீரத்தில் மேருதண்டம் என்று சொல்லப்படும் முதுகு நடு எலும்பினுள் "சுழுமுனை" என்ற ஸுஷும்னா நாடி இருக்கின்றது. அதன் அடிஸ்நானத்திலிருந்து மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரம், அனாஹதம், விசுத்தி, ஆக்ஞா என்ற ஆறு ஆதார கமலங்கள் இருக்கின்றன. இவை ஆறுக்கும் மேல் "ஸஹஸ்ராரம்" என்ற ஆயிர இதழ் தாமரை இருக்கின்றது. இந்த ஆறு சக்ரங்களோடு இருக்கும் பிரதேசத்தை மூன்று கண்டங்களாகப் பிரித்து அவை முறையே கீழிருந்து மேலாக அக்னி கண்டம், [illegible] கண்டம் என்று சொல

லப்படும். ஓரோர் கண்டத்தின் முடிவிலும் "க்ரந்தி" என்ற முடிச்சு இருக்கிறது. இந்த முடிச்சுகள் சுழுமுனையில் இடகலை பிங்கலை இரண்டும் சேருவதால் உண்டாகின்றன.

ஒவ்வொரு கண்டத்திலும் இரண்டு ஆதார கமலங்கள் இருக்கின்றன. அக்னி கண்டத்தில் மூலாதார சுவாதிஷ்டான கமலங்களும், சூரிய கண்டத்தில் மணிபூர அநாஹத கமலங்களும், ஸோம கண்டத்தில் விசுத்தி ஆக்ஞா என்ற கமலங்களும் இருக்கின்றன. மூன்று கிரந்திகளுக்குக் கீழ் இருந்து மேலே, பிரம்ம கிரந்தி, விஷ்ணு கிரந்தி, ருத்ர கிரந்தி என்று பெயர். ஆக ஆறு ஆதாரங்கள், மூன்று கிரந்திகள், மூன்று கண்டங்கள் சேர்ந்த எண்ணிக்கை பன்னிரண்டாகின்றது. அதற்குமேல் இருப்பது ஸஹஸ்ராரம். பன்னிரண்டுமேல் இருப்பதால் "த்வாதஸாந்தம்" என்றும் பெயர். இதற்குத்தாள் சந்த்ர கலா மண்டலம் என்று பெயர். இது ஸம்பூர்ணமான கலைகளுடனும் அம்ருதமயமான கிரணங்களுடனும் இருப்பதாக பரசுராம கல்பசூத்ரம் முதலிய சாக்த கிரந்தங்கள் கூறுகின்றன.

யோகத்தினாலோ உபாஸனா பலத்தாலோ சாதகன் மூலாதாரத்தில் உறங்கிக்கொண்டிருக்கும் குண்டலினியை எழுப்பி "ஷட்சக்ரபேதனம்" அதாவது ஆறு ஆதார பத்மங்களையும் பேதித்துக்கொண்டு ஸஹஸ்ரார கமலத்தில் சேர்த்தால் அங்கு இருக்கும் ஸதாசிவனுடன் குண்டலினீ சக்தி சேரும்போது அவர்களின் சங்கமத்தால் ஏற்படு அம்ருதபிரவாகம் தேகத்தில் இருக்கும் 72,000 நாடிகளையும் நனைத்து சாதகனை ஜீவன் முக்தனாக்கி பிறப்பிறப்பில்லாத நிலையைக் கூட்டுவிக்கும். திருமூலர் திருமந்திரம், சித்தர் நூல்கள் முதலியன தமிழில் இந்த சாதனையை விளக்கியுள்ளன. ஆகவே "இதை அமுதம் நிறைகின்ற வெண் திங்களோ" என்று ஆசிரியர் கூறுவதுடன் ஸம்பூர்ணமான கலைகள் இருப்பதை "பூரண" என்ற சொல்லாலும் குறிப்பிடுகின்றார். கஞ்சமோ என்பது ஸந்திர மண்டலத்திருக்கும் ஸஹஸ்ரார கமலத்தை என்பதை நேயர்களுக்கு அறிவுறுத்த வேண்டியதில்லை; பின் என் நெஞ்சமோ என்றார். "ஒருவரும் ஈங்கறியா வண்ணம் என் உள்ளத்துள்ளே ஒளித்துவைத்த சிறையானை" (6·66·7) என்றார் அப்பரும்.

சாந்தோக்ய உபநிஷத்தில் எட்டாம் பிரபாடகம், முதலாவது கண்டம், முதலாவது மந்த்ரத்தில் ஹ்ருதயாகாசத்தில் எந்த பிரம்ம

வஸ்து இருக்கிறதோ அதைத் தேடவேண்டும் என்று ஆரம்பித்து ஒன்று முதல் மூன்று கண்டங்கள் முடிய நெஞ்சகத்தே இறைவன் வாசம் செய்வதைக் கூறுகின்றது. சாதகன் தியானம் செய்வது உள்ளத்தால்தானே. அந்த உள்ளத்தின் உள்ளொளியாய் இருப்பது சிவ-சக்தியே என்றதால் அம்பாள் உபாஸனை தீவிர பக்குவம் அடைந்த அபிராமி பட்டர் உள்ளத்தையே கோயிலாக்கொண்டு அம்பாள் வாசம் பண்ணுவதில் என்ன ஆச்சரியம். "மறைகின்ற வாரிதி" என்ற சொற்றொடருக்கு "துர்வாஸர் சாபத்தால் இந்திரனுடைய ஐச்வர்யங்கள் எல்லாம் மறையப் பெற்றதாய் உரையாசிரியர்கள் கூறுவர். சாக்த சித்தாந்தப்படி பாற்கடல் என்பது மூலாதாரத்தில் குண்டலினி சக்தியானவள் உறங்கிக்கொண்டிருக்கும் இடத்திலுள்ள சுக்லதாதுவின் தேக்கம். அதுவே குண்டலினிக்கு ஆகாரமாகின்றது. விரிக்கில் பெருகும். சாமான்யருக்கு மறைந்தும் யோகிகளுக்கு மட்டுமே அறியக்கிடப்பதால் இதனை மறைகின்ற வாரிதி என்றுர். மேலும் யோகசாதனையில் பிராணன் அபானன் என்ற இரண்டு வாயுக்கள் சேரும்போது மூலாக்னி ஏற்பட்டு சுக்கலத்தை வற்றச்செய்யும். அப்போது தனக்கு ஆகாரமாயிருந்த சுக்லம்வற்றின் உடன் குண்டலினி இறைதேடி மேலே ஏறும். அவ்வாறு வற்றுவதால் மறைகின்ற வாருதி. பாற்கடல் கடைந்த விருத்தாந்தத்தின் தத்துவம்கூட இதைத்தான் குறிப்பிடும். நேயர்கள் ஆராய்ந்தறிக. அம்பாளை மங்கலை என்பது ஓர் விசேஷம். அவள் ஒருவளே என்றும் சுமங்கலையாக இருப்பவள். மஹாபிரளயத்திலும் அவளே இருக்கின்றுள் என்பதை "மஹேச்வர மஹா கல்ப மஹா தாண்டவ சாக்ஷிணி" என்று ஸஹஸ்ரநாமத்தில் கூறியுள்ளது.

———

21-வது பாட்டு

## பஞ்ச சக்திகளும் அவளே

மங்கலை செங்கலசம் முலையாள் மலையாள் வருணைச்
சங்கலை செங்கைக் சகல கலாமயில் தாவுகங்கை
பொங்கலை தங்கும் புரிசடையோன் புடையாளுடையாள்
பிங்கலை நீலிசெய்யாள் வெளியாள் பசும்பொற்கொடியே.

### பதவுரை

இப்பாட்டிற்கு முதலில் பதங்களின் பொருள்களைமட்டும் கூறி பின்பு அன்வயப்படுத்துகிறோம்.

மங்கலை—என்றும் சுமங்கிலியாக இருப்பவள்

செம்கலசம் முலையாள்—செழுமையானதும், கலசம்போன்றதுமான ஸ்தனங்களையுடையவள்

மலையாள்—பர்வதராஜன் குமாரத்தி

வருணைச்சங்கு அலை—கடலில் உதிக்கும் சங்கினுலான வலையல்கள் அசைகின்ற

செங்கை—சிவந்ததிருக்கரங்களையுடைய

சகல கலாமயில்—சகல கலைகளுக்கும் தலைவியான மயில்போன்ற சாயையுடையவள்

தாவு கங்கை பொங்குஅலை—பொங்குகின்ற அலைகள் தாவும் கங்கை

தங்கும் புரிசடையோன்—தங்குகின்ற முறுக்கிய சடையையுடைய சிவபெருமானது

புடையாள்—இடப்பாகத்தை ஆக்கிரமித்தவள்

உடையாள்—(கேவல நிலையில்) ஆன்மாக்களை தம்முள் அடக்கி வைத்திருப்பவள்

பிங்கலை—பொன்னிறமுடையவள்

நீலி—நீல நிறமுடையவள்

செய்யாள்—சிவந்தநிறமுடையவள்

வெளியாள்—வெண்ணிறமுடையதள்

பசும்பொற்கொடி—பச்சைக்கொடிபோன்றவள்

### பொழிப்புரை

நித்திய சுமங்கலையாகவும், செம்மையான கும்பம்போன்ற ஸ்தன பாரங்களை உடையவளாயும், மலைமகளாயும், கடலில் பிறந்த சங்காலாகிய வளைகள் ஒலிக்கும் சிவந்த திருக்கரங்களையுடைய

சகல கலாமயிலே, பொங்கும் அலைகள் ததும்பும் கங்கையை முடிக்கிய சடையில் சூடிய சிவபெருமானின் இடப்பக்கத்தைத் தன் இருப்பிடமாகக்கொண்டவளே, உயிர்களை கேவல நிலையில் தன்னுள் ஒடுக்கி வைத்திருப்பவளே பொன்னிறத்தவளே! நீலநிறத்தவளே! சிவப்பு நிறமுடையவளே! வெண்ணிறமுடையவளே! பச்சை நிறமுடைய பொன்கொடியே!

விரிவுரை

ஈண்டு அம்பாளுக்கு ஐந்து நிறங்கள் கூறப்பட்டிருக்கின்றன. அதோடு அவளை மலையாள், சகலகலாமயில், புரிசடையோன் புடையாள், உடையாள், பசும்பொற்கொடி என ஐந்து நாமாக்களும் கூறப்பட்டிருக்கின்றன. அம்பிகையின் ரூபங்கள் அனந்தம். "ஏக வக்த்ராஸி ப[3]ஹு[4]தா பி[4]ன்னபி பரமேச்வரீ" என்று ஸ்காந்தத்தில் பரமசிவன் பார்வதியிடம் கூறியதாகக் கண்டிருக்கின்றது. பிரபஞ்சத்தின் பரிபாலனத்தைச் சேர்ந்த வெவ்வேறு காரியங்களை செய்வதாக பாவனை செய்யும்போது வெவ்வேறு ரூபங்களாய் இருப்பதாகச் சொல்லப்படும்.

"ஏகைவ சக்தி: பரமேச்வரஸ்ய
பின்னு சதுர்த்தாவினியோககாலே!
போகே பவானீ புருஷேச விஷ்ணு:
கோபேசனீகாளி ஸ்மரேச துர்கா!!

என்பதுவும், அந்தந்த ஸ்தான பேதங்களையொட்டி ரூபபேதங்களுமுண்டு. மேலும் அவரவர்கள் பிரார்த்திக்கும்படியான பலன்களை உத்தேசித்து வெவ்வேறு வர்ணங்களோடு அம்பாளிருப்பதாக பாவனை செய்யவேண்டும். உதாரணமாக லலிதோ பாக்யானத்தில் இவ்வாறு கூறப்பட்டிருக்கின்றது: -

"முக்தௌத்யேயா சசிஜ்யோத்ஸ்ஞ தவளாக்ருதிரம்பிகா!
ரக்த ஸந்த்யகரோசி: ஸ்யாத் வசீகரணகர்மணீ!!
கவித்வே விசதாகாரர் ஸ்படிகோபல நிர்மலா!
தனலாபே ஸுவர்ணபா சிந்த்யதே லலிதாம்பிகா!!
ஸர்வஸம்பத்திலாபேது ச்யாமளாங்கி விசிந்த்யதே!
நீலா சமுகீகரணே பீதாஸ்தம்பன கர்மணி!!

அதாவது முக்தியை விரும்புகிறவன் சந்த்ரன்போன்று பிரகாசமான வெண்மை நிறமாயும், வசீகரணத்தை விரும்புகிறவன் ரத்தச்சிவப்பு நிறமாகவும், கவித்வத்தை விரும்புகிறவன்

ஸ்படிகம்போன்ற வெண்ணிறமாகவும், தன லாபத்தை விரும்பி கிறவன் பொன்நிறமாகவும், ஸர்வ ஸம்பத்துக்களேயும் விரும்புகிறவன் சாம்பல் வர்ணமாகவும், வாக்சாதுர்யத்தை விரும்பு கிறவன் நீலநிறமாகவும், ஸ்தம்பன சித்தியை விரும்புகிறவன் மஞ்சள் நிறமாகவும் அம்பாளே பாவனைபண்ணி உபாஸிக்க வேண்டும்.

இது தவிர லலிதா ஸஹஸ்ரநாமத்தில் நமது சரீரத்திலிருக்கும் ஆதார ஸ்தானங்களிலிருக்கும் ஒவ்வொரு சக்திக்கு ஒவ்வொரு நிறம் கொடுக்கப்பட்டிருக்கின்றது. விசுத்தி சக்ரத்தில் இருப் பவள் ''ஆரக்தவர்ணு'' (476) அதாவது கொஞ்சம் சிவந்த வர்ண முள்ளவள். அநாஹத சக்கரத்திலிருப்பவள் சியாமள (பச்சை) நிறமுடையவள் (486). மணி பூரகசக்கரத்திலிருப்பவள் ரக்த வர்ண மாய் இருப்பவள் (499). சுவாதிஷ்டான சக்கரத்திலிருப்பவள் மஞ்சள் அல்லது பொன் நிறமானவள் (507). ஆக்ஞா சக்கரத் திலிருப்பவள் சுக்லவர்ணமாக அதாவது வெண்ணிறமாக இருக்கிற வள் (522). என்று கூறுவதோடு ஸஹஸ்ராரத்தில் இருக்கும் அம்பாள் ஸர்வவர்ணுேப சோபிதா (எல்லா வர்ணங்களாலும் பிரகாசிப்பவள் (529) என்றும் கண்டிருக்கின்றது. முந்தின பாட்டில் அபிராமி அம்மையின் உறைவிடங்களில் ''வெண்டிங்களோ, கஞ்சமோ'' என்று கூறப்பட்ட ஸ்தானங்களே சந்தரமண்டலம் என்றும் அங்குள்ள சஹஸ்ராரபத்மம் என்றும் உரை கண்டோம். அதன்படி இப்பாட்டில் அபிராமியே பொன் னிறமாயும், நீல நிறமாயும், சிவப்பு நிறமாயும், வெண்ணிற மாயும், பச்சை நிறமாயும் வர்ணிக்கப்படுகின்ருள். ஆகவே முதலடி களில் வரும் ''செங்கலசம் முலேயாள்'' என்றதை சிவப்பு நிறமான லக்ஷ்மி என்றும், மலேயாள் என்பதை பார்வதி என்றும், சகலகலா மயில் என்பதை வெண்ணிறமுடைய சரஸ்வதி என்றும், சடையோன் புடையாள் என்பதை பச்சை நிறமுடைய உமாதேவி என்றும், நீலி என்பதை நீல நிறமுடைய துர்க்கை என்றும் ஆக லக்ஷ்மி, பார்வதி, சரஸ்வதி, உமா, துர்க்கா என்ற ஐந்து உருவங்களும் அபிராமியாகிய மங்கலயே என்று அன்வயப் படுத்தவேண்டும். மேலும் சிருஷ்டி, ஸ்திதி ஸம்ஹார, திரோபவ, அனுக்ரஹம் என்ற பஞ்ச க்ருத்யங்களேயும் மூர்த்திகளே பஞ்ச ப்ரம்மாக்கள் என்று கூறுவது மரபு.

அவர்களின் சக்திகளே முறையே சரஸ்வதி, லக்ஷ்மி, ரௌத்ரீ, மாஹேச்வரி, மனோன்மணி என்பர். இந்த ஐந்து சக்திகளும்

அபிராமியே. அவர்களுக்கு முறையே வெண்மை, சிவப்பு, பச்சை, நீலம், மஞ்சள் என்ற நிறங்கள் இருப்பதாகக் கூறப்பட்டிருக்கின்றது. நிற்க இறைவனது அளவற்ற ஆற்றலே சாதாரணமாய் இச்சா, க்ரியா, ஞானம் என்று மூன்ருகக் கொள்வதும் உண்டு. இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி, என்பவர்களுக்கு முறையே பச்சை, சிவப்பு, வெளுப்பு என்ற வர்ணங்கள் கூறுவதுண்டு ஆக இப்பாட்டில் பொதுவாக பஞ்ச சக்திகளாகிற சித்சக்தி, பராசக்தி, இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி ஐவரும் சேர்ந்த சமஷ்ட ரூபமே அபிராமி என்று கூறப்படுகின்றது. இவர்களில் உயிர்க் கொளியாக நிற்பவள் சிற்சக்தி, பிராணன் முதலிய வாயுவாக நிற்பது பராசக்தி, பஞ்சபூதங்களாகப் பரிணமிப்பது இச்சாசக்தி, வினைத்துணையாக நிற்பது கிரியாசக்தி, ஐம்பொறியுணர்ச்சியாக இருப்பது ஞான சக்தி என்பர்.

————

## 22-வது பாட்டு

### " இறப்புண்டேல் மீண்டும் பிறவாமை வேண்டும் "
### " வம்பே பழுத்த கனி "

கொடியே இளவஞ்சிக் கொம்பே யெனக்கு வம்பேபழுத்த
படியே மறையின் பரிமள மே பனிமாலிமயப்
பிடியே பிரமன் முதலாய தேவரைப் பெற்றவம்மே
அடியே னிறந்திங் கினிப்பிறவாமல் வந்தாண்டு கொள்ளே.

பதவுரை

இளவஞ்சிக்கொடியே! : இளமையான வஞ்சிக்கொடி போன்றவளே!

கொம்பே! : மேன்மையானவளே!

எனக்கு: அடியேனுக்கு

வம்பே பழுத்த: பருவமல்லாக் காலத்தில் பழுத்த

படியே: படிவமே! உருவமே!

மறையின்: நான் மறைகளின்!

பரிமளமே: சுகந்தமே, வாஸனையே.

பனிமால் இமயப்பிடியே: பனிநிறைந்த இமய வெற்பு ஈன்ற பெண் யானையே!

பிரமன் முதலாய தேவரை: பிரமாதி தேவர்களை

பெற்ற: ஈன்ற

அம்மே: அன்னையே!

அடியேன்: உன் அடிமையாகிய யான்

இறந்து: மரித்து

இங்கு: இவ்வுலகத்தில்

பிறவாமல்: மீண்டும் ஜனனம் எடுக்காமல்

வந்து: எழுந்தருளி வந்து

ஆண்டு கொள்ளே: ஆட்கொண்டருள்வாயாக

பொழிப்புரை

இளவஞ்சிக்கொடியோ என்ன இடையை உடைய அபிராமியே! யாவற்றிக்கும் மேலானவளே! அடியேன் அபக்வியாக இருந்தும், வம்பிலே பழுத்த கனிபோல அடியேனை ஆட்கொண்டு தரிசனம் அளித்த பரம கருணாநிதியே! வேதங்களின் மணமே! பனிநிறம்பிய இமய பர்வதராஜன் குமாரியாக அவதரித்த பெண் யானைக்கு

சமானமானவளே! பிரமன் முதலாய தேவர்களை ஈன்ற தாயே! அடியேன் இறந்து இனிமேலும் இப்பிரபஞ்ச வாழ்க்கையில் பிறவாமல் செய்து ஆட்கொள்ளவேண்டும்.

வஞ்சிக்கொடி சிறு காற்றுக்கும் ஆடும் இயல்புடையது. "அறுகால் சிறுபறவை அஞ்சிறகால் வீசும் சிறு காற்றுக்காற்ருது" என்ருர் புகழேந்திப்புலவர். தன்னை ஆராதிப்பவர்களுக்கு வினைப் பயனுல் ஏற்படும் இன்னலின் காரணமாக அவர்கள் நெட்டுயிர்ப்பு விடின் அம்பாள் அதையும் பொறுக்காது அடியார்களின் கஷ்டத்தைக்கண்டு நடுங்கி அவர்களை ரக்ஷிக்க முன்னேடி வருவாளாம். இடையின் மென்மையைக்குறிக்கும் என்பது ஸஹஸ்ரநாமாவில் "தநுமத்யா" என்ற 350-வது நாமா குறிக்கின்றது. பெண்களுக்கு சிற்றிடை ஓர் அழகுக்குறி. கொம்பே என்பதைப் பூங்கொம்பே எனப்பொருள் கொள்கின்றனர். அம்பாளை கொடியாயும் சொல்லிக் கொம்பாகவும் வர்ணிப்பது நோக்கத்தக்கது. "கொம்பு" என்ற சொல்லுக்கு "மேன்மை" என்ற பொருளும் உள்ளது. அதுவுமன்றி "கோல் தேடியோடும் கொடிபோன்று மால்தேடியோடும் மனம்" என்ற வசனத்தில் கூறியிருப்பதுபோல் அம்பாளை உபாஸிக்கும் சாதகர்களாகிய கொடிக்கு அவள் கொம்பாகின்ருள் என்றும் கூடச் சொல்லலாம்.

முதலில் அடியார்கள் துயரத்தைச் சிறிதும் பொருத தன்மைக்குக் கொடியும், அடியார்களுக்கு ஊன்று கோலாம் தன்மைக்குக் கொம்பையும் சொன்னதாகும். "வம்பே பழுத்த படி" என்பது பக்குவமல்லாத காலத்தில் பழுக்கும் கனிக்கு ஒப்பான படிவமே என்ருர். வம்பில் பழுத்த கனி என்ற உபமானம் மாணிக்கவாசகர் தமது திருவாசகத்தில் பிடித்த பத்து முதற் பாட்டில் வைத்துப் பாடியிருக்கின்ருர். சேனதர்களின் ஆன்ம விகாச பக்குவத்தை இறைவி அறிவாள். ஆன்மாக்களோ தம் நிலையை அறியாது விஷயாகார விருத்திகளில் திளைத்துக்கிடப்பன ஆன்மா தன் பக்குவ நிலையை அறியாது இருந்தும் அதை அறிந்த இறவி அவ்வான்மாவைத் தடுத்தாட்கொள்வாள். இந்த அவ்வியாஜ்யமான கருணு விலாசத்தை "வம்பிலே பழுத்த படியே" என்பதில் கூறுகின்ருர். மணிவாசகப் பெருந்தகையார் தமது "அபக்குவ நிலையை" பல இடங்களில் அவையடக்கம் போன்று கூறியுள்ளார். "கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை" என்றும்

"நாயிற்கடையாயக் கிடந்த அடியேர்க்கு" என்றும் பல இடங்களில் கூறுகின்றார். இங்கு அபிராமி பட்டர் ஓர் வைதிக பிராம் மணர். வேதங்களையும் வேதசாங்கியங்களையும் நன்கு கற்றறிந்தவர் அவருக்கு பூர்வ புண்ணியவசத்தால் ஸ்ரீவித்யா உபாஸனை ஏற்பட்டு அதில் சித்தியடைந்து வைதீக கர்மாக்களை விட்டு விலகி எப்போது அம்பாளின் ஞானனந்த அனுபோகத்திலேயே இருப்பவர். அவர் தன்னை அபக்குவனுகக் கூறி அம்பாளின் கருணு விலாஸத்தாலேயே தான் தடுத்தாட் கொள்ளப்பட்டதாகக்கூற வந்தவர் "வம்பே பழுத்தபடியே" என்று கூறிக்கொள்கின்றார்.

இதில் தான் சுதந்தரனல்ல என்னுல் யாதொன்றும் இயலாது. இறைவியின் அருள் ஒன்றே ஈடேற்றும் என்ற பூரண ஆன்ம சமர்ப்பணம் செய்த பிரபத்தி மார்க்கத்தைக் கூறுவதால் தன்னுடைய சிறுமையையும் அம்பாளின் பெருமையையும் கூறுவதாயிற்று. "நானே தவம் செய்தேன்" என்று அடியார்கள் கூறுவதுபோல் "என்ன புண்ணியம் செய்தனை மனமே" அம்பாளே வலியவந்து ஆட்கொண்டவான் கருணையை வியந்து கூறியது. தானுகப் பழுக்காத பழத்தைத் தடியால் அடித்துப் பழுக்க வைப்பது என்றேர் பழமொழியுண்டு அதுபோல பக்குவியாகப் பழுக்காத என்னை உன் கருணையாகிய தடியால் அடித்து வம்பாகப் பழுக்க வைத்தாய் என்கின்றுர். மறையின் பரிமளம் மணமில்லாத மலரை யாரும் விரும்புவதில்லை. மணம் மலருக்கு அவசியமான இலக்ஷணம். அதுபோல சாதாரண இலக்கியங்களுக்கு மணம் அவற்றின் சொல் அழகும் பொருள் ஆழமும் ஆகும்.

வேதத்துக்கு அதன் சொல்லும் பொருளும் மணமாகும். வேத மந்திரங்களும், அவற்றின் பொருளும், அவற்றின் பிரயோகமும் "மணமாகும் என்பது பொதுவான பொருள். சிறப்பாக வேதங்களின் "மஹாவாக்கியங்கள்" என்று கூறப்படுகின்ற "தத்துவமஸி" போன்றவையே வேதங்களின் மணம். இதை ஸஹஸ்ரநாமா "தத்பதலக்ஷ்யார்த்தா" (363) தத்தவம் அயி என்ற நாமாக்களாலும் "தத்தவம் அர்த்தஸ்வரூபிணி" (908) என்ற நாமாலும் பிரகடனப் படுத்துகிறது. இச்சிறப்புப் பொருளின் வேதமாகிய மலருக்கு மஹாவாக்கியங்களே மணம் என்றும் அந்த மணம் அம்பாளே என்றும் கூறலாம். "இமயப்பியே" பர்வதராஜனது புத்ரி. அழகிய பெண்களை பெண் யானைக்கு ஒப்பிடுவது கவி மரபு "கஜேந்த்ர மத்தகமனு" என்று

வருவது காண்க. "இமவான்புதல்வி" என்பது வேதவாக்ய "ஸர்வஸோபமானு உமா ஹைமவதி" என்கின்றது கேனோபநிஷத் பிரமன் முதலாய தேவரைப் பெற்றது. "ஆப்ரம்மகீட ஜனனி" (285) என்பது ஸஹஸ்ரநாமம். பிரம்மாதி தேவர்கள் என்றதால் பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், மஹேஸ்வரன், சதாசிவன் என்ற பஞ்சப்ரம்மாக்களும், இந்திரன், வருணன், வாயு, அக்னி, நிருதி, யமன், ஈசானன் முதலிய திக்பாலர்களும் அடங்குவார்கள்.

யாரும் ஆற்றலின்றி ஒரு செயலும் செய்ய இயலாது. பிரபஞ்சத்தின் ஆதிகாரண வஸ்துவின் ஆற்றலே சக்தி என்று பல முறை சொல்லப்பட்டது. இந்த ஆற்றலே நாதம் முதல் பிரம்மா ஈருன "நவவடிவ"ங்களுக்குப் பிறப்பிடமாகுமாதலால் அம்பாளை தேவர்களின் அம்மையே என்றழைக்கின்றார். இறந்து இங்கு இனிப்பிறவாமல் வந்து என்றதில் 'இங்கு' என்றதை 'வந்து' என்பதோடு கூட்டிப் பொருள் கொள்வர். இங்கு என்பது இடத்தையும், இனி என்பது காலத்தையும் குறிப்பன வாதலால் மறுபடியும் ஜனனம் எடுப்பது பிரபஞ்சத்தில் உழலா வண்ணம் என்று பொருளுரைக்கப்பட்டது.

## 23-வது பாட்டு

## தள்ள வேண்டியதும் கொள்ள வேண்டியதும்
## (சாதனை கூறல்)

கொள்ளேன் மனத்தில் நின் கோலமல்லா தன்பர் கூட்டந் தன்னை
விள்ளேன், பரசமயம் விரும்பேன், வியன் மூவுலகுக்
குள்ளே அனைத்தினுக்கும் புறம்பே உள்ளத்தே விளைந்த
கள்ளே களிக்கும் களியே அளிய என் கண்மணியே

பதவுரை

வியன் மூவுலகு!: விரிந்து அகன்ற சுவர்க்க மத்ய பாதாளம் என்ற மூவுலகங்களின்
உள்ளே!: அந்தர்யாமியாக இருக்கும் வஸ்துவே.
அனைத்தினுக்கும் புறம்பே!: அம் மூவுலகங்களுக்கு அப்பாலாய் இருக்கும் பொருளே
உள்ளத்தே விளைந்த கள்ளே!: சாதகர்களின் உள்ளத்தில் விளைந்த தேனே
களிக்கும் களியே!: அந்தத் தேனின்சுவையால் சாதகன் மகிழ்தற் கேதுவாகிய மகிழ்ச்சியே
அளிய என் கண்மணியே!: அருளத் தக்கவனான அடியேனின் கண்ணின் மணியே! (அடியேன்)
மனத்தின் கண்!: என்னுடைய மனத்தில்
நின் கோலமல்லாது!: உன்னுடைய திவ்ய தேஜோமய உருவத்தை யன்றி
கொள்ளேன்!: (வேறொரு உருவை) தியானம் செய்ய மாட்டேன்
அன்பர் கூட்டந்தன்னை!: உன்னை உபாசிக்கும் மெய்யன்பர் கூட்டத்தை
விள்ளேன்!: பிரியமாட்டேன், பிரிந்திருக்கமாட்டேன்
பரசமயம் விரும்பேன்!: சாக்த சித்தாந்தமாகின்ற இம்மெய் நெறியை விட்டு வேறு எந்நெறியும் விரும்பமாட்டேன்.

பொழிப்புரை

விரிவான சுவர்க்க மத்ய பாதாளம் என்ற மூவுலகுக்குஅந்தர் யாமியாயும் அவற்றிற்கு அப்பாலாய் வேறாயும் என்னுடைய இருதயத்தில் உன் உபாஸனையால் ஊறும் தேனும், அத்தேனில் உண்டாகும் மகிழ்ச்சியாகவும், என் கண்ணின் மணியாகவும்

இருக்கும் அபிராமியே! உன்னுடைய உருவமல்லாது வேறொன்றை தியானம் செய்ய மாட்டேன். உன் உபாஸகர்கள் கூட்டத்தைப் பிரிந்து இருக்க மாட்டேன். வேறொரு சமயத்தையும் விரும்ப மாட்டேன்.

விரிவுரை

முதல் இரண்டு வரிகள் சாதனை. அந்த சாதனையால் ஏற்படும் அனுபவம் ஏனைய இரண்டு வரிகளில் கூறப்படுகின்றது என்பது இப்பாட்டில் பொதிந்த பொருள். அம்பாளை மூவுலகினுக்கும் அந்தர்யாமியாயும் அவற்றிற்கு வேராயும் அப்பாலாயும் அனுபவிப்பதும், அம்பாள் உபாஸனையால் நெஞ்சில் ஊறும் ருசியும் அந்த ருசியின் பயனான மகிழ்ச்சியும் அனுபவிக்க வேண்டுமானால் அநன்யாச்சிந்தையாக அம்பாளையே பற்றுக்கோடாகக் கொண்டு, அம்பாளின் அடியார்களோடு சேர்ந்து, வேறு சமய நெறிபுகாமல் இருக்கவேண்டும் என்பது உள்கிடை.

மேலும் இப் பாட்டில் அபிராமி பட்டரின் வாழ்க்கையை ஒட்டிய ஓர் குறிப்பும் இருக்கின்றது. இவர் திருக்கடவூரில் கௌசிக கோத்திர வேதியராக பிறந்து முறையாக வேத சாஸ்த்ரங்களை ஓதியுணர்ந்திருந்தார்.

பூர்வ ஜன்ம புண்ணியவசத்தால் சாக்த நெறியைக் கைப்பற்றினார். அதிலிருந்து ஏனைய வைதீக அந்தணர்கள் அனுஷ்டித்த அக்னிஹோத்ராதி கர்மங்களைத் துறந்தார். வைதீக அந்தணர்களின் கோட்பாடு மீமாம்ஸ சமயத்தை ஒட்டியது. அதாவது வேதத்தின் கர்ம காண்டத்தில் விதிக்கப்பட்ட யாக, யக்ஞ, ஸம்ஸ்காரங்களை யதோக்தமாய் அனுஷ்டிப்பதாலேயே முக்தி எய்தலாம் என்பது. இவர்களை 3-வது பாடலில் "நின் அன்பர் பெருமையெண்ணாத கரும நெஞ்சால் மறிந்தேவிழு நரகுக்குறவாகிய மனிதர்" என்று கூறியிருப்பதும் காண்க.

இவர் அவர்கள் போல் அனுஷ்டிக்காததலால் இவரை துவேஷித்தனர். இவர் அம்பாளின் பூரண கடாக்ஷம்பெற்று அந்த ஆனந்த வாரிதிலேயே திளைத்த வராதலால் மற்ற வேதியர் விருப்பையும் வெறுப்பையும் மதித்தாரல்லர். அதைத்தான் இப்பாட்டில் அம்பாளைத் தவிர வேறு தெய்வத்தை வழிபடமாட்டேன், சாக்த உபாஸகர்களைத் தவிர வேறு யாருடனும் சேரமாட்டேன், பிற சமயமாகிற மீமாம்ஸ நெறியில் செல்லமாட்டேன் என்று அருதியிட்டுக்கூறி தான் கண்ட அனுபவத்தையும் கூறுகின்றார்.

அம்பாளே பிரபஞ்சத்தில் ஒன்றாய், உடனாய், வேறாய் இருப்பவள் என்பதை உணர்ந்தேன். அம்பிகை உபாஸனையால் என் மனம் களிகொண்டது என்று கூறுகின்றார்.

மேலும் தற்காலத்தில் பரவிவரும் ஓர் கொள்கையையும் மறுக்கின்றார் எனலாம். சில மேதாவிகள் ஸர்வசமய ஸமரசம் என்று பேசிக்கொண்டு ஒன்றிலும் நிலைத்திராமல் எல்லா சமயமும் ஒன்றுதான் என்று மிக்க அனுபவசாலிகள் போலக் கூறுகின்றனர். இது வாயளவே. ரயில் நிலையத்தில் நின்றுகொண்டு அதன் வழியாகப்போகும் எல்லாத் தொடர்களும் சென்னைக்குத்தான் போகின்றன என்ற அறிவு மட்டும் நம்மை சென்னை கொண்டு சேர்க்காது. யாதாமொரு ரயிலை தெரிந்தெடுத்து அதில் பிரயாணம் செய்ய யோக்யதையைக் கொடுக்கும் டிக்கட்டை வாங்கி, அந்த ரயில் வரும்போது அதில் ஏறி அமர்ந்தாலே சென்னை செல்ல முடியும். அதுபோல மனிதனின் பிரதான லக்ஷியமான மோக்ஷத்தையடைய விரும்புகிறவன் ஏதாவது ஒன்றை மர்க்கட முஷ்டியாகப் பிடித்துக்கொண்டு ஒழுகவேண்டும். இது ஏனைய சமயங்களை வெறுப்பதல்ல. சமயங்கள்யாவும் முக்தியளிக்க வல்லவையானாலும், நமது ஆன்மவிகாசத்துக்கும், அதிகாரி பேதத்துக்கும, பூர்வபுண்ணிய வசத்துக்கும் உகந்ததான சமய நெறியைக் கடைப்பிடிக்க வேண்டும். இந்த உண்மை இந்தப்பாடலில் தொனிக்கின்றது.

கள்ளே! என்று அம்பாளைச் சொல்வது சுருதி பிரமாணம். பாஸ்கரராயர் ஸஹஸ்ரநாம வியாக்யானத்தில் "மதுமதீ" என்ற 717-வது நாமாவுக்கு வியாக்யானம் செய்த இடத்தில் "மஹத்யை வா ஏதத் தேவதாயை ரூபம் யன்மது" என்று மேற்கோள் காட்டி இது சுருதி வாக்கு என்று எழுதியிருக்கிறார். அதாவது அம்பாளுடைய ரூபமே தேன் போன்றது என்று பொருள். "அளிய" என்ற சொல்லுக்கு அளியன் அல்லது ஆதரிக்கத்தக்கவன் என்பது சாதாரணப் பொருள். "அளியன் தானே முதுவாய் இரவலன்" என்பது திருமுருகாற்றுப்படை. அளி என்பதற்கு வண்டு என்ற பொருளும் உண்டு. அம்பாளைக் கள்ளே என்று விளித்து "அளிய" என்று கூறிக் கொள்வதாலே "வண்டு போன்ற" அத்தேனைப் பருகும் வண்டாகத் தம்மைக் கூறிக்கொள்வதாகவும் அமையும். அளிய—வண்டு போன்ற. திருவாசகத்தில் ஆளுடை அடிகள் திருச்சதகம் [illegible]-வது பாடல் ஒப்புநோக்கற்பாலது.

24-ம் பாட்டு

## அம்பாள் அருள் பெற்றோர் அன்னியரை வணங்கார்

மணியே! மணியின் ஒளியே! ஒளிரும் மணிபுனைந்த
அணியே! அணியும் அணிக்கழகே! அணுகாதவர்க்குப்
பிணியே! பிணிக்கு மருந்தே! அமரர் பெருவிருந்தே!
பணியேன் ஒருவரை நின்பத்மபாதம் பணிந்தபின்னே.

பதவுரை

மணியே: மாணிக்கமணியே!
மணியின் ஒளியே!: அம்மணியின் ஒளியே!
ஒளிரும் மணிபுனைந்த அணியே!: பிரகாசிக்கின்ற மாணிக்கக் கற்களாலாய ஆபரணமே!
அணியும் மணிக்கு அழகே!: உன் திருமேனியில் அணியப்படும் ஆபரணங்களுக்கு அழகைக் கொடுப்பவளே!
அணுகாதவர்க்கு: உன் திருவடியை அடைக்கலமாக அடையாதவர்களுக்கு
பிணியே!: நோய்போன்று துன்பம் விளைப்பவளே
பிணிக்கு மருந்தே!: (உன்னையடைந்தவர்களுடைய பிறவிப்) பிணிக்கு ஔஷதம் போன்றவளே!
அமரர் பெருவிருந்தே: தேவர்களுக்கு பெரிய விருந்தாக இருப்பவளே!
நின்பத்மபாதம்: உன் திருவடிக்கமலங்களை
பணிந்தபின்: (சரண் புகுந்து) வணங்கியபின்
ஒருவரைப்பணியேன்: வேறொருவருக்கு வந்தனை செய்யமாட்டேன்

பொழிப்புரை

மாணிக்க மணிபோன்று சிவந்த நிறம் வாய்ந்தவளே! அம்மணிக்கு ஒளியாய் இருப்பவளே! மாணிக்கக் கற்களாலாய ஆபரணமே! உன் திருமேனியில் அணிந்துள்ள ஆபரணங்களுக்கே அழகு செய்கின்றவளே! உன்னடிகளை அடையாதாருக்கு நோயாகவும், அடிபணிகின்றவர்களுக்குப் பிறவிப்பிணிதீர்க்கும் ஔஷதமாகவும் இருப்பவளே! தேவர்களுக்கு பெரிய விருந்துபோன்றவளே! உன் திருவடிகமலங்களை சரண் புகுந்தபின் வேறு எவரையும் நான் பணியமாட்டேன்,

விரிவுரை

ஆபரணங்கள் சாதாரணமாய் பெண்டிருக்கு அழகு செய்வன வாய்க் கருதப்படுகின்றன. ஆனால் அம்பிகை அணிந்திருக்கும் அணிகளுக்கு அவள் அழகைத்தருகின்றாள் என்ற நயம் சிந்திக்கத் தக்கது. அழகுக்கே இருப்பிடமாய் ஸர்வாங்க சுந்தரியாய் இருக்கும் அம்பாளுக்கு ஆபரணங்கள் அழகு செய்ய முடியுமா? "மணி" என்ற சொல் பொதுவாய் நவமணிகளையும் குறிக்குமாயினும், ஸஹஸ்ரநாமாவில் "ஸர்வாருணா" (49) என்று சொல்லப்பட்டிருப்பதால் இங்கு மாணிக்கத்தையே குறிப்பதாய்ப் பொருள் கொள்ளப்பட்டது. ஸர்வாருணா என்றால் "தன்னுடைய வஸ்த்ரம், ஆபரணம், புஷ்பம், காந்தி முதலிய யாவும் சிவந்த நிறமாக உடையவள்" என்பது பாஸ்கரராயர் வியாக்யானம் அம்பாளுடைய அவயவ சோபையை "அநவத்யாங்கீ" என்ற 50-வது நாமா கூறுகின்றது. நகைகள் அணிந்திருப்பதை "ஸர்வாபரண பூஷிதா" என்ற 51-வது நாமா குறிப்பிடுகின்றது.

அம்பாளின் ஆபரணங்களின் விவரம் நவமணி மகுடம் முதல் மாணிக்கப் பாதுகைமுடிய 28 ஆபரணங்கள் கல்ப சூத்ரத்தில் கூறப்பட்டிருக்கிறது. இவை ஒவ்வொன்றுக்கும் சாக்த சித்தாந்தத்தில் தத்துவார்த்தம் இருப்பதாகக் கருதப்படுகின்றது. "அணுகாதவர்க்குப்பிணியே" என்றதை "துஷ்டதூரா" என்ற 193-வது நாமா குறிக்கின்றது. அணுகாதவர்களுக்குப்பிணியே என்றதால் அம்பாள் நோய் முதலிய இன்னல்களைக் கொடுத்து தண்டிக்கிறாள் என்று பொருளல்ல. அவர்களுக்குத் திரும்பத்திரும்ப பிறவிப் பிணியைக்கொடுத்துத் திருத்துகிறாள் என்பது பொருள். பிணிக்கு மருந்து என்றதிலும் பிறவிப்பிணி என்றே பொருள் கொண்டோம். பிறவிப்பிணியைப் போக்கும் வல்லபத்தை அனுபூதிமான்கள் பற்பல இடங்களில் பன்னிப்பன்னிக் கூறியிருக்கிறார்கள். "ஜென்ம ம்ருத்யு ஜரா தப்த ஜனவி ச்ராந்த தாயினீ" (851), என்றும் "ம்ருத்யுதாரு குடாரிகா" (749) என்றும் ஸஹஸ்ரநாமாவில் வருகின்றன. இவற்றில் "ம்ருத்யு" என்ற பதம், மரணத்தைக் குறிப்பதுடன் 28 விதமான துக்கங்களையும் குறிக்கும் என்று பாஸ்கரராயர் கருதுகின்றார். அவற்றுள் சரீர உபாதிகளான பிணிகளும், தரித்ரம், பிரிவு, முதலியனவும் அடங்கும். அமரர் பெருவிருந்தே என்றார். விருந்து என்பது அதிதிகளுக்கும், விசேஷ காலங்களில் வருபவர்களுக்கும் அளிக்கப்படும் உணவு. அது சாதாரணமாய்ப் பலவகைப்பட்ட நாவுக்கு ருசியான பதார்த்தங் கள் உடையதாய் இருக்கும். அம்பாளின் அழகு கண்ணுக்கு

விருந்து, அம்பாளின் மதுரவசனம் காதுக்கு விருந்து, அம்பாளின் அருள் மனதுக்கு விருந்து, அம்பாளின் பரிமளம் நாசிக்கு விருந்து என்பதுபோல பலவகையாலும் தேவர்கள் அம்பாளின் சந்நிதியில் விருந்தளிக்கப்பட்டு மகிழ்ச்சியடைகிருர்கள். அதனுல் அவர்கள் எப்போதும் அம்பாளைவிட்டு அகலுவதே கிடையாது. காளிதாசன் சியாமளா தண்டகத்தில் 3-வது கண்டகத்தின் கடைசி இரண்டு வரிகளில், "நம்ரதிக்பால ஸிமந்திநீ" என்று ஆரம்பித்து திக்பாலர் களுடைய பத்னிகள் அம்பாளை நமஸ்கரிப்பதாயும், அடுத்தவரியில் "ப்ரஹ்வதேவேச" என்று ஆரம்பித்து இந்திரன், விஷ்ணு, சிவன், வருணன், பிரம்மா, யமன், நிருதி, குபேரன், வாயு, அக்னி இவர் களும் வணங்குவதாயும் வர்ணித்திருக்கிருன். அம்பிகையை தரி சித்தபின் மற்ருென்றை காணமுடியாது. தெவிட்டாத விருந்து. இவ்வாறு சகல தேவர்களும் தேவியை வணங்குவதால், அவளை வழிபடுகிறவர்கள் வேருெரு தெய்வத்தை வணங்கவேண்டிய அவசியம் இல்லை என்பதையும், தேவர்களையே வணங்க அவசிய மில்லாதபோது மனிதரை வணங்கவேண்டிய பிரமேயமே ஏற்படக் காரணமில்லை என்பதையும் சேர்த்து "பணியேன் ஒருவரை" என்று பொதுப்படக்கூறினர். மஹராஜா சரபோஜி வந்தபோது அம்பிகையின் சந்நிதியில் ஆனந்தானுபவத்தில் அமர்ந்திருந்த அபிராமிபட்டர் அரசனை வணங்காதது ஆச்சரியமல்லவே!

———

25-வது பாட்டு

## பூர்வஜன்ம புண்ணியத்தாலேயே அம்பாள் உபாஸனை கிட்டும்

பின்னே திரிந்துன் அடியாரைப் பேணிப் பிறப்பறுக்க
முன்னே தவங்கள் முயன்று கொண்டேன் முதன் மூவருக்கும்
அன்னே! உலகுக்கு அபிராமி என்னும் அருமருந்தே
என்னே இனியுன்னையான் மறவாமல் நின்றேத்துவனே

பதவுரை

முதன் மூவருக்கும் அன்னே! (அருவுருவமாகியிருந்த நிலையிலிருந்து சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் முதலியகாரியங்களைச் செய்வதற்கு உருவமாக பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் என்ற மும்மூர்த்திகளாய் முதலில் தோன்றிய மூவருக்கும்தாயே.

உலகுக்கு அபிராமி: சிவத்தோடு அபின்னமாய் அருவமாய் இருந்த சித்சக்தியாயிருந்த நீ, உலகமக்கள் உய்யும் பொருட்டு அபிராமி என்ற பெயரும் உருவமும் பெற்று

என்னும் அருமருந்தே: பிறவிப்பிணிக்கு அம்ருதம் போன்ற அரியமருந்தே,

உன் அடியாரைப்பேணி உன் உபாஸகர்களை வழிபட்டு

பின்னேதிரிந்து: அவர்கள் பின்பற்றிய வழியையே நானும் பின்பற்றி

பிறப்பறுக்க: எனது பிறவி நோய் அற முன்னே தவங்கள் முயன்று கொண்டேன், முன் ஜன்மங்களில் பல தவங்களைச் செய்து முயற்சி செய்தேன்.

இனி உன்னை: இப்பிறவியில் உன்வழிபாட்டை அறிந்த பின் உன்னை

யான்: அடியேன்
மறவாமல்: நிரந்தரமாக, எப்பொழுதும்
நின்று: உன்வழிபாட்டில் அசையாது நிலைபெற்று
ஏத்துவனே: புகழ்ந்து துதி செய்து வழிபாடு செய்வேன்.
என்னே: அசை.

பொழிப்புரை.

சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் என்ற முத்தொழிலை நடத்துவதற்கு முதன் முதலாக உருவத் திருமேனி கொண்ட பரசிவத்தின் மும் மூர்த்திகளையும் ஈன்றதாயே, உலகத்தார் உய்யும் பொருட்டு அபிராமி என்ற பெயரும் உருவமும் தாங்கி நிற்கும் பராசக்தியே, முன் ஜன்மங்களில் செய்த புண்ணிய வசத்தால் உன் அடியார் ... என் பிறவிப் பிணி அகல

உன்னை உபாஸனை செய்தேன், இனிமேல் உன்னை என்றும் மறவாமல் வழிபடுவேன். "என்னே" என்பதை அசையாகவும் கொள்வதோடு என்ன பாக்யம் செய்தேன்! என்ன ஆச்சரியம்! என்றும் கூடப்பொருள் கொள்ளலாம். முதன் மூவருக்கும் அன்னே! அருவமாய், உபாத்ரஹிதமாய் சுத்தகேவலசைதன்ய மாயிருந்த சிவம் (பிரம்மம்) சக்தியின் அதிஷ்டானத்தால் சிருஷ்டி யோந்முகமாகி தொழில் செய்ய ஆரம்பிக்கும் போது சிருஷ்டித் தொழில் செய்யும் போது பிரமன் என்றும், சம்ரக்ஷிக்கும் போது விஷ்ணு வென்றும், ஸம்ஹாரம் செய்யும்போது ருத்ரன் என்றும் மூவகை உருவமும் நாமமும் தாங்கி நிற்பதாலும் அவர்கள் சக்தியின் அதிஷ்டானத்தாலேயே நாமரூபங்களையடைவதாலும் அம்பாளை அவர்களுடைய அன்னை என்றார். உன் அடியாரைப் பேணி பின்னேதிரிந்து என்பது: சாக்த குரு பரம்பரையைக் குறித்து நிற்கின்றது சாக்த உபாஸனை குருமுகமாகவே அறிந்து கொள்ள வேண்டும்.

பின்னே திரிந்து என்பதை ஆசிரியர் காலத்தில் இருந்தவர்களுக்கு மட்டுமேயன்றி முன்பும் இருந்த குருபரம்பரையையும் சேர்த்துச் சொன்னதாகக் கருதுவது சாலச்சிறந்தது. பின்திரிதல் என்பதையும் பின்பற்றுதல், அவர்கள் விதித்த வழியில் செல்லுதல் என்ற பரந்த பொருளில் கொள்ளவேண்டும். மற்றெல்லா சித்நாந்தங்களை விட சாக்த சித்தாந்தத்தில் குருபரம்பரை மிக்கஅவசியம். ஸ்ரீசக்ரபூஜா விதானத்திலும் கட்கமாலா ஸ்தோத்திரத்திலும் திவ்யஔகம், சித்தஔகம் மானவஔகம் என்ற மூவகை குரு பரம்பரைக்கும் வழிபாடு இயற்றும்படி விதிக்கப்பட்டிருக்கின்றது. முன்னே தவங்கள் முயன்று கொண்டேன் என்றார். லலிதா ஸஹஸ்ர நாமத்தின் பலசுருதியில் 74-வது சுலோகத்தில் "எவனொருவன் கோடி ஜன்மாக்களில் இதரதேவதைகளின் ஸஹஸ்ர நாமத்தைப் படித்திருப்பானோ அவனுக்குத்தான் இந்த ஜன்மாவில் ஸ்ரீதேவியின் நாமகீர்த்தனத்தில் சிரத்தையுண்டாகின்றது" என்றும் லலிதாத்ரிசதியின் பலசுருதி 24-25 வது சுலோகங்களில் ஸ்ரீ வித்யை என்ற சாக்த வழிபாடு யாரொருவருக்குப் புனர்ஜன்மம் கிடையாதோ அவராலும் அல்லது ஈசுவராவதாரம் யாரோ அவராலுமே தான் அடைய முடியும்.

இவ்விதம் மந்த்ர சாஸ்திரங்களில் ஸ்ரீ வித்யையின் மஹிமை பலவிதமாக வர்ணிக்கப் படுகின்றது. ஸ்ரீவித்யையானது மோக்ஷ ப்ராப்தியைத் தருகின்றது என்பதில் சந்தேகமேயில்லை" என்றும் கூறியிருப்பது காண்க,

ஸ்ரீ வித்யை மோக்ஷப்ரதமாதலால் "பிறப்பறுக்க" என்ற பதப் பிரயோகம் செய்திருக்கிறார். உலகுக்கு அபிராமி. மூவருக்கும் முதல்வியான பராசக்தி உலகத்தாரின் க்ஷேமத்தின் பொருட்டு யாவரும் கண்டு வழிபடும் வண்ணம் அபிராமி என்ற நாமமும் உருவமும் தாங்கி நிற்கின்றாள் என்பதில் காணும் நயம் சிந்தித்து மகிழத்தக்கது. அவளுடைய சௌலப்யசீலமும், கருணையின் ஆழமும் தெரிகின்றது. ஸ்ரீ வித்யை என்ற சாக்த வழிபாட்டுக்கு அபிராமி அம்மையையே பராசக்தியாகக் கொண்டு உபாஸித்தவர் இந்நூலாசிரியர்.

---

26-ம் பாட்டு

## அடியார்கள் பெருமையும் தன் சிறுமையும்

ஏத்தும் அடியவர் ஈரேழ் உலகினையும் படைத்தும்
காத்தும் அழித்தும் திரிபவராம் கமழ் பூங்கடம்பு
சாத்தும் குழலணங்கே மணநாறும் நின்தாளிணைக்கு என்
நாத்தங்கு புன்மொழி ஏறியவாறு நகையுடைத்தே.

பதவுரை

கமழ் பூங்கடம்பு : நறுமணங் கமழ்கின்ற கடம்ப மலரை
சாத்தும் குழலணங்கே : அணிந்த கேச பாரத்தையுடைய பராசக்தியே
ஏத்தும் அடியவர்கள் : உன்னை உபாசித்து சித்திபெற்றசாதகர்கள்
ஈரேழ் உலகினையும் : பதினுங்கு உலகங்களையும் படைத்தும்,
காத்தும், அழித்தும் திரிவர் : தோற்றுவித்தும், ரக்ஷித்தும், ஸம்ஹரித்தும் உலாவுவர். (அவ்வளவுசிறந்த சாதகர்கள் இருக்க)
மணம் நாறும் : நல்லவாசனை வீசும்
நின்தாளிணைக்கு : உன்னுடைய இரண்டு திருவடிக்கே
என் : (மிகச்சிறியவனுன) அடியேனது
நாத்தங்கும் : நாவினுல் உதிக்கும்.
புன்மொழி : ஒரு சுவையுமில்லாத சொல்
ஏறியவாறு : உன்திருச்செவிகளில் ஏற்றுக்கொண்டமுறை
நகையுடைத்தே : சிரிப்புக்கு இடமாவதே

பொழிப்புரை

உன்னுடைய உபாசகர்கள் முத்தொழிலையும் செய்யும் வல்லமையுடையவர்களாய் இருக்க. அடியேனின் புன்மொழியை நீ செவிசாய்த்தருளியது சிரிப்புக்கே இடமாவதே! மணங் கமழும் கடம்ப மலரை கூந்தலில் தாங்கிய பராசக்தியே!

விரிவுரை

ஏத்தும் அடியவர் : தேவி உபாஸகர்களால் செய்யமுடியாத ஓர் செயலும் இல்லை. அணிமாதி சித்திகளைப்பெற்ற சித்தபுருஷர்களாய் சிருஷ்டியாதி கிருத்தியங்களைக் கூடச் செய்வார்கள் என்பது சித்தாந்தம். இந்த சித்தாந்த வழிபாட்டில் ஸ்ரீசக்கரத்தின் பூபுரத்ரயத்தில் வெளிக்கோட்டில் தசசித்திகள் இருக்கின்றன. ஏனைய

சித்தாத்தங்கள் அஷ்டமா சித்தியென்றே கூறும். தசசித்திகளாவன (சட்கமாலாப்படி) அணிமா, லகிமா, கரிமா, மஹிமா, ஈசித்வம் வசித்வம், ப்ராகாம்யம், புக்தி, இச்சா ப்ராப்தி தன்னாலேயே உபாஸகனை வந்து அடைந்துவிடுகின்றன. சித்தபுருஷர்கள் அம்பிகையின் உபாஸ்தியால் சாதிக்கக்கூடாததேயில்லை. சைவ சமயாச்சார்யர்களான நால்வரும் இறந்தவரை எழுப்புதல், ஆண் பனை பெண்பனையாக மாற்றுதல், கல் தண்ணீரில் மிதத்தல், ஊமைப் பெண்ணை பேசவைத்தல்போன்று அநேக அற்புதங்களைச்செய்தனர். அவர்கள் அம்மையப்பனை அபேதமாய் வழிபட்டவர்கள். அவர் களுடைய பசுகரணம் மாறி பதிகரணமானவர்கள், ''அவனேதா னாகிய'' சித்தியடைந்தவர்கள். ''படைத்தும் காத்தும் அழித்தும்'' என்ற சொற்றொடரை பிரம்மா விஷ்ணு ருத்தரன் என்று உரை கூறுவதைவிடப் பொதுவாய் சாக்த உபாஸகர்களான சித்தர்கள் என்று கூறுவது சிறப்புடைத்து. ''கடம்பு சாத்துங்குழல்'' என்பது ''கதம்ப குஸுமப்ரியா'' என்ற 323-வது நாமா ஸஹஸ்ர நாமத் தில் குறிக்கப்படுகின்றது. சித்தர் நூல்கள் பலவற்றில் தேவி உபாஸனை கூறப்பட்டிருக்கின்றது. முக்கியமாய் போகரில் ஸ்ரீசக்ர விவரமும் ஆவரணதேவதைகள் பெயர்களும் விரிவாகக் கொடுக் கப்பட்டிருக்கின்றன. சித்தர்களுக்குள் பாலா உபாஸனை மிகுந்து இருந்திருக்கின்றது.

---

## 27-ம் பாட்டு

## தேவி உபாஸனையால் பெறும் பேறு

உடைத்தனை வஞ்சப்பிறவியை, உள்ளம் உருகுமன்பு
படைத்தனை, பத்ம பதயுகம் சூடும் பணி எனக்கே
அடைத்தனை, நெஞ்சத்தழுக்கை யெல்லாம் நின் அருட்
புனலால்
துடைத்தனை, சுந்தரி! நின்னருள் ஏதென்று சொல்லுவதே,

சஹஸ்ரநாமா,
ஸ்மஸார பங்கநிர்மக்ன சமுத்ரணபண்டிதா
பவரோகக்னீ 842 பவநாசினீ 175
பவதாவஸுதவாருஷ்டி 75
ஜன்மம் ருத்ய ஜார்தப்த ஜன விச்ராந்த தாயினீ.

### பதவுரை

**சுந்தரி:** அபிராம சுந்தரி!
**வஞ்சப் பிறவியைத் துடைத்தனை:** மாயா மயக்கத்தால் ஏற்பட்ட பிறவியை நாசமாக்கினாய்
**உள்ளம் உருகுமன்பு படைத்தனை:** நெஞ்சம் நெக்கு நெக்காக உருகும் மெய்யன்பை உண்டாக்கினை
**பத்மபதயுகம் சூடும் பணிக்கே அடைத்தனை:** அடியேனை திருவடி தாமரைகள் இரண்டையும் சென்னியில் சூடும்படி வாய்ப்பை யளித்தாய்.
**நின் அருட்புனலால்:** உனது அருட்பிரவாகத்தால்
**நெஞ்சத்து அழுக்கை யெல்லாம் துடைத்தனை:** என் நெஞ்சத்தில் அனுதியாய்ப் பற்றியிருந்த மலங்களைக் கழுவி விட்டாய்.
**நின்னருள் ஏதென்று சொல்லுவதே:** உன்னுடைய பேரருளை எத்தகையது என்று யாரால் அளவிட்டுச் சொல்லமுடியும்.

### பொழிப்புரை

அழகே உருவான அபிராமி அம்மையே! உனது திருவடித் தாமரைகள் இரண்டையும் என் சென்னியில் சூடும்படி அருளிய தன் காரணத்தால், என் உள்ளத்தில் மெய்யன்பு பெருகியது, என்னை அனுதியாய்ப் பற்றியிருந்த மலங்கள் உன் அருள் வெள்ளத்தில் கழுவி நீக்கப்பட்டன. கடைசியில் என் பிறவி நோயும் தீர்ந்தது. என்னே! நின் இன்னருள்! அதை எவ்வாறு இயம்புவது?

## விரிவுரை

பதயுகம் யுகம் என்பது வடமொழி 'யுகளம்' என்றதன் திரிபு. இரட்டை என்று பொருள். உள்ளம் உருகு மன்பு என்றுப் பொதுப்படையாகக் கூறினமையால் சகல ஜீவராசிகள் மீதும் கொண்ட அன்பைக் குறிக்கும். சித்தியடைந்த உபாஸகர்கள் யாவற்றிலும் தேவியின் உருவத்தையே கண்டு அன்பு பூண்டொழுகுவர். அடியாருக்கு அன்பர் என்றே பெயருமுண்டு. வஞ்சப்பிறவி: வஞ்சம்: மாயை. "இறப்பும் பிறப்பும் பொருந்த எனக்கெவ்வண்ணம் வந்ததென்றெண்ணியான் பார்க்கில் மறப்பும் நினைப்புமாய் நின்ற வஞ்ச மாயாமனத்தால் வளர்ந்தது தோழி" என்ற தாயுமானவர் திருவாக்கையும் ஒப்பு நோக்குக. நெஞ்சத் தழுக்கு உயிரை அனுதியாய்ப் பற்றியிருக்கும் மும்மலங்களும் அவற்ருல் விளைந்த காமக்குரோதாதிஷ்ட வர்க்கங்களையும், பாணினீயோக சூத்ரத்தில் கூறப்பட்ட 1 விபர்யம் (சிப்பியில் வெள்ளியைக்காணும் விபரீதபுத்தி) 2 விகல்பம் (சந்தேகம்) 3 நித்ரை அல்லது அபாவம் (உண்மையை அறியாது பொய்யில் ஆழ்ந்து கிடத்தல்) 4 ஸ்மரணம் (ஞாபகசக்தி) என்ற மனோவிகாரங்கள் நான்கையும் குறிக்கும்.

———

## 28-வது பாட்டு

## இதுவுமது

சொல்லும் பொருளும் என நடமாடும் துணைவருடன்
புல்லும் பரிமளப் பூங்கொடியே! நின் புதுமலர்த்தாள்
அல்லும் பகலும் தொழுமவர்க்கே அழியாவரசும்
செல்லும் தவநெறியும் சிவலோகமும் சித்திக்குமே.

### பதவுரை

சொல்லும் பொருளும் என: சொல்லும் பொருளும் போல பிரிக்க முடியாதபடி
நடமாடும் துணைவருடன்: கூத்தப் பெருமானாகிய கணவரோடு
புல்லும்: ஒன்றியிருக்கும்,
பரிமளப் பூங்கொடியே: இயற்கையாகவே மணம் கமழும் பூங்கொடி போன்ற அபிராமி அம்மையே
நின்புது மலர்த்தாள்: அன்றலர்ந்த செந்தாமரை போன்ற திருவடிகளை
அல்லும் பகலும்: இரவு பகல் இரண்டிலும் இடைவிடாது
தொழுமவர்க்கே: வழிபடும் சாக்த சித்தர்களுக்கு மட்டுமே
அழியாவரசும்: கேடடையாத அரச போகமும்
செல்லும் தவநெறியும்: பரலோகத்துக்குச் செல்லும் தவவொழுக்கமும்
சிவலோகமும்: சாலோக பதவியும்
சித்திக்குமே: கைகூடுமே.

### பொழிப்புரை

சொல்லும் பொருளும் போல பிரிக்க முடியாமல் உன் கணவரான கூத்தப் பெருமானுடன் அபின்னமாய் ஒன்றியிருக்கும் சித்சக்தியாகிற அபிராமி அம்மையே! நறுமணம் இயற்கையாக அமைந்த பூங்கொடி போன்று இருப்பவளே உன்னை எப்பொழுதும் உபாஸ்தி செய்பவர்களுக்கே கேடில்லாத ராஜ்ய போகமும், முக்திக்குச் செல்லும் தவநெறியும் சிவலோக பதவியும் அவரவர் கோருகிறபடி அவரவர் பக்குவத்துக்குத்தக்க அளிக்கின்றாய்.

### விரிவுரை

சொல்லும் பொருளும் "வாகர்த்தா இவஸம்ப்ரக்தௌ" என்றான் காளிதாசன். சொல் என்பது பேசப்பட்டும் கேட்கப்பட்டும் ... அது சக்தி

பரமான விமர்சாம்ஸம். பொருள் மனதால் மட்டுமே அனுஸந்தானம் பண்ணி அனுபவிக்கக் கூடியதாதலால் அது சிவாத்மக மான பிரகாம்சம். ஒரே வஸ்துவின் இரண்டு நிலைகள். இரண்டு பரிமணங்கள். ஒன்றிலிருந்து ஒன்றைப்பிரிக்க முடியாதாதலின் அவை இரண்டும் ஒரே வஸ்துதான். மேலும் சொல்லும் பொருளுமென நடமாடும் துணைவர் என்றதால் சக்தி சம்மேளனத்தாலேயே அவர் ஆடுகிறார் என்ற பொருளும் சித்திக்கின்றது.

இன்னும் "சிவாயநமவென்னும் திருவெழுத்தஞ்சாலே அவாயமற நின்றாடுவான்" என்ற சித்தாந்த சாஸ்த்ரத்திருவாக்கு ஒப்ப சொல்லாகிய பஞ்சாக்ஷர மந்த்ரத்துக்குப் பொருளாயது அவன் திருநடனம் என்றும் கூறலாம். பின்னும் "பேசும் பொருளுக்கு இலக்கிதமாம்" என்ற திருவாக்கும் ஒப்பு நோக்குதற்குரியது. "புதுமலர்த்தாள்" என்பதை அன்றலர்ந்த செந்தாமரையென்று பொருள் கொண்டோம். அன்றியும் என்றும் புதுமையாகவே விளங்கும் திருவடி என்று கூறினும் அமையும். அல்லும்பகலும் தொழுமவர் பாணினி சூத்திரத்தில் (14) தீர்க்ககால—நைரந்தர்ய—ஸத்காரம் என்று கூறியிருப்பதுபோல நீண்டகாலம், இடைவிடாமல் சிரத்தை பிரம்மசரியம், தவம் முதலியவற்றோடு ஏகாக்ரமாகச் செய்யப்படும் உபாஸ்தியைக் கூறிற்று என்று கொள்ளல் வேண்டும். அழியாவரசு "ராஜபீடநிவேசிதநிஜாச்ரிதா" என்ற 688 வது நாமாவும் (அதாவது தன்னை ஆச்ரயித்தவர்களை ராஜபீடங்களில்வீற்றிருக்கச்செய்பவள்) "ஸாம்ராஜ்ய தாயினீ" என்ற 692 வது நாமாவும் (அதாவது ஸாம்ராஜ்யத்தை அளிப்பவள்) குறிப்பிடுகின்றன.

செல்லும் தவநெறி, முக்திக்குச்செல்லும்தவநெறி, சிவலோக பதவி அது பதமுக்தி, ஆக மூன்று விதமான பலன்கள் குறிக்கப் பட்டன. உபாஸகர்களுடைய பக்குவத்தையும் கோரிக்கையையும் அறிந்து அவர்களுக்கு இகலோகத்தில் ராஜ்சிரேயஸ்ஸையும், பரலோகத்தில் சிவலோகமோ அதற்கு மேற்பட்டதான சாயுஜ்யமோ கொடுக்க வல்லமையுள்ளவள் என்று பொருள் "சித்திக்குமே" என்றதால் உபாஸகன் கோராமலே தானே கிடைக்கும் என்று பொருள். நிஷ்காம்யமான உபாசனையால் இறைவியே வேண்டத் தக்கறிந்து அளிப்பாள் என்றவாறு.

---

## 29-ம் பாடல்.

### அபிராமியே "ஸர்வசக்திமயி" எனல்

சித்தியும் சித்திதரும் தெய்வமாகித் திகழும்பரா
சத்தியும் சத்திதழைக்கும் சிவமும், தவமுயல்வார்
முத்தியும் முத்திக்கு வித்தும் வித்தாகி முளைத்தெழுந்த
புத்தியும் புத்தியின் உள்ளே புரக்கும் புரத்தையன்றே.

பதவுரை.

சித்தியும் : சகல சித்திகளும்
சித்திதரும் தெய்வமாகித்திகழும் பராசக்தியும் : அந்தந்த சித்திகளுக்கு அதிஷ்டானமாய் விளங்கும் பராசக்தியும்
சத்தி தழைக்கும் சிவமும் : சக்தி தோன்றுவதற்குக் காரணமாய் நின்ற சிவமும்.
தவமுயல்வார் முத்தியும் : அம்பாளை நோக்கி உபாஸனை செய்வார் அவரவர் பக்குவப்படி அடையும் பதமுக்தியும்.
முத்திக்கு வித்தும் : கடைசியாக அடையக்கூடிய சக்தியோடு தாதம்மியமாகும் சாயுஜ்யத்துக்கு விதையாவதும்.
வித்தாகி முளைத்தெழுந்த புத்தியும் : முக்திக்கு வித்தாகி என் உள்ளத்தில் முளைத்து எழுந்த மெய்ஞ்ஞானமும்.
புத்தியினுள்ளே புரக்கும் : அவ்வாறு எழுந்த மெய்ஞ்ஞானம் நழுவிவிடாமல் நிலைநிறுத்துபவளும்.
புரத்தையன்றே : முப்புரங்களில் வாசம் செய்யும் அபிராமிதான்

பொழிப்புரை.

சகல விதமான சித்திகளும், அந்த சித்திகளின் அதிஷ்டான தேவதைகளாய் இருக்கும் பராசக்தியும், அப்பராசக்தி தோன்றுவதற்கு அடித்தளமான சிவமும், சாக்தோபாஸகர்கள் அவரவர் பக்குவப்படி அடையும் பதமுக்திகளும், முடிவில் அவர்கள் அடையும் சாயுஜ்ய நிலையும் அந்நிலைக்கு வித்தும், அவ்விதத்தில் முளைத்த மெய்ஞ்ஞானமும். அம்மெய்ஞ்ஞானம் என் உள்ளத்திலிருந்து வழுவாது நிலைநிறுத்தும் சக்தியும், திரிபுர சுந்தரியான அபிராமியம்மையேயாகும்.

விரிவுரை.

முன் 26-ம் பாட்டின் விரிவுரையில் சாக்த சித்தாந்தம் பத்து விதமான சித்திகளை ஒப்புக்கொள்ளுகின்றது. இப்பத்து சித்திகளும் ஸ்ரீசக்ரத்தின் பூபுரங்கள் மூன்றில் வெளியிலுள்ள முதல் பூபுரத்தில் உள்ளன. நவாவரணபூஜையின் போது முதலில் இந்த சித்திகளே அந்தந்த ஸ்தானங்களில் வைத்து வழிபடப்படுகின்றன. இந்த சித்திகள் இருக்கும் முதற் கோட்டுக்கு அதிஷ்டான சக்தி, திருபுரா என்று பெயர். ஈண்டு பூபுரங்கள் மூன்றுமே புரங்களாகவும் அம் மூன்றின் அதிஷ்டானமான பராசக்தியை திரிபுரை யென்றும் சாக்த தந்த்ரங்கள் கூறும். இவ்வாறே ஒவ்வொரு ஆவரணத்து அதிஷ்டான சக்திகளுக்கு திரிபுரா, திரிபுரேசி, திரிபுரஸுந்தரி, திரிபுரவாஸினி, திரிபுராச்ரிதா, திரிபுரமாலினி, திரிபுராசித்தி, திரிபுராம்பா, மஹாதிரிபுரசுந்தரி எனப்பட்டவர்கள்.

இது அறியாதவர்கள் மேலே சொன்ன நவசக்திகளுக்கும் ஒரே பொருள் கூறிவிடுவர். சக்தி ஒன்றேயாயினும் அவர்களுக்குள் ஸ்தான பேதம் உண்டு என்பதை அறிவுறுத்தவே இதை எழுதினேம். ஆகையால் சித்திதரும் தெய்வமாகித் திகழும் பராசக்தி என்ற விடத்து பராசக்தியின் ஸ்தான பேதமான திருபுரையைக் குறிக்கும். சக்தி தழைக்கும் சிவம். சிவம் என்றது உலக காரண பரவஸ்து. அதன் முதல்நிலையில் "ஸ்தாணு" அல்லது அசைவில்லாதது எனப்படும். அதை ஆங்கில விஞ்ஞானிகள் Static Energy என்பர். அதன் ஆற்றலாகிய சக்தி அதனுள் ஒடுங்கிக்கிடக்கும். சக்தி ஸ்புரிப்பதை ஆங்கிலத்தில் Potential Energy என்பர். அது விரிந்து நாமரூப பிரபஞ்சம் தோன்றுவதை Kinetic Energy என்பர். அதனால்தான் சக்தி சிவத்தை ஈன்றும், சிவம் சக்தியை ஈன்றும் இரண்டும் சேர்ந்து பிரபஞ்சத்தை ஈன்றது என்று சித்தாந்த சாஸ்திரங்கள் கூறுகின்றன. சக்திதழைக்கும் சிவம் என்றதில் "தழைக்கும்" என்ற சொல்லின் நயம் சிந்திக்கத்தக்கது. தழைத்தல், முளைத்தல், அங்குரித்தல், ஸ்புரித்தல் என்ற கருத்துக்கள் நிறைந்தசால். முளைப்பதற்கு முன் முளைக்கும் சக்தி வித்தில் இருக்கவேண்டுமல்லவா? ஆக சிவத்தின் அங்குரிக்கும் ஆற்றலே சக்தி என்பது வெளிப்படை. தவமுயல்வார் முக்தி என்பது. சாக்தத்தில், ஜீவன் சக்தியோடு தாதான்மியம் அடைந்த முக்தி எனப்படும். சிவத்தோடு கலப்பதை சாயுஜ்யம் என்று சைவசித்தாந்தம் கூறுவதுபோல சக்தியோடு உபாஸகன் தாதம்மியம் அடைவதை சாதாக்யம் என்று கூறுவார். சைவ சித்தாந்த சாதாக்யம் சிவசக்திகளின் தாரதம்யத்தால் ஆறு வகைப்படும், சாக்த சாதாச்யம் சாதகன் சக்தியோடு ஐக்யமாகிற நிலையைக் கூறும்.

30ம் பாடல்

## பராசக்தியைப் பற்றாகப் பற்றியவர்களுக்கு ஒரு நீங்கும் விளையாது

அன்றே தடுத்தென்னை ஆண்டு கொண்டாய் கொண்டதல்ல
வென்மை
நன்றே உனக்கினி நான் என்செயினும் நடுக்கடலுள்
சென்றே விழினும் கரையேற்றுகை நின் திருவுளமே
ஒன்றே, பலவுருவே அருவே என் உமையவளே

பதவுரை

அன்றே—அந்நாளிலேயே
என்னைத்தடுத்து—பிரபஞ்ச மயக்கத்திலிருந்து விலகி
ஆண்டுகொண்டாய்—அடிமைப்படுத்திக்கொண்டாய்
கொண்டதல்ல வென்மை—அப்படி ஆட்கொள்ளவில்லை
என்று இன்று சொல்லுவது
நன்றே!—நன்றாயிருக்க மாட்டாது
ஒன்றே—சிவத்தோடு ஒன்றியிருக்கும் ஒப்பற்ற ஒரே வஸ்துவே
பலவுருவே—உன் இச்சையால் உயிர்களின் நன்மையைக்கருதி
பல உருவங்களை மேற்கொண்டவளே
அருவே—ரூபமற்றவளே
என் உமையவளே—என்னுடைய உமாதேவியாரே
உனக்கு இனி—இனிமேல் உனக்கு
நான் என் செயினும்—நான் என்ன செய்தாலும்
நடுக்கடலுள் சென்றே விழினும்—சமுத்திரத்தில் போய்
விழுந்தாலும்
கரையேற்றுவது—என்னைக்கரையேற்றிக் காப்பாற்றுதல்
நின் திருவுளமே!—உன் திருவுளப்பாங்கே

பொழிப்புரை

ஒன்றாயும், பலவுருவாயும், அருவமாயும் இருக்கும் என் உமாதேவியே, அந்நாளிலே என்னை பிரபஞ்சப்பற்றினின்றும் நீக்கி உனது அடிமையாக்கிக் கொண்டனை. இன்று நீ என்னை ஆட்கொள்ளவில்லை என்று சொல்வது உன் கருணைக்குத் தகுதியாகுமோ. நான் எது செய்தாலும் என் அறியாமையால் பிரபஞ்ச வாழ்க்கை என்னும் பெருங்கடலில் போய் விழ்ந்தாலும் என்னை மீட்பது உன் திருவுள சம்மதமேயன்றோ?

விரிவுரை

அன்றே: ஆட்கொண்ட காலத்திலே என்றும், அறியாக் காலத்திலேயென்றும், தாய் வயிற்றில் கருவாய் இருந்த காலத்திலே என்றும், கூறலாம். சைவ சமயப் பெரியார் பலரும் இம் மூன்று வகைகளையும் கூறியிருக்கின்றனர். பூரணமாக ஆத்ம சமர்ப்பணம் செய்த பிரபன்ன சிலர்கள் செய்யும் காரியங்கள் யாவும் இறைவன் செயலே என்றிருப்பர். தாங்கள் சுதந்தர ஹீனர்கள் என்பதை உணர்ந்து தம்முள்ளின்று இயக்கும் பராசக்தியே தம்மை இயக்குகின்ருள் என்று உணர்ந்தவர்களாய் இருப்பர். இதை சிவஞான சித்தியாரின் பத்தாம் சூத்திரம் மிக அழகாக விவரிக்கின்றது.

இவனுலகி லிதமகிதஞ் செய்த வெல்லா
மித மகித மிவனுக்குச் செய்தார் பாலிசையு
மவனிவனாய் நின்ற முறையேகனாகி
யரன் பணியின்றிடவு மகலும் குற்றம்
சிவனுமிவன் செய்தியெல்லா மென்செய்தி யென்றுஞ்
செய்ததெனக் கிவனுக்குச் செய்ததென்றும்
பவமகல வுடனாகிநின்று கொள்வான் பரிவாற்
பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கிவிடுமே

என்பதைப் பார்க்க.

கடலில் சென்றே விழினும்: என்பதில் இறைவியோடு இரண்டறக் கலந்து தாதாம்மியம் அடைந்த நித்ய யோகிகள் திரும்ப விஷயாகார விருத்திகளில் பிரவேசித்தாலும், புளிம்பழமும் அதன் தோடும் போன்றும், தாமரையிலையில் தண்ணீர் போன்றும் சரீர யாத்திரை முடியும்வரை உடலால் செய்யப்படும் காரியங்கள் உயிரைப் பற்றுது இருக்கும். ஒன்றே: ஆதியில் சிவத்தோடு அபின்னமாயிருந்த சித்சக்தி சிவத்தோடு ஒன்றி ஏகமாய் இருப்பதைக்கூறும். பலவுருவே என்பதை முந்தின இருபத்தி ஒராம் பாட்டில் விவரித்தோம். ஆண்டு கண்டு தெளிக. அருவே என்றதால் அம்பாள் பல உருவங்களைத் தன்னிச்சையால் மேற்கொண்டாலும் அவளுடைய சொரூப லக்ஷணத்தில் உருவமற்ற பரப்பிரம்ம ஸ்வரூபிணியேயாவாள். உமா என்பது பற்றியும் முன்பே கூறப்பட்டது.

31-வது பாட்டு

## இறையின் அருள்பெற்றோர் இனிச் செய்யவேண்டியது ஒன்றுமேயில்லை

உமையும் உமையொருபாகனும் ஏக உருவில் வந்திங்கு
எமையும் தமக்கன்பு செய்யவைத்தார்; இனி எண்ணுதற்குச்
சமையங்களுமில்லை; ஈன்றெடுப்பாள் ஒருதாயுமில்லை;
அமையும் அமையுறு தோளியர்மேல் வைத்த ஆசையுமே

பதவுரை

உமையும்: உமாதேவியாரும்
உமையொருபாகனும்: மாதொரு பங்கனான சிவபெருமானும்
ஏக உருவில்: இருவரும் ஒன்றான அர்த்தநாரியாக
வந்து இங்கு: இப்பிறப்பில் எழுந்தருளிவந்து காட்சி கொடுத்து
எமையும்: என்போன்ற அடியேனையும்
தமக்கு அன்பு செய்ய வைத்தார்: தம்மை வழிபாடுபடும்படி அருள் பாலித்தார்கள்.

(ஆதலால்)

இனி எண்ணுதற்கு சமையங்களுமில்லை: இனிமேல் நான் ஆராய்வதற்குரிய சமயநெறிகள் வேறொன்றுமில்லை.
ஈன்றெடுப்பாள் ஒருதாயுமில்லை: இனி நான் பிறக்கமாட்டேன் ஆதலால் என்னை பெறுவதற்கு ஒரு தாயும் இல்லை.
அமையுறு தோளியர் மேல்: மூங்கில் போன்ற தோளையுடைய பெண்கள் மீது
வைத்த ஆசையும் அமையும்: கொண்ட மோகமும் இல்லையென்றாகிவிட்டது.

பொழிப்புரை

இறைவியும் இறைவனும் ஒன்றி இரண்டற நிற்கும் அர்த்தநாரி சொரூபமாக எனக்குக் காட்சி தந்தருளி, அவர்களை அன்புடன் உபாஸிக்க வைத்த பெருங்கருணையின் காரணமாக, இனிமேல் நான் பற்றவேண்டிய சமயநெறி வேறில்லை. இனிபிறவாத நிலையடைந்து விட்டதால் எனக்கென்று தாய் என்றதொரு பெண் இருக்கப்போவதில்லை, மூங்கிலைப்போன்ற தோளுடைய பெண்கள் மீதுற்ற ஆசையும் இல்லை என்றாயிற்று.

விரிவுரை

பொதுக் கருத்தாகக் கூறினல் தாயையும் மனைவியையும் துறந்தேன் என்று பொருள் கூறலாம். அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள், அகன்றுள் அகலிடத்தார் ஆசாரத்தை என்பது போல. இது சாமன்னியக் கருத்து. உமையும் உமையோர்பாகனும் ஒன்றுக அர்த்தநாரியாகத் தோன்றும் இடம் ஸஹஸ்ரார கமலத்தில். அது சந்த்ர மண்டலம். அங்கு குண்டலினிசேரும் போது ஏற்படும் அனுபவம் சிவசக்திகள் வேறன்றி அர்த்தநாரி யாக இருக்கும் காட்சி. இந்த நிலையை அடைந்தவர்களுக்கு இனிப் பிறப்பில்லையாதலால் இனி ஒரு தாயாரின் கர்ப்பத்தில் சேர மாட்டேன் என்றும், இத்தகைய யோகிகள் ஜிதேந்திரியர்களா தலால் பெண்வழிச்சேரமாட்டேன் என்றும் கூறுகிருர். சமையம் என்பது சமையம் என்ற சொல் எதுகைநோக்கி சமையமாயிற்று. ஜீவன், முக்தியடைந்த மகான்களுக்கு சமயக்கோட்பாடுகள் அதாவது ஆலய வழிபாடு, புறப்பூஜை, முதலிய உபாயங்கள் தேவையில்லைஎன்று கூறப்பட்டது. அமைதல் என்ற சொல்லுக்கு அடங்குதல், போதியதாதல், முடிவடைதல், இல்லையாதல் என்ற பொருள்கள் உள. அமையுறு, பெண்களின் தோள்களை மூங்கி லுக்கு ஒப்பிடுதல் கவிமரபு ''வேயுறுதோளி'' என்பது போல. இப்பாடலின் பிண்டக்கருத்து சஹஸ்ராரத்தில் குண்டலினியைச் சேர்த்து அர்த்தநாரியாக இறைவியையும் இறைவனையும் அனுப வித்தவர்களுக்கு வேறெரு உபாயம் தேவையில்லை. அவர்களே பிறப்பற்றுர். ஜிதேந்திரியர்கள் என்பது.

## 32-வது பாட்டு

## அம்மை ஆட்கொண்ட அதிசயம்

ஆசைக்கடலில் அகப்பட்டு அருளற்ற அந்தகன்கைப்
பாசத்தில் அல்லற்பட இருந்தேனை நின்பாதமென்னும்
வாசக்கமலம் தலைமேல் வலிய வைத்தாண்டுகொண்ட
நேசத்தை என்சொல்லுவேன் ஈசர் பாகத்து நேரிழையே!

### பதவுரை

ஈசர் பாகத்து நேரிழையே: இறைவனின் இடது பாகத்தில் அமர்ந்த ஆபரணங்களணிந்த அபிராமியே
ஆசைக்கடலில்: ஆசையாகிய கடலில்
அகப்பட்டு: சிக்குண்டு
அந்தகன்: யமனுடைய
கைப்பாசத்தில்: கையிலிருக்கும் பாசக்கயிற்றால்
அல்லற்பட இருந்தேனை: துன்பப்பட இருந்த அடியேனை
நின்பாதம் என்னும்: நினது திருவடிகள் என்ற
வாசக்கமலம்: மணம்பொருந்திய தாமரைகளை
தலைமேல் வலிய வைத்து: எனது சிரசில் நீயாகச்சூட்டி
ஆண்டுகொண்ட: தடுத்தாட்கொண்ட
நேசத்தை: இன்னருளை
என் சொல்லுவேன்: எப்படி புகழ்ந்துரைப்பேன்!

### பொழிப்புரை

இறைவனுடைய இடது பாகத்தில் உறையும் அபிராமி அம்மையே, அடியேன் ஆசாபாசங்களாகிற பிரபஞ்சமெனும் பெருங்கடலில் சிக்குண்டு அதன் காரணமாக யமனுடைய கைப் பாசத்துக்கு ஆளாக இருந்த அடியேனை நீயே வலிய வந்து ஆட் கொண்ட நின் கருணைத்திறத்து என்னென்று கூறுவேன்!

### விரிவுரை

ஆசைக்கடல், கடலில் அலைகள் இடைவிடாது ஒன்றன்பின் ஒன்று துடர்ந்து வருவதுபோல் ஆசை ஒன்றுபோக ஒன்று வந்து கொண்டேயிருப்பதால் ஆசைக்கடல் என்றனர். ஆசைகளை ஏடனை கள் என்பர். அவை மூவகைத்து மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை என்பர். தேவியே ஏடனைகள் போக்கத்தகுந்தவள். இவற்றைத் துறந்தவர்களே தேவியின் ஆராதனைக்கு யோக்ய மானவர்கள். லலிதாத்ரிசதியில் 29வது நாமா "ஏஷணைஷி

தாத்ருதர்" என்பது. ஆசையே பிறப்பு இறப்புக்குக் காரணம் என்பதைத் திருக்குறளில் "அவா என்ப எல்லா உயிர்க்கும் எஞ் ஞான்றும் தவாஅப் பிறப்பீனும்வித்து" என்பதால் அறியலாம். அந்தகன் யமன். அவன் இளைஞர், முதியவர், அறிஞர், மூடர், ஆண், பெண், பணக்காரன், ஏழை. பெற்றோர்க்கு ஓரேபிள்ளை, விவாகமாகி சில தினங்கள் கூட ஆகவில்லை, என்ற பாகுபாடுகள் எதையும் பாராமல் தன் பாசத்தில் கட்டிக்கொண்டு போவானு னதினால் அவனைக்குருடன் "அந்தகன்" என்ற பெயரால் அழைக் கின்றோம். அல்லற்படலாவது, இந்த ஜன்மாவேயன்றி பின்னும் பிறந்து பிறந்து, இறந்து இறந்து துன்பப்படுதலையும் குறிக்கும். சிலர் சாகும் தருவாயில் மிக்க அவஸ்தைப்படுவதைப் பார்க்கும் போது அதை யமவாதனையென்றழைப்பது வழக்கத்திலிருந்து வருகின்றது. ஆசாபாசங்களுடைய உயிர்கள்தான் அவ்வாறு யம வாதனையடையும் என்ற பொதுக்கருத்தும் நம்மிடையே நிலவி வருகிறது. சைவ சித்தாந்தத்திலும் அருட் சக்தியின் அருளன்றி சிவனையடையமுடியாது என்ற உண்மை போதிக்கப்பட்டு மிருக் கின்றது. "நந்தம்மை யாளுடையாள் தன்னிற் பிரிவிலா எங் கோமான் அன்பர்க்கு முன்னி அவள் நமக்குமுன் சுரக்கும் இன் னருள்" என்ற தமிழ் வேத வாக்கும் இக்கருத்தை வலியுறுத்தும். ஆசைக்கடலுக்கு அம்பாளின் இன்னருளே புணை என்பதை இரண்டு சித்தாந்தங்களும் ஒப்புக்கொள்ளுகின்றன.

---

33ம் பாட்டு

## அந்திம காலத்தில் அன்னை அஞ்சல் எனல்

இழைக்கும் வினை வழியேயடுங் காலன் எனைநடுங்க
அழைக்கும் பொழுது வந்தஞ்சல் என்பாய்; அத்தர் சித்த
மெல்லாம்
குழைக்கும் களபக்குவிமுலையாமளைக் கோமளமே
உழைக்கும் பொழுதுன்னையே அன்னையே என்பன் ஓடிவந்தே

### பதவுரை

அத்தர் சித்தமெல்லாம்: பிரபஞ்சத்துக்குத் தந்தையாக விளங்குகின்ற பரமசிவனுடைய மனத்தை
குழைக்கும்: உருகச்செய்யும், இளகும்படி செய்யும்
களபக்குவிமுலை: வாசனை திரவியங்கள் சேர்த்த கலவைச் சந்தணக் குழம்பை அணிந்த குவிந்த ஸ்தனங்களையுடைய
யாமளைக்கோமளமே!: யாமளை என்ற சுந்தரியே
இழைக்கும் வினைவழியே: அடியேன் பல பிறவிகளில் இழைத்த வினையின் பயனாய்
அடுங்காலம்: போர்கோலம் பூண்ட யமன்
எனைநடுங்க: நான் பயந்து நடுங்தும்படி
வந்து அழைக்கும்பொழுது: என்னை நெருங்கிக் கூப்பிடும் சமயம்
உழைக்கும்பொழுது: அடியேன் யமவாதனைப்பட்டுக் கலங்கும் போது
உன்னையே அன்னையே என்பன்: உன்னைத்தான் "அம்மா" என்று கூப்பிடுவேன்
ஓடிவந்தே: (அப்பொழுது) விரைவாக எழுந்தருளி வந்து
அஞ்சல் என்பாய்: பயப்படாதே என்றுகூறி அபயம் அளிக்க வேண்டும்

### பொழிப்புரை

உலக பிதாவாகிய சிவபெருமானின் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் வாசனைக் கலவை பூசிய குவிந்த முலைகளையுடைய யாமளையாகின்ற அபிராம சுந்தரியே! நான் செய்த வினைகளின் பயனாய், நான் பயந்து நடுங்கும்படி போர்கோலம் கொண்டயமன் என்னை அழைக்கும்போது நான் மிகவருந்துவேன். அதுசமயம் உன்னையே "அம்மா" என்று கூப்பிடுவேன். நீ விரைந்துவந்து "அஞ்சேல்" என்று அபயம் தரல் வேண்டும்.

விரிவுரை

இழைக்கும் வினை: ''இழைத்தல் என்ற சொல்லுக்கு முடைதல் என்ற பொருளும் உண்டு. நான் நல்வினை தீவினை என்ற இரண்டு வகை நூல்களால் வினைகளை முடைந்து கொள்கிறோம். நெசவு செய்யும்போது குறுக்கும் நெடுக்குமாக இரண்டுவித நூல்களைப் பாவில் இட்டு முடைதல்போல. ''அத்தர்சித்தமெல்லாம் குழைக்கும் முலை''-என்பதை லலிதா ஸஹஸ்ரநாமாவில் "காமேச்வரப்ரேம ரத்னமணிப்ரதிபணஸ்தனீ" என்று வரும் 33வது நாமா குறிக்கும். அதாவது அம்பாள் காமேச்வரருடைய காதலாகிற ரத்னத்துக்கு பிரதிபிரயோஜனமாக தனது இரண்டு ஸ்தனங்களையும் அவருக்கு அம்பாள் கொடுக்கின்றுளாம். ஸௌந்தர்ய லஹரியை தமிழில் காவ்யமாகச்செய்த கவிராஜ பண்டிதர் "முக்கணிறைவர்க்குமயல் முற்ற எழில் முற்றும் முலை" என்று வெகு அழகாகக் கூறியிருக்கின்றுர். அம்பாளின் ஸ்தனங்கள் சந்திர சூரியர்களே என்று 19-வது சுலோகத்தில் சங்கரர் கூறுகின்றுர். "ரவீந்து ஸ்தனயுகாம்". யாமளை பச்சை நிறமுடையவள். கோமளம்: அழகு பொருந்தியவள். இங்கு அபிராமியைக் குறிக்கின்றது. இப்பாட்டில் இரண்டாம் வரியில் "வந்து" என்றும், நான்காம் வரியில் "வந்து" என்றும் வருவதில். முதல் "வந்து" என்பதை காலன் வந்து அழைக்கும்போது என்றும், இரண்டாது "வந்து" என்பதை அம்பாள் ஓடிவந்து அஞ்சல் என்பாய் என்றும் கூட்டிப்பொருள் கொள்ளப்பட்டது. இப்பாட்டு கந்தரலங்காரத்தின் 50வது பாடலையும் 80வது பாடலையும் நினைவூட்டுகின்றது.

---

34-வது பாட்டு

## அம்பாள் குண்டலிலியாக ஆதார கமலங்களில் இருத்தல்

வந்தே சரணம் புகுமடியாருக்கு வானுலகம்
தந்தேபரிவோடு தான்போய் இருக்கும் சதுர்முமமும்
பைந்தேன் அலங்கற் பருமணியாகமும் பாகமும் பொன்
செந்தேன் மலரும் அலர்கதிர் ஞாயிறும் திங்களுமே.

பதவுரை

வந்தே சரணம்புகும் அடியாருக்கு: விரும்பிவந்து தன்னை அடைக்கலமாக அடைந்த சாக்தோபாஸகர்களுக்கு

வானுலகம் தந்து: முக்தியை நல்கி

சதுர்முகமும்: பிரம்மாவின் நான்கு முகங்களிலும்

பைந்தேன் அலங்கற்பருமணி ஆகமும்: பசுமையான தேன் துளிக்கும் பலவிதவித மலர்கள் சேர்த்துத் தொடுத்த வன்மாலையும் கௌஸ்துபமணியும் அணிந்த மஹாவிஷ்ணுவின் திருமார்பிலும்

பாகமும்: பரமசிவனுடைய இடப்பக்கத்திலும்,

பொன் செந்தேன் மலரும்: செந்தேன் துளிக்கும் பொன்மலரும்

அலர் ஞாயிறும்: விரிந்த கிரணங்களுடைய சூரிய மண்டலமும்

திங்களும்: சோம மண்டலமும்

பரிவோடு: விரும்பி

தான் போய் இருக்கும்: சென்று வீற்றிருப்பாள்.

பொழிப்புரை

தன்னை விரும்பி உபாஸிக்கின்ற சாதகர்களுக்கு முக்தியை அளித்துவிட்டு தான் போய் நான்முகன் நாவிலும், திருமாலின் மார்பிலும், பரமசிவனின் இடது பக்கத்திலும் செந்தேன் துளிக்கும் பொற்றாமரையிலும், விரிந்த சூரியமண்டலத்திலும், சோம மண்டத்திலும் விரும்பிச்சென்று வீற்றிருப்பாள்.

விரிவுரை

இது சாமான்னிய உரை. சாக்த சித்தாந்த ரகசியம் அறிந்தவர்களுக்கு இப்பாடல் விசேஷமான பொருளைத் தருகின்றது. அதையறியாதார் பண்டிதரேயாயினும் வலிந்துபொருள் கோடல் என்று கூடக்கூறுவர். ஆயினும் அடியேன் கருத்தைச் சொல்லாமல்

இருக்கமுடியவில்லை. இப்பாடல் ஸௌந்தர்ய லஹரியின் 9, 10 சுலோகங்களின் கருத்தைக்கொண்டது. பராசக்தி அகில புவனங்களுக்கும் அதிஷ்டானமானவள். க்ஷுத்ர பிரம்மாண்டம் என்ற மானிட சரீரத்தில் "குண்டலினி" என்ற பெயரோடு இருக்கிறாள். அவள் மூலாதாரத்தில் தன்னையே மூன்றரைச்சுத்து சுற்றிக் கொண்டு தன்தலையை சுஷும்னு நாடியின் அடிபாகத்து துவாரத்தில் தலையை வைத்துக்கொண்டு உறங்குகிறாள். யோகாப்பியசத்தாலும், உபாஸனு பலத்தாலும் இவளை எழுப்பினுல் சுஷும்னை வழியாக அறு ஆதாரங்களையும் பேதித்துக்கொண்டு ஸஹஸ்ராரம் என்ற ஆயிர இதழ் தாமரையை அடைந்து ஆங்கிருக்கும் சதாசிவரோடு அர்த்தநாரியாகச் சேர்ந்துவிடுவாள். பின்பு கீழே இறங்கி ஒவ்வொரு ஆதாரத்தின் வழியே வந்து மூலாதாரத்தில் தங்கிவிடுவாள். மூலாதாரம் பிருதிவிஸ்தானம். அங்கிருக்கும் சிவாத்மகமான பொருளுக்கு பிரம்மா என்று பெயர். அதற்குமேல் இருக்கும் சுவாதிஷ்டானம் அப்புஸ்தானம். அங்கு இருப்பவர் நாராயணர். சுஷும்னு நாடியின் இருபக்கத்திலும் இடர் பிங்கலா என்ற இரு நாடிகள் வலசாரி இடசாரியாக மேலே செல்கின்றன. இவை சுஷும்னையை மூன்று இடங்களில் சந்திக்கின்றன. அந்த சந்திப்புக்கு "கிரந்தி" அல்லது முடிச்சு என்று பெயர். இரண்டு முடிச்சுகளுக்கு மத்தியிலிருக்கும் பாகத்துக்குக் கண்டங்கள் என்று பெயர். முதல் இரண்டு கிரந்திகளுக்கு இடையில் இருப்பது அக்னி கண்டம். அடுத்த இரண்டு கண்டங்களுக்கு மத்தியிலிருப்பது சூரிய கண்டம். அடுத்த இரண்டு கிரந்திகளுக்கு மத்தியிலிருப்பது சந்திர கண்டம். எல்லாவற்றிற்கும் மேலாக இருப்பது ஸஹஸ்ராரம் என்ற ஆயிர இதழ் தாமரை பொன்னிறமானது. இந்த விஷயத்தை முன்பே 20-வது பாடலின் விரிவுரையில் கூறினேம். இந்த அடிப்படையில் இப்பாட்டின் உட்பொருளைப் பார்ப்போம்.

அடியார்க்கு வானுலகம் தருதல் குண்டலினி ஸஹஸ்ராரத்தை அடைதல். பின்பு நான்முகன் என்பது மூலாதாரத்தை, விஷ்ணுவின் ஆகம் என்பது சுவாதிஷ்டானத்தை சிவனது பாகம் என்பது மணிபூரகத்தை; பொன் செந்தேன் மலர் என்பது திரும்பவும் ஸஹஸ்ராரத்தையே. பொன்மலரில் தேனைக்காண முடியுமா? அதுபோல அலங்கல் என்பதை துளபம் என்று உரை கூறினுல் அதில் தேன் இருக்குமா? அலங்கல் என்பது வனமாலையை பொன் மலர் என்பது பொன்னிறமுடைய ஸஹஸ்ராரகமலம். குண்டலி சக்தி அங்கு சேரும்போது அமுதம் பெருகி சரீரத்தின் 72,000

தேன் என்றூர். ஞாயிறும் திங்களும் என்பது, சூரிய கண்டமும் அதிலிருக்கும் மணிபூரக அனாகத கமலங்களும். திங்கள் என்பது சந்திர கண்டமும் அதனுள் அடங்கிய விசுத்தியும் ஆக்ஞையும் பிரம்மன். விஷ்ணுவைச் சொன்னதால் மூலாதாரம் சுவாதிஷ்டானம் சொன்னதாயிற்று. ஆக இப்பாட்டில் குண்டலினீ ரூபமான பராசக்தி யோகசாதனையாலோ, உபாஸனா பலத்தாலோ ஷட்சக்ரபேதனம் பண்ணி ஸஹஸ்ராரத்தை அடைவதும் திரும்ப மூலாதாரத்துக்கு வருவதுமான இயல்பைக் கூறுகின்றூர். அறிந்தவர்கள் புரிந்துகொள்ளட்டும். இதற்குமேல் சொல்ல இடவசதியில்லை. ஆர்தர் எவலன் என்பார் எழுதிய செர்பன்ட் பவர் என்ற ஆங்கில நூலையும், ஸௌந்தர்யலஹரியையும், வேறுதந்த்ர சாஸ்த்ரங்களையும் பார்த்துத்தெளிக.

―――――

35-வது பாட்டு

## அம்பாளின் குண்டலினிரூபம்

திங்கட் பகவின் மணநாறுஞ் சீறடி சிந்தை வைக்க
ஏங்கட் கொருதவம் எய்திபவா எண்ணிறந்த விண்ணோர்
தங்கட்கும் இந்தத் தவமெய்துமோ தரங்கக் கடலுள்
வெங்கட் பணியணைமேல் துயில் கூரும் விழுப்பொருளே.

### பதவுரை

தரங்கக் கடலுள்: அலைகள் நிறைந்த (பாற்) கடலுள்
வெங்கட்: (அக்னியை கக்குவதால்) வெம்மையான கண்களை யுடைய
பணி: பாம்பாகிய
அணைமேல்: படுக்கையின் மீது
துயில்கூரும்: (யோக) நித்திரை செய்யும்
விழுப்பொருளே: மேன்மை பொருந்திய பராசக்தியாகின்ற அபிராமி அம்மையே
திங்கட் பகவின்: சந்திரனின் பிளவுபோன்று
மணநாறும்: நறுமணம் கமழும்
சீறடி: சிறிய பாதத்தை (பாதங்களை)
சிந்தை வைக்க: உள்ளத்தில் வைத்து உபாஸனை செய்ய
எங்கட்கு—எம்போன்ற சாக்த உபாஸகர்களுக்கு
ஒருதவம்—ஒப்பற்ற சாதனை
எய்திவா(று)—கூடிய வாய்ப்புக்கிடைத்தது என்ன ஆச்சரியம்!
எண்ணிறந்த விண்ணோர்—கணக்கில்லாத தேவர்
தங்கட்கும்—அவர்களுக்கும்
இந்தத்தவம் எய்துமோ—இந்த வாய்ப்புக்கிட்டுமோ (கிட்டாது என்றபடி)

### பொழிப்புரை.

அலைகள் மோதுகின்ற திருப்பாற் கடலுள், வெப்பம் பொருந்திய கண்களையுடைய அனந்தன் மீது அறிதுயில் கொள்ளும் விஷ்ணு ரூபிணியே! உன்னுடைய துண்டுப்பிறையின் நறுமணம் கமழும் சிற்றடியை சிந்தையில் வைத்து உபாஸிக்க எம்போன்ற சாக்தோபாஸர்களுக்குக் கிட்டிய தவம் கணக்கில்லாத தேவர் களுக்கும் [illegible] அரியது.

விரிவுரை

உரையாசிரியர்கள் "தரங்கக்கடலுள் துயில் கூரும்" என்பதனை பாற்கடலுள் பள்ளிகொள்ளும் விஷ்ணுவின் சக்தியான லக்ஷ்மியே என்று கூறுகின்றனர். அதுவன்று. பராசக்தியே புருஷ ரூபத்தில் விஷ்ணு என்பது சாக்தம். "புருஷேச விஷ்ணு" என்பது சாஸ்திரம். லலிதா ஸஹஸ்ரநாமவில் "கோப்த்ரீ கோவிந்த ரூபிணீ" என்றும் (267) விஷ்ணு ரூபிணீ (894) வைஷ்ணவீ (893) முகுந்தா (838) நாராயணீ (298) என்ற இடங்களிலும் மஹா விஷ்ணுவே பராசக்தி என்று கூறப்பட்டிருக்கின்றது. வால்மீகி ராமாயணத்தில் சீதை இந்த உண்மையறிந்தவளாதலாலே ராமனைப்பார்த்து ஸ்திரியம் புருஷ விக்ரஹம் என்று கூறுகின்றாள். விஷ்ணுவும் சிவனும் கூடி, சாஸ்தா பிறந்ததாகப் புராணமும் கூறும். "வெங்கண் பணியணை" என்பது ஆதியேஷனை. அது விஷ்ணுவின் தலைக்குமேல் குடைபோல தனது ஆயிரம் தலைகள் வைத்திருக்கிறது. அது பிரம்ம சைதன்யத்தின் அவ்யக்த நிலை. யாவும் ஒடுங்கிய பின்னும் பிரம்ம சைதன்யமே எஞ்சியிருக்குமாதலால் அதனை சேஷன் அல்லது எஞ்சியிருப்பவன் என்று அழைக்கின்றோம். (விஷ்ணு தாமோத்ரம்) இதன் ரஹஸ்யார்த்தம் என்னவெனில் குண்டலீனி ஒவ்வொரு ஆதாரமாக பேதித்துக் கொண்டு மேலே போகுங்கால் அந்தந்த ஆதார சக்திகளை ஆகர்ஷித்துக்கொண்டு செல்லும். விஷ்ணுவின் ஸ்தானமான ஸ்வாதிஷ்டானச் சக்கரத்தில் குண்டலினி விஷ்ணு சக்தியை ஆகர்ஷித்து விஷ்ணு ரூபினியாக மாறிவிடுகிறது என்பது சாக்த தந்த்ர சாஸ்திரங்கள் கூறும் தத்துவம். பராசக்தியே பரப்ரம்ம சொரூபிணியாதலால் அவளை விழுப்பொருளே என்று விளித்தார். திங்கட் பகுவின் மணநாறுஞ் சீறடி என்பதுக்கு உரையாசிரியர்கள் பரமசிவன் பார்வதியாரின் ஊடலைத்தீர்க்க அவள் பாதங்களில் வீழ்ந்தபோது அவருடைய கடா மகுடத்தில் இருக்கும் சந்திரப்பிறை அம்பாள் காலில் படுவதால் இவ்வாறு கூறப்பட்டது என்பர். ஆனால் ஈண்டு சந்திரகலா மண்டலமாகின்ற ஸஹஸ்ரார கமலத்தில் குண்டலினி சேர்ந்து அமிர்தம் பொழிவதைக் கூறியதாகும். இந்தப் பாடலில் "சென்னி வைக்க" என்பதைப் பாடாந்தரமாகக்கொண்டு இறைவன் தலை அவள் பாதங்களில் படுவது ஊடல் காரணம் என்றும் அடியார் சென்னியில் படுவது அருள்காரணமென்றும் உரை கொள்வர். "சிந்தை வைக்க" என்பதுதான் சரியான பாடம். அதற்கு உபாஸனை செய்ய என்பது பொருள். அம்பாளின் பாதாம் புயத்தை உபாஸிப்பது ஓர் பெரிய வாய்ப்பு சாமான்னியருக்குக் கிட்டாது என்பதை லலிதா ஸஹஸ்ரநாமஸ்தோத்திரத்தின்

உத்தர பாகம் பல சுருதியில் 74, 75, 76 முதலிய சுலோகங்களைப் பார்க்க. ஸ்ரீவித்யா உபாஸனை தேவர்களுக்கும் கிட்டாது. எவனொருவன் சிவஸ்வரூபமாகவே இருக்கிறானோ, எவனொருவனுக்கு கடைசி ஜன்மமோ அவனால்தான் ஸ்ரீ வித்யை அடையப்படும் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இது சாதாரணமான தபஸ்ஸினால் கிடைக்கக்கூடியதல்ல. அநேக முந்திய ஜன்மங்களில் செய்த புண்ணிய வசத்தாலேயே கிடைக்கும். அதனால் இப்பாட்டில் ஸ்ரீ வித்யையின் அதிச்ரேஷ்டத்வம் கூறப்பட்டது. தன்னை மட்டும் சொல்லிக்கொள்ளாமல் இதர சாக்தோ பாஸகர்கள் யாவரையும் சேர்த்து "எங்கட்கு" என்று பன்மையில் கூறினார்; ஸ்ரீ வித்யையின் பிராதான்யத்தையும், அதிரஹஸ்யத்வத்தையும் ஏனைய சாக்த சாதகர்களையும் சேர்த்துக் கூறுவதாலும் "சென்னி வைக்க" என்ற பாடம் பொருந்தாமையால் "சிந்தைவைக்க" என்ற பாடம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. "எங்கட்கு" என்ற பன்மையைக் கருதாமல் கூறிய உரைகள் "சென்னிவைக்க" என்று பாடம் கொண்டனர். பரமசிவனையும் தன்னையும் சேர்த்து "எங்கட்கு" என்று பொருள் கொள்வாருமுண்டு. ஆயினும் "எங்கட் கொருதவம் எய்தியவா" என்று தங்களுக்குக் கிடைத்த வாய்ப்பை வியந்தோதுதலின் பரமசிவனைச் சேர்க்க ஞாயமில்லை. எண்ணிறந்த விண்ணோர் தங்கட்கும் இந்தத்தவம் எய்துமோ? என்பதில் தவம் என்பதைத் தவத்தின் பயன் எனப்பொருள் கொள்க. முந்திய வரியில் வரும் "எங்கட்கொருதவம்" என்பது ஒப்பற்ற தவமுயற்சி அல்லது சாதனையென்றே கொள்க. தேவர்கள் காமிகள். நிஷ்காம சாதகர்களே ஸ்ரீ வித்யா உபாஸனையை அடைந்து பலன் பெறுவர். லலிதாதிரிசதி ஸ்தோத்திரத்தின் பலசுருதி 22, 23-வது சுலோகங்கள் பார்க்க. ஸஹஸ்ரநாம பலசுருதி 64-ம் சுலோகமும் பார்க்க. சிறடி சிற்றடி ப்ரஹ்ம நாயகியான அம்பாளுடைய பாதங்கள் சிற்றடி என்பதின் ரஹஸ்யம். ப்ரம்மாண்டத்துக்கு அதிஷ்டானமாய் எங்கும் வியாபித்துப் பூரணமாய் விரிவாய் இருக்கும் பராசக்தியின் வியஷ்டி ரூபமான குண்டலினீ க்ஷுத்ரப்ரம்மாண்டமான மனிதனின் உடலில் "பிஸதந்துதநீயாஸி" என்ற படிதாமரைத் தண்டின் நூல்போல் மெல்லியதாக இருப்பதால் சிறடி என்றார். சிறடி சென்னிவைக்க என்ற பாடத்தில் குண்டலினீ ஸஹஸ்ராரத்தில் சேருவதையே குறிக்கும். சிந்தித்துத் தெளிக.

---

36-வது பாட்டு

## அம்பாள் போக மோக்ஷ பிரதாயினி

பொருளே! பொருள் முடிக்கும் போகமே! அரும்போகம் செய்யும்
மருளே! மருளில்வரும் தெருளே! என் மனத்து வஞ்சத்
திருளேதும் இன்றி ஒளி வெளியாகி இருக்குமுன்றன்
அருளே தரிகின்றிலேன் அம்புயாதனத் தம்பிகையே!

பதவுரை

அம்புயாதனத்து: தாமரையே ஆசனமாகவுடைய
அம்பிகையே: அபிராமாம்பிகையே!
பொருளே: ஐச்வர்ய ரூபினியே!
பொருள் முடிக்கும் போகமே: ஐச்வர்யத்தால் அடையப்படும் சகலவிதமான இன்ப ரூபிணியே!
அரும்போகம் செய்யும் மருளே!: இன்பத்தைத் துய்க்கச் செய்யும் திரோபவ சக்தியான மாயையே!
மருளில்வரும் தெருளே!: இன்பத்தைத் துய்த்து அதில் எய்ப்பு எய்தி அதனுல் உண்டாகும் தெளிவே
என் மனத்து: அடியேனுடைய மனதில்
வஞ்சத்து இருள் ஏதுமின்றி: மாயையால் உண்டான அக்ஞான இருள் அறவே ஒழிந்துபோகும்படி
ஒளி வெளியாகி: ஞான ஒளிவீசும் பரவெளியான அருட்சக்தியாகி
இருக்கும் உன்றன்: இருக்கும் உன்னுடைய
அருள்: திருவருள்
ஏதறிகின்றிலேன்: எத்தகையது என்று அறிய மாட்டேன். (நீயே சொன்னுலன்றி)

பொழிப்புரை

நானுவிதமான செல்வப் பொருள்களாய்த் தோன்றியும், அப் பொருள்களால் விளையும் இன்பமாகத் தோன்றியும், ஜீவான்மாக் களை மயக்கி இன்பம் துய்க்கச்செய்யும் திரோபவ சக்தியாக இருந்த அம்பிகையே! அவ்வின்பங்களின் வெறுப்புண்டாக்கி என் மனத்தி லிருந்து மாயா அநாத்ம விருத்திகளைப் போக்கி ஞானபிரகாசமா யும் பரவெளியாயும் நின்ற அருள்சக்தியாக மாறிய உன் திருவருளை என்னுல் முழுதும் அறியமுடியவில்லையே.

கருத்துரை

திரோதன சக்தியாயிருக்கும் அம்பாளே அருள் சக்தியாக மாறுகிறாள் என்பது.

விரிவுரை.

சக்தி பஞ்சகம் என்பவர்கள் இச்சாசக்தி, ஞான சக்தி, கிரியா சக்தி திரோதான சக்தி, அனுக்ரக சக்தி, என்பவர். இவர்களை பஞ்ச ப்ரம்மாக்களின் சக்திகள் என்றும், சதாசிவமூர்த்தியின் ஐந்து முகங்களான ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமாதேவம், சத்யோ ஜாதம் என்றவற்றின் சக்திகள் என்று ஆகமங்கள் கூறும். அதில் திரோதான சக்தி ஆன்ம அறிவைச்சிறிது மறைத்து கன்மத்துக்கிடாய் பல ஜன்மங்களைக் கொடுத்து பிரபஞ்ச விஷயங் களில் உழலச்செய்து ஆன்மா பரிபக்குவம் அடைந்தவுடன் அவளே அருட்சக்தியாக மாறி மறைப்பை நீக்கி மெய்ஞ்ஞானமருளி மோக்ஷமளிப்பாள் என்பது சித்தாந்தம். சைவசித்தாந்தமும் இந்தக்கொள்கை ஒப்புக்கொண்டுள்ளது. "கன்மத்துக் கிடாய்க் கறங்கும் சகடமும்போற் சென்மித்துழலத் திரோதித்து" என்ற கந்தர் கலிவெண்பா அடிகளைப்பார்க்க. இதனை சைவம் சிவத்தின் மீதேற்றிக்கூறும் "தெரிந்துகொண்டோரோ வொன்றாகச் சென் றைந்து புலனும்பற்றிப் புரிந்திடுமுணர்விறேடும் போகமும் கொடுத்தி யோனி-திரிந்திடு மதுவுஞ்செய்து கண்டுயிர்கட்கெல்லாம் விரிந்திடுமறிவும் காட்டி வீட்டையுமளிப்பன் மேலோன்" என்ற சிவஞான சித்தியார் பாடல் காண்க. (5ம் சூத். இரண்டாம் அதிகாணம் 8ம் பாட்டு). இதையே சாக்த சித்தாந்தம் சக்தியே செய்வதாகக்கூறும் சிவன் சக்தியின்றி தொழிற்பட இயலாதா தலால் சக்தி சம்மேளனத்தாலேயே பஞ்சகிருத்தியங்களையும் சிவன் செய்வார் என்பது இரு சித்தாந்தங்களும் ஒப்புக்கொள்கின்றன. லலிதா ஸஹஸ்ரநாமாவில் "பஞ்சக்ருத்ய பாரயணு" என்றும் பஞ்சப்ரம்ம ஸ்வரூபினி" என்றும் வருவது காண்க. ல-ஸ-நாம ஸ்தோத்திரம் 63-ஃ புஸ்லோகங்ககளைப் பார்க்க திரோதன சக்தி என்பது மறைப்பு சக்தி. இது ஆணவ மலம் நசிக்கும்படி சிவனுடைய அருள் சக்தியானது அந்த ஆணவ மலத்தோடு கூடி உயிர்களின் அறிவை மறைத்து பிரபஞ்ச விஷயங்களிலே பிர விருத்திக்கச் செய்யும். இஃதின்றேல் பிரபஞ்சமே நடைபெறுது. ஆகையால் உயிர்களின் கர்மத்துக்கு ஈடாய் பொருளாயும், போக மாயும், போகத்தினுல் விளையும் அஞ்ஞான இருளாயும் நின்று இயக்கி, உயிர்கள் பக்குவமெய்துங்கால் அனுக்ரக சக்தியாய் மாறி அவற்றை சிவத்தோடு இரண்டறக் கலக்கச்செய்யும்;

ஆகையால்தான் மருளில் விளைந்த தெருளேயென்றும். வஞ்ச மனத்து இருளைப்போக்கி ஞான வொளியாகி அனுக்கிரகம்செய்து பாவெளியிலே கூட்டுவிக்கும் என்று கூறப்பட்டிருக்கிறது. அம்பிகையே என்றால் தாயார் என்பது பொருள். "ஜகஜ்ஜனனி" என்பது ஸஹஸ்ரநாமம். எப்படி தாயாரானவள் குழந்தைகளின் உடல் நிலையறிந்து ஒன்றுக்கு மருந்தும் ஒன்றுக்கு விருந்தும் அளிப்பாளோ அதுபோன்று ஆன்மாக்களாகிய தன்னுடைய குழந்தைகளின் நல்வினைத் தீவினைப் பயன்களையறிந்து போகமும், மோக்ஷமும் கொடுப்பாள் என்பதாம். "அம்புயாதனம்" என்பது ஈண்டு ஸஹஸ்ராரபத்மத்தை தன் ஆஸனமாகக்கொண்ட குண்டலினி என்று சிறப்பாகவும், உயிர்களின் இருதய தாமரையில் எப்பவும் வசிப்பவள் என்று பொதுவாகவும் கூறலாம். போகத்தைக்கொடுக்கும் லக்ஷ்மி செந்தாமரையிலும், ஞானத்தைக் கொடுக்கும் சரஸ்வதி வெண்டாமரையிலும் வீற்றிருப்பார்கள் என்பது புராண வரலாறு. சைவ சமயிகளின் மஹாமந்திரமாகிற பஞ்சாக்ஷரத்தில் நகரம் திரோத சக்தியையும் வகரம் அருள் சக்தியும் குறிப்பன என்பதும், இவ்வைந்து அக்கரங்களும் பதி, பசு, பாசம் மூன்றிலடங்கும் என்பதும், சிவ்வும், வவ்வும், நவ்வும் முறையே பதிவின் கூறாகிய சிவம், அருட்சக்தி, திரோத சக்தி யிலடங்கும், யகரம் பசுவிலும், மகரம் பாசத்திலும் அடங்குப என்பது சைவ சித்தாந்தம்.

---



## 37-வது பாட்டு

## அம்பாளின் அணிகலங்களில் சில

கைக்கே அணிவது கன்னலும் பூவும்; கமலமன்ன
மெய்க்கே அணிவது வெண்முத்துமாலை; விட அரவின்
பைக்கே அணிவது பன்மணிக்கோவையும் பட்டும் எட்டுத்
திக்கே அணியும் திருவுடையாளிடம் சேர்பவளே.

பதவுரை

எட்டுத்திக்கே அணியும்: எண் திசைகளையே ஆடையாகவுடையவனும்

திருவுடையானிடம்: ஐச்வர்யத்தையுடையவனுமான திகம்பரனோடு

சேர்பவளே: பொருந்தியிருக்கும் பராசக்தியாகிய அபிராமி அம்மையே (உன்னுடைய)

கைக்கே அணிவது: திருக்கரங்களில் அழகுற அமைந்தவை
கன்னலும் பூவும்: கரும்பு வில்லும் புஷ்ப பாணமும்
கமலமன்ன: தாமரைபோன்று வாசனை, மென்மை, நிறம் பொருந்திய

மெய்க்கே: திருமேனியிலே (ஸ்தனங்களிலே)
அணிவது: பூண்டிருப்பது
வெண்முத்துமாலை: வெண்மையான பிரகாசம் பொருந்திய முத்துமாலை

விடஅரவின் பைக்கே: நஞ்சையுடைய பாம்பின் படம்போன்ற அல்குல் பிரதேசத்தில்

அணிவது: பூண்டிருப்பது
பன்மணிக் கோவையும்: பலமணிகள் சேர்ந்த மேகலாபரணமும்
பட்டும்: பட்டாடையுமே

பொழிப்புரை

எட்டு திசைகளையே ஆடையாக உடைய திகம்பரனோடு அபின்னமாயிருக்கும் பராசக்தியாகிய அபிராமியே, நீ உன் திருக்கரங்களில் அணிவது கரும்பு வில்லும் புஷ்பபாணமும்; தாமரை மொட்டுப்போன்று துலங்கும் உனது ஸ்தனபாரங்களில் அணிவது வெண்முத்துமாலை; விடமுடைய சர்ப்பத்தின் படம்போன்ற உன் நிதம்ப பிரதேசத்தில் அணிவது நவரத்ன மேகலாபரணமும், பட்டாடையுமாகும்,

விரிவுரை

திக்+அம்பரன்=திகம்பரன். திக்குகளையே ஆடையாக உடையவன். அவனுக்கு சகலாபரண பூஷிதையான மனைவி என்பதின் கவிநயம் கருதத்தகுந்தது. திகம்பரனின் தத்துவம் என்னவெனில் ஸ்ரீ சங்கரபகவத்பாதாள் தமது "நிர்குணமானஸ பூஜா" ஸ்தோத்திரத்தில் "ஆத்மஸ்வரூப பிரம்மாபின்ன சித்சக்தியானது உள்ளும் புறம்பும் வியாபித்து ஏகவெளியாய்ப் பரிபூரணமாய் இருக்கின்றது. இதை எங்ஙனம் ஓரிடத்தில் ஆவாஹனம் பண்ணமுடியும்? ஸர்வத்துக்கும் ஆதாரமானதற்கு எது ஆஸனமாகும்?......ஆயிரத்தெட்டு பிரம்மாண்டங்களை தன் வயிற்றுக்குள் அடக்கிவைத்துள்ள விராட்ஸ்வரூபத்துக்கு எங்ஙனம் வஸ்திரம் சாத்தமுடியும்? என்றெல்லாம் கேட்கின்றார்". ஆகவே பூரணனும், ஸர்வாதரனும் சுத்தனும், நிர்மலனும், அனந்தனும், ஸ்வயம்பிரகாசனும், ஸர்வவியாபகனும் இருக்கும் நாமரூபமற்ற வஸ்துவுக்கு எவ்வாறு வஸ்திரம் இருக்கமுடியும். அவன் திகம்பரன்தான். அந்த பிரகாசாம்ஸத்தினின்று உண்டாகும் விமர்சசக்தியோ ஸர்வாபரண பூஜிதையாக விளங்குகிறாள். ஆனால் அவளின் ஆபரணங்களும் கேவலம் மனிதர்கள் அணியும் ஆபரணங்கள்தானா? அவ்வாறு இருக்கத்தான் முடியுமா. திகம்பரனோடு இரண்டற கலந்துநிற்கும் தேவிக்கு எந்த ஆபரணத்தை எவ்வாறு சாத்துவது? இப்பாட்டில் "எட்டுதிக்கே அணியும் திருவுடையானிடம் சேர்பவளே" என்றதால் ஆலயங்களில் எழுந்தருளும் அர்ச்சாமூர்த்தியைச் சொன்னதாகவும்கொள்ள இயலாது. ஆகவே ஆபரணங்கள் என்பவை எவை எனக்கேள்வி எழுகின்றது. பாவனோபனிஷத்தில் "நிர்விஷயத்வ, நிரஞ்ஜனத்வ, அசோகத்வ, அம்ருதத்வாதி அநேக தர்மரூபாணி ஆபரணானி தர்ம்யபேதபாவேனேன". அதாவது, நிர்விஷயத்வம், நிரஞ்ஜனத்வம், அசோகத்வம், அம்ருதத்வம் முதலிய தர்மங்களை தர்மியாகும் ஸ்வரூபத்துக்கு அபேதமாய் பாவித்தலே ஆபரணங்களாம் என்று கூறப்பட்டிருக்கின்றது. இதுபோன்றே ஏனைய சாக்த தந்திரங்களிலும் கூறப்பட்டிருக்கின்றது. லலிதா ஸஹஸ்ரநாமத்தில் கரும்பு வில்லையும் புஷ்பபாணத்தையும் "மனோரூபேக்ஷு கோதண்டா பஞ்சதன்மாத்ரஸாயகா" என கூறப்பட்டிருக்கின்றது. மனஸ் ஸங்கல்பம் விகல்பம் என்ற கிரியைகளையுடையதே கரும்புவில் என்பதாயும், சப்த, ஸ்பர்ச, ரூப, ரஸ, கந்தங்களாகிற பஞ்ச தன்மாத்ரைகளே புஷ்ப பாணங்களாகவும் சொல்லப்பட்டிருக்கின்றன. வில்லுக்கு மந்த்ரிணீ சக்தியும், பாணத்துக்கு வாராஹியும் அதிதேவதைகளாவர். இவை இரண்டும் க்ரியாசக்தி. அம்பாளின் நான்கு ஆயுதங்களில்

இரண்டை மட்டும் சொல்லியிருந்தாலும் மற்ற பாசம் அங்குசம் என்பனவற்றையும் ரூடியாகக் கொள்ளல் வேண்டும். இந்த இரண்டும் முறையே இச்சாசக்தி ஞான சக்திகளாகும். பாசத்துக்கு அச்வாரூடாவும், அங்கு சத்துக்கு ஸம்பத்கரீயும் அதிதேவதைகள். இவை நான்கிற்கும் மந்த்ரங்களுமுண்டு. குருவின் மூலம் அறிந்து கொள்ளவும். குசத்வயத்தை "கமல மன்ன" என்றார். தாமரை மொட்டுப்போன்று உருவம், நிறம், மென்மை, மணம் உள்ளவை என்று பொருள், முத்துமாலை வெண்மையானது. ஞானப்ர காசத்தின் உருவகம். "காமேச ப்ரேம ரத்னமணிப்ரதிபணஸ்தனீ" என்பது ஸஹஸ்ரநாமம். "ரத்ன க்ரைவேய சிந்தாகலோல முக்தா பலான்விதா" என்று ஸஹஸ்ரநாமா கூறுகின்றது. இதில் லோல முக்தா என்ற பதங்களின் வாச்சியார்த்தம் தொங்கிக் கொண்டிருக்கிறது முத்து மாலையுடன் கூடியவள் என்பது. லக்ஷியார்த்தம். லோல - சஞ்சலமான மனதையுடைய அதம அதிகாரிகளையும் முத்தா, முக்தர்களான உத்தம அதிகாரிகளையும் குறிப்பதாக பாஸ்கரராயர் வியாக்யானம் செய்திருக்கின்றார். "பலான்விதா" என்றால் அவர்களுக்குத் தகுந்த பலனை அளிப்பவள் என்பது பொருள். அம்பாளுடைய நிதம்ப பிரதேசத்தில் மேகலாபரணமும் பட்டு வஸ்திரமும் கட்டப்பட்டிருப்பதாகக் கூறப்படுகிறது. இவற்றை ஸஹஸ்ரநாமத்தில் "ரத்ன கிங்கிணிகாரம்ய ரசனாதாம பூஷிதா" என்றும் "அருணாருண கௌஸும்ப வஸ்த்ர பாஸ்வத் கடீதடீ" என்றும் கூறப்பட்டிருக்கின்றன. இவற்றிற்கும் தத்து வார்த்தங்களுண்டு. விரிக்கிற்பெருகும். பாவனோபநிசத் முதலிய கிரந்தங்களில் பார்த்து தெரிந்து கொள்க.

---

38-ம் பாட்டு

## சொர்க்காதிபத்தியம் அளிப்பவள்

பவளக்கொடியிற் பழுத்த செவ்வாயும் பனிமுறுவல்
தவளத் திருநகையும் துணையா எங்கள் சங்கரனைத்
துவளப் பொருது துடியிடை சாய்க்கும் துணைமுலையாள்
அவளைப் பணிமின் கண்டிர் அமராவதி ஆளுகைக்கே.

### பதவுரை

அமராவதி ஆளுகைக்கே!: ஸ்வர்க்கலோக ஸாம்ராஜ்யம் விரும்புவீரானல். (நீங்கள்)

பவளக்கொடியிற் பழுத்த செவ்வாயும்: பவளக்கொடியைவிடச் சிவந்த செம்மையாய் அமைந்த வாயையும்

பனிமுறுவல் தவளத்திரு நகையும்: தண்ணென்ற புன்னகை பூக்கும்போது தெரிகின்ற வெண்மையான தந்த வரிசையையும்

துணையாக: இவ்விரண்டும் தனக்கு சகாவாக

எங்கள் சங்கரன்: எங்களுக்கு சுகத்தைக் கொடுக்கும் சிவ பெருமானை

துவளப்பொருது: குழையும்படி வலிய அணைந்து

துடியிடை: உடுக்கைபோன்ற சிற்றிடையை

சாய்க்கும்! வளையச்செய்யும்

துணை முலையாள்: இரண்டு ஸ்தனபாரங்களுடைய

அவளை: ஒப்பற்ற அபிராமி அம்மையை

பணிமின் கண்டிர்: வழிபடுவீர்களாக

### பொழிப்புரை

நீவிர் ஸ்வர்க்காதி பத்யம் வேண்டுவீரானல் பவளக்கொடியை விடச்சிவந்தும் செம்மையாயும் அமைந்த திருவாயையும், அதில் குளிர்ந்த புன்னகை பூக்கும்போது வெளியே சிறிது தெரியும் வெண்மையான பற்களையும், சிவபெருமானை வலிய அணைத்து அதனல் துவண்ட இடையை வளைக்கும் இரண்டு ஸ்தனபாரங்களையுமுடைய ஒப்பற்ற அபிராமியம்மையைப் பணியுங்கள்.

### விரிவுரை

இதில் உத்தேசித்த ஒரு பலனுக்கு உபாசிக்கவேண்டிய ஓர் மூர்த்தம் கொடுக்கப்பட்டிருக்கின்றது. ஸ்வர்க்காதிபத்தியத்தை விரும்பும் அவர்கள் வழிபடவேண்டிய அம்பிகையின் உருவ தியானம் கூறு

கின்றார். சிவந்த இதழும், வெண்மையான பற்களும், இடும்பை வருத்தும் ஸ்தனபாரங்களுமுடைய உருவத்தை மனதில் அனுஸந்தானம் பண்ணி உபாஸ்தி செய்தால் ஸ்வர்காதிபத்யம் கிடைக்கும் என்று கூறுகின்றார். லலிதோபாக்யானத்தில் அவரவர்கள் பிரார்த்திக்கும்படியான பலன்களை உத்தேசித்து வெவ்வேறு ரூபங்களோடு இருப்பதாக பாவனை செய்ய வேண்டும் என்று கூறப்பட்டிருக்கின்றது. இவ்வாறே அம்பாளுக்குக் கார்யபேதங்களை ஒட்டியும், ஸ்தான பேதங்களையொட்டியும் பல்வேறு ரூபங்கள் தந்த்ர சாஸ்த்திரத்தில் கூறப்பட்டிருக்கின்றது. பவளக்கொடியிற் பழுத்த செவ்வாய் என்பது ஸஹஸ்ரநாமாவில் "நவவித்ரும பிம்பஸ்ரீ ந்யக்காரி ரதனச்சதா" என்று கூறப்பட்டிருக்கிறது. அதாவது புதிதான பவழத்திலும், கோவைப்பழத்திலும் சிறந்த காந்தியுடைய உதடுகளையுடையவள் என்று பொருள். அம்பாளின் புன்சிரிப்பை 'காமேச்வரனுடைய மனது மூழ்கி விளையாடும் பிரவாகம்' என்று ஸஹஸ்ரநாமம் கூறுவது நினைவுக்கு வருகின்றது ("மந்தஸ்மித-ப்ரபாபூர-மஜ்ஜத்காமேச மானஸா") சிவபெருமானோடு அணைந்து துவளும் இடையும் அந்த இடையை சற்று வளையச் செய்யும் ஸ்தனபாரங்களும் பல கவீந்த்ரர்களால் அழகாக வர்ணிக்கப்பட்டுமிருக்கின்றன. "கமேச்வர - ப்ரேமரத்ன - மணி ப்ரதிபண-ஸ்தனி" என்றும் ஸ்தனபார-தலன்-மத்ய-பட்ட-பந்த வலித்ரயா-என்றும் வரும் ஸஹஸ்ரநாமாவின் கூற்றும் ஒப்பு நோக்கற் பாலது. அம்பாள் ஸ்தனங்களின் மீது முத்தாரம் அணிந்திருப்பதை சங்கரருடைய ஸௌந்தர்யலஹரி 74வது சுலோகம் அழகாக வர்ணிக்கின்றது. ஸ்தனபாரத்தால் இடுப்புத் துவளுவதை அதே க்ரந்தத்தின் 79வது சுலோகம் கூறுகின்றது. சங்கரனைத் துவளப்பொருது துடியிடை. 'துவள' என்பதை சங்கரனுக்கு ஏற்றி அம்பாளின் அணைப்பில் அவன் துவளுகிறான் என்றும் கூறலாம். காஞ்சிக்ஷேத்ரத்தில் காமாக்ஷி அம்மை சிவலிங்கத்தை ஆலிங்கனம் செய்த போது சிவபெருமான் குழைந்து கொடுத்தது "கோதிலா அமுதனையவள் முலைக்குக் குழைந்த" என்ற சேக்கிழார் பெருமான் வாக்கு நினைவுக்கு வருகின்றது.

## 39வது பாட்டு

## தனது கிஞ்சித்ஞத்வம் கூறல்.

ஆளுகைக்கு உன்றன் அடித்தாமரைகள் உண்டு அந்தகன் பால்
மீளுகைக்கு என்றன் விழியின் கடையுண்டு மேலிவற்றின்
மூளுகைக்கு என்குறை நின்குறை யேயன்று; முப்புரங்கள்
மாளுகைக்கு அம்புதொடுத்த வில்லான் பங்கில் வாணுதலே

### பதவுரை

அன்று முப்புரங்கள் மாளுகைக்கு: அந்தக்காலத்தில் திரிபுரங்களும் அழிவதற்காக
அம்புதொடுத்த வில்லான்: மேருமலையாகிற வில்லை மகாவிஷ்ணுவையே அம்பாகத்தொடுத்த சிவபெருமானின்
பங்கில் வாணுதலே: பாதிபாகத்தில் எழுந்தருளியிருக்கும் ஒளி பொருந்திய நெற்றியை உடையவளே
ஆளுகைக்கு: அடியேனை ஆண்டுகொள்வதற்கு
உன் அடித்தாமரைகளுண்டு: உன்னுடைய பாதபங்கயங்கள் இரண்டு இருக்கின்றன
அந்தகன்பால் மீளுகைக்கு: யமனிடத்திலிருந்து தப்புதற்கு
உன்றன் விழியின் கடையுண்டு: உன்னுடைய கடைக்கண் நோக்கும் இரண்டு உள
(அப்படியிருந்தும்)
மேல் இவற்றின் மூளுகைக்கு: உன்னால் ஆளப்படுவதும் யமனிடத்தினின்றும் மீளப்படுவதுமான இரண்டு பிராப்திகளும் சித்தியாக
என்குறை: எனது பூர்வஜன்மவினை தடுக்கின்றது
நின் குறையேயன்று: உன்னுடைய கருணையின் குறையல்ல

### பொழிப்புரை

என்னை உன் அடிமையாக ஆண்டுகொள்வதற்கு உன் திருவடிக் கமலங்கள் இரண்டும் இருக்கின்றன. நான் யமனிடத்திலிருந்து தப்புவதற்கு உன் கடைக் கண்கள் இரண்டும் இருக்கின்றன. இருந்தும் அவை எனக்கு இன்னும் சித்தியாகாமல் போனதற்குக் காரணம் என் பூர்வஜன்ம வினையேயன்றி உன் கருணையின் குறையேயில்லை. அன்று திருபுரங்களும் அழியும்படி மேருவை வில்லாக்

ந்த் திருமாலை அம்பாக்கி, அவ்வில்லில் அவ்வம்பைப் பூட்டின சிவ பெருமான பாகத்திலுறையும் ஒளிபொருந்திய நெற்றியை உடைய அபிராமி அம்மையே.

விரிவுரை

தொடுத்த வில்லான் என்றார். அதாவது அம்பை எய்யவில்லை, தொடுத்ததுமட்டுமே. "மலைவில்லான்" என்ற சிவஞான போதத் திருவாக்கு நினைவுக்கு வருகின்றது. "முப்புரமாவது மும்மல காரியம்" என்ற திருமூலர் திருவாக்கின்படி மும்மலை அழிக்கவல்ல சிவபெருமானுடைய பங்கில் இருப்பவள் என்பதால் இவளும் ஆச்ரிதர்களின் மலங்களை நாசம் செய்பவள் என்பது புலனாகின்றது. வாணுதல்: நெற்றியின் பிரகாசம் சந்திர ஒளிபோல் இருப்பதாய் சங்கரர் ஸௌந்தர்ய லஹரி 46-வது சுலோகத்தில் வர்ணிக்கின்றார். லலிதா ஸஹஸ்ரநாமத்திலும் "அஷ்டமீசந்த்ர-விப்ராஜ - தலிக - ஸ்தல - சோபிதா" என்று கூறப்பட்டிருக்கின்றது. அதாவது அஷ்டமி திதியில் தோன்றும் அரைவட்டமான சந்திரன் போன்று பிரகாசிக்கும் நெற்றியையுடையவள். காளிதாஸனும் நெற்றியில் அம்பாளின் முன்மயிர் பட்டு சந்திரனின் களங்கம் போன்று விளங்குவதாக வர்ணித்திருக்கிறார். நெற்றியின் பிரகாசம் ஞானவொளியைக் காட்டுகின்றது. ஆளுகைக்கு அடித்தாமரையும் யமன் கையினின்று மீளுகைக்கு கடைக்கண்ணும் என்பதை சங்கரர் "ஜன்ம ஜலதௌ நிமக்னானாம் முராரிபு வராஹஸ்யதம்ஷ்ட்ராபவதி" என்று கூறியிருக்கின்றார். உயிர்கள் சம்சாரக் கடலில் மூழ்கித்தவிப்பவர்களுக்கு அம்பாளின் இருபாதங்களும் வராஹ மூர்த்தியின் இரண்டு கோரைப் பற்கள்போல இருக்கின்றன என்றார். அதாவது தண்ணீரில் மூழ்கிக்கிடந்த "பாசிதூர்ந்த பார்மகளை" வராஹ அவதாரம் எடுத்துத் தனது கோரைப் பற்களில் தாங்கி வெளிக்கொணர்ந்ததுபோல அம்பாளின் பதயுகளம் ஸம்ஸாரக் கடலில் மூழ்கிய ஜீவர்களைக் கரையேற்றுவன என்பது பொருள். சகல நிலையில் உயிர்களை ரக்ஷிப்பவள் அம்பாள் என்பதை மாணிக்கவாசகரும் "எம்மை ஆளுடையாள்" என்று திருவெம்பாவையில் விளிக்கின்றார். அம்பாளின் அருட்பிரவாஹம் "பொங்கித்ததும்பிப் பூரணமாய் ஏகவுருவாய்க்" கிடந்தாலும் உயிர்தமது வினையின் பயனால் அதனை அநுபவிக்க இயலாமல் தவிக்கின்றனர் என்பதை தன்மேலேற்றிக் கூறிக்கொள்கிறார்.

40-வது பாட்டு

## "புண்ய லப்யா"

வாணுதற் கண்ணியை விண்ணவர் யாவரும் வந்திறைஞ்சிப்
பேணுதற்கெண்ணிய எம்பெருமாட்டியைப் பேதைநெஞ்சிற்
காணுதற்கு அண்ணியள் அல்லாத கன்னியைக்காணுமன்பு
பூணுதற்கு எண்ணிய எண்ணமன்றேமுன்செய் புண்ணியமே

பதவுரை

வாணுதற்கண்ணியை: பிரகாசம் பொருந்திய நெற்றியிலே நேத்திரத்தையுடையவளும்
விண்ணவர் யாவரும்: தேவர்கள் அனைவரும்
வந்து வணங்கி இறைஞ்சிப் பேணுதற்கு: தேவியை அணுகி வணங்கிப் பூசிக்கும்படி
எண்ணிய: சங்கல்பித்த திருவுளம்கொண்ட
எம்பெருமாட்டியை: எமது தலைவியானவளும்,
பேதை நெஞ்சிற் காணுதற்கு: அஞ்ஞானமாகிற பேதமை படர்ந்த உள்ளத்தில் உருவத் தியானம் செய்ய
அண்ணியள் அல்லாத: சமீபத்தில் இல்லாத
கன்னியை: என்றும் கன்னியாகவே இருக்கும் அபிராமிதேவியை
காணுமன்பு பூணுதற்கு: தரிசிக்க ஆசை உண்டாகவேண்டுமென்று
எண்ணிய எண்ணமன்றே: மனதில் ஆர்வம் உண்டாவதும்
முன்புசெய்த புண்ணியமே: பூர்வ ஜன்மத்தில் செய்த புண்ணியமே காரணமாகும்.

பொழிப்புரை

நெற்றிக்கண்ணையுடையவளும், தேவர்கள் யாவரும் தன்னை வந்து வழிபட சங்கல்பித்திருப்பவளும், அவித்யையால் மூடப்பட்ட ஜீவான்மாக்கள் நெஞ்சில் நினைப்பதற்குக் கூட அதிக தூரத்திலிருப்பவளும், என்றும் கன்னிகையாகவே இருப்பவளுமான அபிராமி அம்மையை அகக்கண்ணால் கண்டு தரிசிக்க வேண்டும் என்ற விருப்பம்கூட பூர்வ புண்ணியத்தாலேயே கிட்டும்.

விரிவுரை

இறைவனுக்குப் போலவே அம்பாளுக்கும் முக்கண் உண்டு என்பது பிரசித்தம். தேவர்கள் வணங்குவது அவரவர்கள் பதவியை இழக்காமல் இருக்கும்பொருட்டு. தேவர்களாய்த் திகழ்வதற்கும் அவர்கள் செய்த புண்ணியமேயாகும். ஆன்ம விகாசத்தில் உயிர்கள் தேவநிலையை அடையும் என்பதை மாணிக்கவாசகர்

சிவபுராணத்தில் "கல்லாய் மனிதராய் பேயாய்க்கணங்களாய், வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்" என்ற அடிகளில் குறிப்பிடுகின்றார். காளிதாஸன் "சியாமளா தண்டக"த்தில் "ப்ரஹ்வ தேவேச" என்று ஆரம்பிக்கும் வரியில் வணங்கும் இந்திரன், விஷ்ணு, சிவன், வருணன், பிரம்மா, யமன், நிருதி, குபேரன், வாயு, அக்னி இவர்களால் வணங்கப்படும் திருவடித் தாமரைகளை உடையவள்" என்று கூறியிருக்கிறார். "தேவர்ஷி ஸங்காத ஸ்தூய மானாத்ம வைபவா (64) என்றும் ப்ரஹ்மோபேந்த்ர மஹேந்த்ராதி தேவஸம்ஸ்துத வைபவா" (83) என்றும் ஸஹஸ்ரநாமத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றது. "பேதை நெஞ்சில் காணுதற்கு அண்ணியள்" என்றதால் மாயாவசப்பட்டு அஞ்ஞான இருளில் உழலும் மக்களால் உள்ளத்தில் நினைக்கக்கூட முடியாதவள் என்பது பொருள். அத்தகைய பரப்ரம்ஹ சொரூபிணியை "காணுமன்பு பூணுதற்கு" என்றதால் அர்ச்சாவதாரமான ஆலய திருவுருவைச் சொன்னதாகக் கொள்வதைவிட உபாஸனையால் உள்ளத்தில் அனுஸந்தானம்பண்ணி அப்ராக்ருதமான அனுபவத்தில் அம்பாளை சாக்ஷாத்கரித்தல் என்பது பொருந்தும். இப்பேற்றை யடையவேண்டும் என்ற அன்பு அல்லது விருப்பம் எழுவதற்கே பூர்வபுண்ணியம் வேண்டும் என்கின்றார். அவளை "புண்ணியலப்யா" (543) என்ற நாமாவால் அழைக்கின்றது. சங்கரரும் தனது ஸௌந்தர்யலஹரி முதல் சுலோகத்திலேயே "விஷ்ணு, ருத்ரன், பிரம்மா முதலியவர்களாலும்கூட ஆராதிக்கத்தகுந்த உன்னை பூர்வஜன்மங்களில் புண்ணியம் செய்யாதவன் நமஸ்காரம் செய்வதற்காவது, துதிப்பதற்காகவாவது எப்படி ஸமர்த்தனுவான்" என்று கேட்கின்றார். "த்வாம் ஆராத்யாம் ஹரிஹர விரிஞ்சாதி பிரபிப்ரணந்தும் ஸ்தோதும்வாகதம் அக்ருதபுண்ய: ப்ரபவதி". "நவபெரும்புவன மெவ்வகைத் தொழில் நடத்தியாவரும் வழுத்துதாள் அவனியின்கணொரு தவமிலார் பணியலாவதோ பரவலாவதோ". ஸ்ரீ வித்யா உபாஸனையும், தேவீமந்த்ரமும் பூர்வ புண்ணியத்தாலேயே கிடைக்கும் என்பது முன்பேயும் கூறப்பட்டது.

41-வது பாட்டு

## நாம் புண்ணியம் செய்தவர்கள்

புண்ணியம் செய்தனமே மனமே புதுப்பூங்குவளைக்
கண்ணியும் செய்ய கணவரும் கூடி நம் காரணத்தால்
நண்ணியிங்கேவந்து தம்அடியார்கள் நடுவிருக்கப்
பண்ணி நம்சென்னியின்மேல் பத்மபாதம் பதித்திடவே

பதவுரை

மனமே: என் மனமே
புதுப் பூங்குவளைக் கண்ணியும்: அன்றலர்ந்த நீலோத் பல மலர் கண்களையுடையவளும்
செய்ய கணவர்: சிவந்த நிறமுடைய தமது கணவரான சிவபெருமானும்
கூடி: ரேசித்து, அர்த்தநாரியாக
நம்காரணத்தால்: நம்மைக் காக்கவேண்டும் என்ற பெரும் கருணை என்ற காரணத்தால்
நண்ணி இங்கே வந்து: நாம் இருக்கும் இடம்தேடிவந்து
தம் அடியார்கள் நடுவிருக்கப்பண்ணி: தமது மெய்யடியார்களின் நடுவிலே இருக்கும்படி செய்து
நம் சென்னியின் மேல்: நமது சிரஸில்
பத்மபாதம்: பங்கயத்திருவடிகளை
பதித்திடவே: பொருத்தும்படியான
புண்ணியம் செய்தனம்: நாம் புண்ணியம் செய்திருக்கிறோம் என்பது உறுதி

பொழிப்புரை

மனமே! அன்றலர்ந்த நீலோத்பல புஷ்பம் போன்ற கண்ணையுடையவள் தன்னுடைய செந்நிறமுடைய கணவரான சிவபெருமானுடன் இரண்டறரேசித்து அர்த்தநாரியாக நாம் இருக்கும் இடம் தேடிவந்து தமது அடியார்களின் நடுவில் இருக்கச்செய்து நமது தலையிலும் அவளுடைய பாதபங்கயத்தைச் சூடினது நாம் செய்த புண்ணியமே.

விரிவுரை

செய்தனமே என்றும் 'நம்' என்றும் பன்மையில் கூறியது ஆன்மா மனதை விளித்து நாம் இருவரும் என்றது. பூங்குவளைக் கண்ணி, செய்ய கணவர் என்பதில் வரும் நிறவேற்றுமை மிகுந்த காவ்ய ரஸனை பொருந்தியது. "பைங்குவளைக் கார் மலரால் செங்கமலப்பைம்போதால்" என்பதை நினைவூட்டுகின்றது. சிவன் செம்மேனியன் என்பது "தாமரைக்காடனையமேனி" என்றும் "செம்மேனி யெம்மான்" என்றும் "பவளமாவரை" என்றும் சைவத்திரு முறைகளில் வருவது காண்க. "நம் சென்னியில் மேல் பத்மபாதம் பதித்திடவே" என்ற சொற்றொடருக்கு திருவடி தீக்ஷையென்று பொருள் கொள்வது பொருந்தாது. சைவ சித்தாந்தக் கருத்தையே ஆதாரமாக வைத்துக்கொண்டு ஓர் தீவிர கௌலமார்க்க சாக்தர் எழுதிய நூலுக்குப் பொருள் கூறுவது பொருந்தாது. அர்த்த நாரியாக இருவரும் அபின்னமாய் ரேசித்து இருப்பது சந்த்ரகலா மண்டலமாகின்ற ஸஹஸ்ராரபத்மத்தில். மற்ற ஆதார ஸ்தானங்களில் இரண்டாக ஆனுல் அகலாத ஜோடியாக இருக்கும் சிவமும் சக்தியும் ஸஹஸ்ராரத்தில் இருவரும் அபின்னமாய் இருப்பார்கள். இதையே சாக்த சித்தாந்தம் "சாதாக்யம்" என்று கூறும். சைவத்தில் பேசப்படும் சாதாக்யம் வேறு, இதுவேறு. ஸஹஸ்ரார கமலத்தில் குண்டலினியைச் சேர்த்து ஸாதாக்ய நிலையை அனுபவித்தவர் அபிராமிபட்டர். இந்த முறையில் சென்னியில்... பதித்ததற்குப் பொருள்கொள்ளவேண்டும். திருவடிதீக்ஷை என்பது சாதனையின் ஆரம்பம். இது சாதனையின் முடிபு. அடியார் நடுவிருத்தலை மணிவாசகப் பெருமான் "உடையாள் உன்றன் நடுவிருக்கும்" என்று தொடங்கும் திருப்பாட்டிலே "அடியார் நடுவுள் இருக்கு மருளைப்புரியாய்" என்று பிரார்த்திக்கின்றுர். பட்டரோ "அடியார்கள் நடுவிருக்கப்பண்ணி" என்றே கூறுகின்றுர். "என்னையுமொருவனுக்கியிருங்கழற் சென்னியில் வைத்த சேவக" என்ற இடத்தில் தனக்கு சிவபெருமான் குருந்த மரத்தடி குருநாதனுகத் தோன்றி திருவடி தீக்ஷை செய்ததைக் குறிக்கும். "நம் காரணத்தால் நண்ணிவிங்கே வந்து" என்ற நயம் உன்னி மகிழத்தக்கது. ஆன்மாவின் பரிபக்குவம் அறிந்து அவளே வலியவந்து ஆட்கொள்வாள் என்பது கருத்து. ஆன்மா இறைவனைத் தேடுவது சாமானியக்கருத்து. இறைவன் ஆன்மாவைத் தேடுகிறுன் என்பது மிகச்சீரிய கருத்து.

## 42- வது பாட்டு.

சக்தியே சிவத்தை இயக்குகின்றது.

இடங்கொண்டு விம்மி இணை கொண்டு இறுகி இளகி முத்து
வடங்கொண்ட கொங்கைமலை கொண்டு இறைவர் வலியநெஞ்சை
நடங்கொண்ட கொள்கை நலங்கொண்ட நாயகி! நல்லரவின்
படங்கொண்ட அல்குற் பனிமொழி வேதப் பரிபுரையே.

### பதவுரை

இடங்கொண்டு: அகன்று
விம்மி: பருத்து
இணை கொண்டு: ஒன்றோடொன்று நெருங்கி
இறுகி: கடினமானதாயும்
இளகி: மென்மையானதாயும்
முத்து வடம் கொண்ட: முத்தாரம் அணிந்த
கொங்கைமலை: மலைபோன்ற கொங்கைகளை
கொண்டு: சாதனமாகக் கொண்டு
இறைவர்: சிவபெருமானுடைய
வலிய நெஞ்சை: வன்மை பொருந்திய உள்ளத்தை
நடங்கொண்ட கொள்கை நலம்: தன் இச்சைப்படி ஆட்டி வைக்கும் சீரிய சங்கல்பத்தை
கொண்ட நாயகி: உடையதலை
நல்லரவின்: நல்ல பாம்பின்
படங் கொண்ட: படத்தைப் போன்ற
அல்குற்: நிதம்பபிரதேசத்தையும்
பனிமொழி: குளிந்த (இனிய) வாக்சாதுர்யத்தையும்
வேதப்பரிபுரையே: வேதத்தை தனது சிலம்புகளாகக் கொண்ட பராசக்தியேயாகும்

### பொழிப்புரை

அகன்று, பருத்து, ஒன்றோடொன்று நெருங்கி கடினமானதும் மென்மையானதும் முத்தாரம் அணிந்த மலைபோன்ற கொங்கைகளை தனது சாதனமாகக் கொண்டு வலிய நெஞ்சமுடைய சிவபெருமானை தன் இஷ்டப்படி ஆட்டிவைக்கும் தலைவி யாரெனில் நல்லபாம்பின் படம் போன்ற நிதம்பத்தையும் இனியவாக்கு வன்மையும் நான்கு வேதங்களையே தன் காலணியாகவும் அணிந்த பராசக்தியாகின்ற அபிராமியம்மையேயாகும்

விரிவுரை

இதுவே சாக்தத்தின் அடிப்படைக் கொள்கை சிவம் தன்னால் இயங்காது சக்தியே அதனை இயக்குகிறாள் சக்தியின்றிச்சிவமில்லை சங்கரர் தமது முதல் சுலோகத்திலேயே இந்தத் தத்துவத்தைக் கூறுகின்றார்

"சிவ: சக்தியாயுக்தோயதி பவதி சக்த: ப்ரபவிதும்
நசேதேவம் தேவோ நகலு குசல: ஸ்பந்திதும்பி"

அதாவது: "சிவமெனும் பொருளும் ஆதிசக்தியோடு
சேரின் எத்தொழிலும் வல்லதாம்
இவள் பிரிந்திடில்இயங்குதற்கும்
அரிதெனு மறையிரைக்குமால்"

சக்தியே சிவத்தை ஸ்ரிஷ்டியோந் முகமாக்குகிறாள். இது விரிவாய் முந்தின பாடல்களிலும் கூறப்பட்டது. வரிவஸ்யா ரஹஸ்யத்தில் முதல் அம்சம் 4 வதுசுலோகத்தில்.

"நைஸர்கிகீ ஸ்புரத்தா விமர்சருப அஸ்யவர்த்ததே சக்தி: தத்யோகாதேவ சிவோ ஜகத்உத்பாதயதி பாதிஸ்ம் ஹரதி: என்று கூறப்பட்டிருக்கின்றது, அதாவது அந்த ப்ரம்மத்துக்கு ஸ்வபாவ ஸ்புரணருப விமர்சம் என்றும் ஒரு சக்தியுள்ளது. இந்த சக்தியோடு சேர்ந்தே பிரம்மம் ஜகத்தை சிருஷ்டிக்கின்றது, காப்பாற்றுகின்றது, சம்ஹரிக்கின்றது. ஸூதஸம்ஹிதை 4 வது காண்டம் 13ம் அத்யாயத்தில் 4 வது சுலோகம்: ஸாதஸ்யாபி பவேத் சக்திஸ்தயா ஹீனோ நிரர்த்தக: அதாவது அந்தசிவம் சக்தியில்லாவிடில் பிரயோஜனமற்றவராகின்றார். ஞானவாஸிஷ்டத்திலும், ஸ்பந்தேன லக்ஷியதேவாயு: வன்ஹி: உஷ்ணேன லக்ஷியதே, சின்மாத்ரம், அமலம். சாந்தம் சிவஇத்யுதிதம் துயத்தத் ஸ்பந்தமய, சக்தியேவ லக்ஷியதேந அன்யதாகில: அதாவது காற்று ஸ்பர்சத்தால் உணரப்படுகின்றது. அக்னி உஷ்ணத்தால் அறியப்படுகின்றது. அதுபோல சின்மாத்திரமாயும் அமலமாயும், சாந்தமாயும் இருக்கும் சிவஸ்வருபமானது ஸ்பந்தமய விமர்ச வடிவசித் சக்தியன் மூலமே அறியப்படுகின்றது. வேறொன்றினாலுமல்ல: என்று ஸ்தாணுவாய் அசைவற்றதாய் இருக்கும் சிவத்தில் சக்தி ஸ்புரிக்கும் போது ஓர் ஸ்பந்தம் (அசைவு துடிப்பு) Vibration ஏற்படுகின்றது. அவ்வாறே சிவம் தொழிற்படுகின்றது இந்தத் தத்துவத்தைத்தான் இப்பாடல் காவியரஸனையோடு விவரிக்கின்றது.

43 வது பாட்டு

ஈச்வரார்த்தாங்கசரீராயை நம: (திரிசதி 52)

பரிபுரச் சீரடிபாசங்குசை பஞ்சபாணி இன்சொல்
திரிபுர சுந்தரி சிந்தூரமேனியள் தீமை நெஞ்சில்
புரிபுர வஞ்சரை அஞ்சக் குனிப் பொருப்புச் சிலைக்கை
எரிபுரை மேனி இறைவர் செம்பாகத்திருந்தவளே,

பதவுரை

பரிபுரச் சீரடி: சிலம்பணிந்த சிற்றடிகளையும்
பாசரங்குசை: பாசம் அங்குசம் என்ற ஆயுதங்களை உடைய வளும்
பஞ்சபாணி: ஐந்து புஷ்பபாணங்களையுடையவளும்
இன்சொல்: இனிய சொற்களையுடைய
திருபுர சுந்தரி: திருபுர சுந்தரியாகிய தேவி
சிந்துர மேனியள்: சிவந்த திருமேனியை உடையவள்
நெஞ்சில் தீமைபுர புரவஞ்சகரை: தீத்தொழிலை உள்ளத்திற் கொண்டு தீமைசெய்த திருபுர அசுரர்களை
அஞ்ச: அஞ்சும்படி செய்ய
குனிப் பொருப்புச்சிலைக்கை: வளைந்த மேருமலையான வில்லைக் கையிலுடைய
எரிபுரை: நெருப்புப் போன்ற தழல் போன்ற
மேனி இறைவர்: திருமேனியை உடைய சிவபெருமானது
செம்பாகத்து: சரியான ஒருபாதியில்
இருந்தவளே: எழுந்தருளியிருந்தவளே

பொழிப்புரை

சிலம்பணிந்த சிற்றடியும் பாசம் அங்குசம் பஞ்சபுஷ்பாணம் என்ற ஆயுதங்களைக் கையில் கொண்டவளாய், இனியசொற்களை யுடைய திருபுரசுந்தரி என்பவள் யாரெனில் தீமை செய்ய எண்ணமிட்டுத் தீமையே செய்ததிருபுரர்களை அச்சுறுத்த மேரு மலையையே வில்லாகவளைத்துக்கையில் உடையவராகிய செந்தழல் மேனிச் சிவபெருமானின் பாதிபாகத்தை ஆக்ரமித்திருந்த பரா சக்தியேயாகும்.

## விரிவுரை

முந்தினபாட்டில் சிவத்தினின்று சக்திஸ்புரித்தது சொன்ன நூலாசிரியர், இப்பாட்டில் அவள் சிவத்தினின்றும் பிரிந்து தனித் தத்துவமாய் திருபுரசுந்தரியாகக் காட்சியளிப்பதைக்கூறுகின்றார். சிவத்தினின்று முதன் முதலில் சக்தி வெளிப்படும்போது சிவத்தில் உண்டாகும் சூக்ஷ்மஸ்பந்தம் அல்லது துடிப்பே சக்தியாகக் கூறினோமல்லவா. அந்த ஸ்பந்தம் சிவத்தோடு ஒன்றி இருந்த காலத்தில் சக்தி அர்தநாரியாக இருந்தாள். பின்பு அவனிடத்திலிருந்து பிரிந்து தனி சக்தி தத்துவமாய் வெளிப்படுகின்றாள். அவளைத் தான் திரிபுரசுந்தரி என்று சாக்த சித்தாந்தம் கூறுகின்றது. ஆக திரிபுசுந்தரி என்பவள் வேறு ஒருவரல்ல. முன்பு சிவத்தோடு ஒன்றியிருந்த பராசக்தியே இப்பொழுது சித் சக்தியாக ஆயுதங்கள் தாங்கி இருக்கிறாள் என்பதை இப்பாட்டு விவரிக்கின்றது. பரபிந்துரூபமான ο சிவம். இதில் சக்திஸ்புரிக்கும் போதுⓞ இப்படி ஆகின்றது. பின்பு οο இப்படியாகி விடுகின்றது. இந்த விகாஸத்தைத்தான் இப்பாட்டு குறிக்கின்றது. ο சிவம் ⓞசிவசக்தி οοசிவமும் சக்தியும்.

பஞ்சபாணி: “பஞ்சதன்மாத்ர ஸாயகா என்று ஸஹஸ்ர நாமம் கூறுகிறது. அத்தன்மாத்ரையின் உருவகங்களான. 1 தாமரை 2 சிவப்புஆம்பல் (கைரவம்) 3 செங்கழநீர் (கல்ஹாரம்) 4 நீலோத்பலம் 5 மாம்பூ (ஸஹகாரம்) என்பன. இவற்றின் செயல்கள் உன்மத்தம், மாதனம், சம்போகம், சந்தாபம், வசீகரணம் என்று சொல்லப்பட்டிருக்கின்றன. ஈண்டுவிரிப்பது அவசியமில்லை. சிந்துரமேனியள் என்று திரிபுரசுந்தரியையும், எரிபுரை மேனி இறைவர் என்று சிவபெருமானையும் கூறுவதில் இருவரும் ஒரேநிறமுடையவர்கள் என்ற சாம்யம் எற்படுகின்றது. 41 வது பாட்டில் பூங்குவளைக் கண்ணியும் செய்யகணவரும் என்பதைப்பார்க்க. பாசாங்குசம் பாணம்சொன்னதோடு வில்லையும் சேர்த்துக் கொள்க, வில்லின்றி பாணம் பயன்படாததலால். எரிபுரை மேனி 41 வது பாட்டின் விரிவுரைகாண்க.

## 44 வது பாட்டு

## காமேச்வரக்ரஷேச்வர்யை நம: (திரிசதி 255)

தவளே இவள் எங்கள் சங்கரனார் மனைமங்கலமாம்
அவளே அவர் தமக்கு அன்னையும் ஆயினள் ஆகையினால்
இவளே கடவுளர்யாவர்க்கும் மேலை இறைவியுமாம்
துவளேன் இனியொரு தெய்வ முண்டாகத் தொண்டு
செய்தே

பதவுரை

தவளே: தவத்தின் உருவமாய் இருப்பவளே
இவள் எங்கள் சங்கரனார் மனைக்கு மங்கலமாம்: இவளே எம்முடைய சங்கரனின் இல்லத்துக்கு மங்களத்தைச் செய்பவளாம்.
அவளே: அவ்வாறு சிவபெருமானின் மங்கள நாயகியாக இருப்பவளே.
அவர்தமக்கு அன்னையும் ஆயினள்: சிவபெருமானுக்கு தாயும் ஆயினள்.
ஆகையினால்: அக்காரணத்தாலே.
இவளே கடவுளர்யாவர்க்கும் மேலை: இவளே தெய்வங்கள் எல்லாவற்றிற்கும் மேலாக இருப்பவள்.
இறைவியுமாம்: மேன்மைமட்டுமின்றி அவர்களுக்குத் தலைவியுமாம்.
இனியொரு தெய்வம் உண்டுஆக: இனிமேல் இவளுக்குப் புறம்பாய் வேறொரு தெய்வம் இருப்பதாக எண்ணி.
தொண்டு செய்து: அந்த தெய்வங்களுக்குப் பணி செய்து (வழிபட்டு)
துவளேன்: வருந்த மாட்டேன்.

பொழிப்புரை

தவமாகவும் தவத்தின் பயனாகவும் இருக்கும் எங்கள் திரிபுர சுந்தரி, எம்முடைய சங்கரனாருடைய வீட்டுக்கு மங்களத்தைக் கொடுப்பவளான மனைவி, அவளே எங்கள் சங்கரனாருக்குத் தாயுமாவாள் ஆகவே அவளே கடவுளர் என்று சொல்லக்கூடிய அனைவருக்கும் மேன் பட்டவள் அவர்களுக்கு ஈஸ்வரியாகவும் இருப்பவள் அவளை வழிபட்ட பின் வேறொரு தெய்வம் உண்டென்று நினைக்கவும் மாட்டேன் அத்தகைய தெய்வங்களை வழிபட்டு வீணாக வருந்தவும் மாட்டேன்.

விரிவுரை

தவளே என்பதை தவம் செய்தவளே என்று பொருள் கொள்கின்றார்கள். இந்த நூலில் அதுவும் இந்தப்பாட்டில் அவளே பரப்பிரம்மஸ்வரூபிணியாக வைத்தே சொல்லப் பட்டிருக்கிறது, அவள்தவம் செய்ய ஞாயமில்லை பராசக்தியின் விமர்சாம்ஸ ரூபங்களான பார்வதி, காமாக்ஷி இவர்கள் தவம் செய்ததாகப் புராணாந்தரங்களில் கூறப்பட்டிருக்கின்றது. தவளே என்பது தவத்தின் உருவே தவத்தின் பயனே என்று பொருள், லலிதா திரிசதியில் காமேச்வர தபஸ்ஸித்தி: என்று 250 வது நாமா கூறுகின்றது பிரச்னோபநிஷத்தில் பிரஜாபதியானவர் பிரஜைகளை உண்டுபண்ண வேண்டுமென்று தவம்புரிந்தார் என்றமேற் கோளை சங்கரர் தமது திரிசதி பாஷ்யத்தில் எடுத்தாள்கிறார். மனை மங்கலம் என்பதை ஈச்வரக்ரஹேச்வரி என்றும் கூறுகிறது மஹாகாமேச மஹிஷி என்பது ஸஹஸ்ரநாமம். ஒரு வீட்டுக்கு மங்களத்தைச் செய்பவள் வீட்டு யஜமானனின் தர்மபத்தினி யாதலால் இவ்வாறு கூறப்பட்டது. ஓர் வினை சங்கரனுக்கும் ஓர்வீடு உண்டோ, சகுண மூர்த்திகளுககுக் கைலாயம் காசிர் காஞ்சி போல்ற க்ஷேத்ரங்கள் உண்டு ஆனால் பரசிவத்துக்கு வீடு என்பது அவருடைய மனதே அதில் அம்பாள் வீற்றிருந்து அவரைத் தொழில் படுத்துகிறாள் சங்கரன் என்ற சொல்லுக்கு ஹிதத்தைச் செய்கிறவன் மகிழ்ச்சியைக் கொடுப்பவன் என்ற பொருள்கள் உண்டு. அக்காரியங்களை சக்தியின் உதவியினாலேயே செய்வதால் தேவியை சங்கரனார் மனை மங்கலம் என்று அழகாகக்கூறுகிறார் சங்கரனுக்கு சக்தி தாயார் என்றதை திருமூலந்திருமந்திரத்தில் தாயும் மகளும் தாரமுமாமே என்று இருப்பது முன்பே கூறப்பட்டது மேலும் மணிவாசகப் பெருமான் பரமசிவன் இமவான்மகட்குத் தன்னுடைக் கேள்வன் மகன் தகப்பன் தமையன் என்றும் அருளியிருக்கிறார் அம்பிகையே சகலதேவர்களுக்கும் தலைவியாக இருப்பதால் அவளை வழிபட்டால் வேறு தெய்வங்களை வழிபடத் தேவையில்லை என்பது குறிப்பு ஸகல தேவர்களும் அம்பாளையே வணங்குகின்றார்கள் என்பது முன்பும் பிரஸ்தாபிக்கப் பட்டது.

45 வது பாட்டு

## ஆபால கோப விதிதாயை நம:

தொண்டு செய்யாது நின்பாதம் தொழாது துணிந்து இச்சையே
பண்டு செய்தாருளரோ இலரோ, அப்பரிசு அடியேன்
கண்டு செய்தால் அது கைதவமோ அன்றி செய்தவமோ
மிண்டு செய்தாலும் பொறுக்கை நன்றே பின் வெறுக்கை அன்றே

பதவுரை

தொண்டு செய்யாது: உனக்கு சேவை செய்யாமலும்
நின்பாதம் தொழாது: உன்திருவடிகளை வணங்காமலும்
துணிந்து: தைரியமாய்
இச்சையே: மனம் போனபடி :
பண்டு செய்தார் உளரோ இலரோ: முன்பு உன்னை வழிபட்டவர்கள் இருந்த தில்லையா
அப்பரிசு கண்டு செய்தால்: அதைப்பார்த்து அடியேனும் உன்னை வழிபட்டால்
அதுகைதவமோ: அது பொய்யாகுமோ
அல்லது செய்தவமோ: அல்லது நான் செய்த தவப்பேறோ
மிண்டு செய்தாலும்: அகங்காரத்தால் என்இச்சைப்படி மாறுபாடான செயல்கள் செய்தாலும்
பொறுக்கை நன்றே: பொறுத்துக் கொள்வதுதான் நீதியாகும்
பின் வெறுக்கை அன்றே: அவ்வாறு பொறுக்காமல் வெறுப்பது நன்றன்று

பொழிப்புரை

பண்டைக்காலத்தில் உன்அடியார்கள் ஆகம சாஸ்திர நீதியாக உனக்குத் தொண்டு செய்யாமலும் உன்தாள் இணைகளை வழிபடாமலும் தாமாக தம்இச்சைப்படி ஓர் வழி கோலிக்கொண்டு உன்னை வழிபட்டவர்கள் உண்டோ இல்லையோ அவ்வாறே நானும் யதோக்தமாய் வழிபாடியற்றுமல் என்மனந்தோன்றிய படி அல்லது உன்னை வழிபாடு செய்திருப்பின் அது பொய்யோ நான் செய்ததவப்பயனோ நான் அகங்காரத்தோடு மாறுபாடான செயல்களைச் செய்தாலும் அவற்றைப் பொறுப்பது உன்கடன் வெறுப்பது நன்றன்று,

விரிவுரை

இப்பாட்டில் கண்ணப்பர் கதையில் வருவதுபோல ஆகம வழிபாட்டுக்கும் அன்பு வழிபாட்டுக்கும் உள்ள தார தம்மியம் கூறப்படுகின்றது. தேவியை ஆராதிக்க சில வழிபாட்டு முறைகள் தந்திர சாஸ்திரங்களில் முக்கியமாய் தந்த்ர ராஜதந்தரம் என்ற சிரிய கிரந்தத்திலும் பரசுராம கல்ப சூத்திரத்திலும் கூறப் பட்டிருக்கின்றது. இதற்கு ஸ்பர்யாபத்ததி என்று பெயர். ஆயினும் அன்புமேலீட்டாலும் அறியாமையாலும் முறைதவறிச் செய்தாலும் அது அம்பாளுக்கு உகந்ததேயாகும். அதனாலேயே ஸஹஸ்ர நாமத்திஆபாலகோப விதிதாயைநமஎன்றும் கூறப்பட்டிருக்கின்றது பாலர்கள் இடையர்கள் உள்பட எல்லோராலும் அறியப்பட்டவள் என்பது பொருள். கண்ணப்பர்வரலாறே இதற்குச் சான்று சிவ கோச்சாரியார் செய்தயதோக்தமான வழிபாட்டைவிடகண்ணப்பர் செய்த அன்புவழிபாடே இறைவனுக்கு ஏற்றுக் கொள்ளக் கூடியதாக இருந்தது. அபிராமிபட்டர் கௌலமார்க்கத்தை அவலம்பித்தவர் அதில் விதித்திருக்கும் பஞ்சமகார பூஜையும் செய்தவர் அதனாலேயேபிற அந்தணர்களுடை துவேஷத்துஆளானார் வேதோக்தமாகச் செய்யாமல் தாந்த்ரீக வழியில் வழிபட்டவர் அதைத்தான் இப்பாட்டில் குறிப்பிடுகின்றார் என்று கூறலாம். அம்மட்டேயன்றி அம்பாள் அன்புடன் செய்யப்படும் பூஜை எதையும் ஏற்றுக்கொள்பவள். கீதையில் பக்தியோடு இலையேனும் பூவேனும் கனியேனும் நீரேனும் எனக்கு அளித்தால் அந்த அன்புக்குக்கட்டுப்பட்டு அதையும் நான் உட்கொள்வேன் (9. 26) என்று கிருஷ்ணன் கூறியதாகக் கண்டிருக்கின்றது அம்பாள் விரும்புவது பத்ததியல்ல அன்பே நான் அன்போடு முறையின்றி செய்தது பொய்யோ அல்லது என்தவப்பேறே என்கின்றார் ஆசிரியரின் மனதில் கண்ணப்பரின் விருத்தாந்தம் நிச்சயமாய் தோன்றியிருக்க வேண்டும் கைதவம் பொய் சூது துன்பம் வஞ்சகம் முறையின்றி வழிபட்டது செய்தவமோ என்ற சொற்றொடரால் முன்பு செய்தவத்தின் ஈட்டம் முடிவிலா இன்பமான அன்பினை எடுத்துக்காட்ட அளவிலா ஆர்வம் பொங்கிமன்பெரும் காதல் கூரவள்ளலார் மலையை நோக்கி என்பு நெக்குருகி உள்ளத் தொழுபெரு வேட்கையோடு என்ற சேக்கிழார் திருவாக்கு நினைவு வருகின்றது இப்பாட்டின் இறுதியடி குற்றஞ் செய்யினும் குண மெனக்கருதும் கொள்கைகண்டு நின்குரைகழல் அடைந்தேன் என்ற திருநாவலூர் திருவாக்கையும் நினைவூட்டுகின்றது.

## 46-ம் பாட்டு.

### ஸ்ரீகண்டார்த்த சரீரிண்யை நம:

வெறுக்கும் தகைமைகள் செய்யினும் தம் அடியாரை மிக்கோர்
பொறுக்கும் தகைமை புதியதன்றே; புதுநஞ்சுண்டு
கறுக்கும் திருமிடற்றான் இடப்பாகம் கலந்த பொன்னே
மறுக்கும் தகைமைகள் செய்யினும் யானுன்னை வாழ்த்துவனே.

### பதவுரை.

புதுநஞ்சையுண்டு: பாற்கடலில் எதிர்பாராமல் புதிதாகத் தோன்றிய ஆலகால விஷத்தை உண்டு
கறுக்கும் திருமிடற்றான்: அதனால் கறுப்பு நிறத்தையடைந்த ஸ்ரீகண்டனுடைய.
இடப்பாகம் கலந்த பொன்னே: வாம பாகத்தை வவ்விய பொன் போன்ற நிறந்தவளே
வெறுக்கும் தகைமைகள் செய்யினும்: வெறுக்கத்தக்க செயல்களை செய்தாலும்
தம் அடியாரை: தம்மை அண்டினவரை
பொறுக்கும் தகைமை: மன்னித்துப் பொறுக்கும் மாண்பு
புதியதன்றே: புது வழக்கமல்லவே தொன்று தொட்டு வழிவந்த வழக்கமல்லவா?
மறுக்கும் தகைமைகள் செய்யினும்: அவ்வாறு நீ என் வெறுக்கும் செயல்களை பொறுக்கமறுத்தாலும்
யானுன்னை வாழ்த்துவனே: உன்னை நான் வழுத்துவேன்

### பொழிப்புரை.

கடல்தனில் அமுதோடு கலந்த நஞ்சை மிடறினில் அடக்கியதன் காரணமாய் கண்டம் கறுத்தவனாகிய நீலகண்டப் பெருமானின் இடது பாதியில் இருப்பவளே, சிறியோர் செய்தது பெரும் பிழையே யாயினும் பெரியோர் பொறுப்பது என்ற வழக்கு புதிதல்லவே. அப்படியும் நீ பொறுக்க மறுத்தாலும் நான் உன்னை வழுத்துவனேயன்றி வெறுக்க மாட்டேன்,

விரிவுரை.

பாற்கடலில் எழுந்த நஞ்சையுண்டாலும் தேவியின் மாங்கல்ய பலத்தால் பரமசிவன் இறக்கவில்லை என்று சொல்வது புராணக்கூற்றும் கவிசாதுர்யமுமாகும். இவள் பாதி சரீரத்தில் அதிலும் ஹ்ருதயம் இருக்கும் இடப்பக்கத்தில் இருப்பதாலேயே பரமசிவன் இறக்க வில்லையாம். ஆனால் அதன் அடையாளமாக கண்டம் கறுத்ததாம். நீலகண்டம் என்பது தான் விஷத்தை அருந்தியாவது தேவர்களைக்காக்க வேண்டும் என்ற உத்தமமான பண்பைக்காட்டும் அடையாளமாம். அவருடன் பாதியாயிருக்கும் தேவி அடியார்களின் பிழைகளைப் பொறுத்து ரக்ஷிப்பது அதிசயமல்லவே "கடாக்ஷஸ்யந்தி கருணா" என்றும் "கருணாம்ருதஸாகார்" என்றும் புகழப்படுகின்ற தேவி, அடியார்களின் பிழைகளைப் பொறுப்பாள் என்பது இப்பாட்டின் உள் கருத்து. அடுத்து அவ்வாறு அவள் பொறுக்காவிடினும் அடியார்கள் அவளை வெறுக்காமல் வாழ்த்துவது கடன் என்ற சீரிய கருத்தையும் இப்பாட்டு தன்னுள் அடக்கிவைத்திருக்கின்றது. "பொல்லாத சேயெனில் தாய் தள்ளல் நீதமோ? புகலிடம் பிறிதுமுண்டோ" என்ற தாயுமானர் வாக்கையும் சிந்திக்க யாவருக்கும் தாயாதலால் குழந்தைகள் செய்யும் பிழைகளைப் பொறுப்பவள் என்பது கிடைக்கின்றது. தேவரைக்காக்க விஷமுண்ட கருணாமூர்த்தியான பரமசிவனின் பாதியான தேவி தன் குழந்தைகளின் பிழைகளைப் பொறுக்கக் கருணை காட்டமாட்டாளா? சாமானிய மக்கள் தமக்குக் கஷ்டம் வந்தகாலை தெய்வத்தை இகழ்வது கண்கூடு. நித்தமும் வழிபட்டும் என்னை இப்படித் தவிக்கவிட்டு விட்டாயே உனக்குக்கண்ணில்லையா? என்றெல்லாம் பேசுவதைப் பார்க்கிறோம். அவ்வாறு செய்வது தவறு என்பதை ஆசிரியர் உபதேசிக்கின்றார். ஏனெனில் சிவஞானசித்தியார் கூறுவதுபோல தாய் தந்தையர் தம் வழி நில்லாத பிள்ளைகளை விளாரினால் அடித்துத் தீயாலும் சுடுவர். அது செய்வது பிள்ளைகள் திருந்துவதற்கே. "இந்த நீர் முறைமை யன்றோ ஈசனார் முனிவு மென்றும்" என்று மறக்கருணையை விளக்குகிறார். மேலும் தெய்வ வழிபாட்டில் "அபராத க்ஷமணம்" கேட்பது என்பது ஓர் வழக்கு உண்டு. அது போன்று இப்பாட்டு அடியவர்களை இறைவியிடம் தம்குற்றங்களை மன்னிக்க வேண்டும் என்று பிரார்த்திக்கும்படி வற்புறுத்துகிறது.

## 47-வது பாட்டு.

### மநோ வாசாம கோசரா; நாடீஸ்தா ஸமருசி.

வாழும்படி யொன்று கண்டு கொண்டேன்; மனத்தேயொருவர்
வீழும்படியன்று; விள்ளும்படி யன்று வேலைநிலம்
ஏழும் பருவரை எட்டும் எட்டாமல் இரவு பகல்
சூழும் சுடர்க்கு நடுவே கிடந்து சுடர்கின்றதே

#### பதவுரை.

வாழும்படி ஒன்று கண்டுகொண்டேன்: நித்யானந்த வாழ்வு பெற்று சாசுவதமாய் வாழ ஒரு ரகசியத்தைக் கண்டு கொண்டேன்

மனத்தே ஒருவர் வீழும்படியன்று: அது ஒருவர் மனத்தினால் சிந்திக்கமுடியாது

விள்ளும்படியன்று: வாயினால் சொல்லவும் முடியாது

வேலை நிலம் ஏழும்: கடல் சூழ்ந்த ஏழு உலகங்களுக்கும்

பருவரை எட்டும்: அஷ்ட குலாசலங்களுக்கும்

எட்டாமல்: எட்டமுடியாமல் அப்பாலாய்

இரவு பகல் சூழும் சுடர்க்கு: இரவிலும் பகலிலும் தொழிற் செய்கின்ற இடகலை பிங்கலை என்ற சந்திர சூரிய நாடிகளால் சூழப் பட்டு

நடுவே கிடந்து: அவை இரண்டுக்கும் மத்தியில் இருக்கும் சுஷும்ன (சுழுமுனை நாடியில்) நாடியில் இருந்துகொண்டு

சுடர்கின்றதே: சுடர் விட்டு பிரகாசிக்கின்றது

#### பொழிப்புரை.

ஆனந்தமாயும் நித்தியமாயும் வாழ்வதற்கு ஓர் மார்க்கம் கண்டு கொண்டேன். அதை ஒருவர் மனதினால் அனுசந்தானம் பண்ணமுடியாது. வாயினல் பேசி விளங்கவைக்கவும் முடியாது. அது சந்திரநாடி சூரியநாடி என்ற இடா பிங்கலா என்ற நாடிகளின் மத்தியில் அவற்றால் சூழப்பட்டு இருக்கும் சுழுமுனை நாடியில் தங்கி பிரகாசித்துக் கொண்டிருக்கிறது.

விரிவுரை.

இப்பாட்டில் சுஷும்ன மார்க்கத்தைக் கூறுகின்ருர். அதாவது குண்டலினீயோகம் குறிக்கப்படுகின்றது. இரவு பகல் சூழும் சுடர்க்கு என்பது இடா பிங்கலா என்ற இருநாடிகள். இருபக்கங்களிலும் இடசாரி வலசாரியாக இந்த நாடிகள் சுழுமுனை நாடியை சுற்றிச்செல்லும் சுழுமுனையில் இருக்கும் குண்டலினி ''தடில்லதா ஸமருசி'' என்றபடி மின்னல் கொடிபோன்ற பிரகாசம் உடையது இது பராசக்தியின் அம்ஸம் என்பதை, ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்தில் 36 முதல் 40 முடிய 5 சுலோகங்களில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. சுருங்கச் சொன்னல் ''பிரம்மம் தன்னுடைய இச்சையினல் உலகனைத்தும் படைத்துத்தானே அதனுள் பிரவேசித்திருக்கிறது. ஜீவசைதன்யம் சரீரமாகிய பிண்டத்தில் குண்டலினீ சக்திரூபத்தில் ஸுஷும்ன என்னும் நாடியின் அடி நுனியில் சுருண்டு கிடக்கும் ஸர்ப்பம் போல் அமர்ந்திருக்கும் அந்தசைதன்யம் விழிப்படைந்து விளக்கமுற்று மேல் நோக்கிச் சென்று சுஸும்ன நாடியில் அமைந்துள்ள ஆறு ஆதார சக்கரங்களையும் மூன்று கிரந்திகளையும் பிளந்துகொண்டு ஸஹஸ்ராரத்திலுள்ள சச்சிதானந்த ருபமான பரசிவத்துடன் ஐக்கியமாகி அப்போது உண்டாகும் அமிர்தத்தைப் பருகிக்கொண்டு பரம்பொருளோடு அபின்னமாய் சிவானந்தத்தில் திளைத்திருக்கும். இது பற்றிய விவரம் முழுவதும் திருமூலர் திருமந்திரத்தினுள் 3-ம் 4-ம் தந்திரங்களில் காணலாம் அல்லது வடமொழி தந்திர சாஸ்திரங்களிலும் காணலாம். இந்த சாதனையால் அடைவது பிரம்மத்தோடு அத்விதீயமாய்க்கலக்கும் அனுபவமான பேரானந்தப் பெருவாள்வாதலால் அது மனம் வாக்குக்கடங்காதது என்ருர் அருணகிரியார். இந்த அனுபவத்தை பல இடங்களில் கூறியுள்ளார் உதாரணமாக கந்தரலங்காரம் 68-73 முதலிய பாடல்கள் பார்க்க. திருப்புகழில் குண்டலினியோகம் பல பாடல்களில் விவரிக்கப்பட்டிருக்கின்றது. ''நாலிரண்டிதழாலே'' என்று ஆரம்பிக்கும் திருப்புகழைப்பார்க்க. அதில் அம்பிகை உபாஸனையும் கூறப்பட்டிருக்கின்றது. தாயுமானுர் சிற்சுகோதய விலாசத்தின் ஆருவது பாட்டிலும் தேசோமயானந்தத்தில் முதல் பாட்டிலும் பிற இடங்களிலும் கூறுகின்ருர் எழுகடலும், எட்டுவரையும் கூட பரிபாஷைதான். நமது சரீரத்திலேயே இருப்பவை சித்தர் நூல்களில் விவரிக்கப்பட்டிருக்கின்றது.

48-ம் பாட்டு

## பவரோகக்னீ, பவநாசிநீ

சுடரும் கலைமதி துன்றும் சடைமுடிக் குன்றில் ஒன்றிப்
படரும் பரிமளப் பச்சைக் கொடியைப் பதித்து நெஞ்சில்
இடரும் தவிர்த்து இமைப்போதிருப்பார் பின்னும் எய்துவரோ
குடரும் கொழுவும் குருதியும் தோயும் குரம்பையிலே.

பதவுரை

சுடரும் கலைமதி: பிரகாசிக்கின்ற பூரண கலையுடன் கூடிய சந்திர கலாமண்டலத்திலே

துன்றும் சடைமுடிக்குன்றில்: இருக்கும் சடைமுடியை உடைய சதாசிவ மூர்த்தியின் முடியில்

ஒன்றிப்படரும்: பிரணவநாதத்தைக் குறிக்கும் கொன்றைமாலை உருவமாக படர்ந்து இருக்கும்

பரிமள பச்சைக்கொடி: வாசனை பொருந்திய பச்சையான கொடி போன்ற மனோன்மணியை

நெஞ்சில் பதித்து: தியானம் உபாஸனை செய்து

இடரும் தவிர்த்து: தாபத்ரயங்களையும் போக்கிக் கொண்டு

இமைப் போதிருப்பார்: ஒரு விநாடியாவது தியான சமாதியிலே இருப்பவர்

பின்னும்: இனிமேலும்

குடரும் கொழுவும் குருதியும் தோயும்: குடலும் மாமிசமும் இரத்தமும் பொருந்தும்

குரம்பையிலே: கர்ப்பத்திலே

எய்துவரோ: சேர்வார்களோ! (மாட்டார்கள் என்றபடி)

பொழிப்புரை

பிரகாசிக்கும் பூரணகலைகள் நிரம்பிய சந்திரகலாமண்டலமாகிற ஸஹஸ்ராரத்திலே வதியும் சதாசிவனின் முடியில் கொன்றை ரூபமாகப் படரும் மனோன்மணியை தியானம் செய்து உபாஸனை மார்க்கமாக சாதக்ய நிலையை அடைந்தவர்கள் பின்னும் குடலும் சதையும் இரத்தமும் ஒருங்கே கூடிய கர்ப்பைப் பையைச் சேரா

விரிவுரை

முந்தின பாட்டில் யோக சாதனையைக் கூறி இதில் உபாஸனு மார்க்கத்தாலும் அதே அனுபவத்தை அடையலாம் என்ற ரஹஸ்யத்தைக் கூறுகின்ருர். சுடரும் கலைமதி என்பதை பிறை சந்திரன் என்று உரையாசிரியர்கள் கூறியிருப்பது பொருந்தாது. கொன்றைமாலை பிரணவத்தின் அறிகுறி என்பதும் அதுவே அம்பாளைக்குறிக்கும் என்பதும் முந்திய 11-ம் பாட்டு விரிவுரையில் கூறினேம். இடரும் தவிர்த்து என்பது ஈண்டு ஆன்மாக்களைப் பற்றியிருக்கும் தாபத்ரயங்களான ஆதியாத்மிகம் ஆதிபௌதிகம் ஆதிதைஷிகம் என்பன. அம்பிகையின் தியானத்தில் சமாதி நிலை அடைந்தவர்களுக்கு இத்தாபத்ரயங்கள் கிடையாது. இதை ஸஹஸ்ரநாமத்தில் தாபத்ரயா அக்னி ஸந்தப்த ஸமாஹ்லாதன சந்த்ரிகா என்ற 357 வது நாமா குறிப்பிடுகின்றது. அதிலும் சந்த்ரிகா என்று வருவது உன்னி ஆராய்க. குரம்பை என்பதற்கு கூடு, முட்டை, குடில் என்ற பொருள்கள் உண்டு. அதை சரீரம் என்றே பொருள் கொண்டு வேருெரு சரீரத்தில் புகார் என்றும் கூறுப. ஆயினும் கர்ப்பத்தைக் குறிப்பதாகக் கருதுவது சிறந்த பொருள்.

## 49 வது பாட்டு

## ம்ருத்யு தாரு குடாரிகா.

குரம்பை யடுத்துக் குடிபுக்க ஆவி வெங்கூற்றுக்கிட்ட
வரம்பை அடுத்து மறுகும்அப்போது வளைக்கையமைத்து
அரம்பை யடுத்த அரிவையர் சூழ வந்தஞ்சலென்பாய்
நரம்பை யடுத்த இசை வடிவாய் நின்ற நாயகியே.

### பதவுரை

நரம்பை யடுத்த இசை வடிவாய்: யாழின் நரம்பைப்பொருந்திய நாத வடிவாய்
நின்ற: அமைந்த
நாயகியே: யாவற்றிற்கும் தலைவியாகிய அபிராமியே
குரும்பை அடுத்து: உடலாகின்ற கூட்டை அடைந்து
குடிபுக்க ஆவி: மனுதி இந்திரியங்களோடு ஒண்டுக்குடி புகுந்த என் உயிர்
வெங்கூற்றுக்கு: கொடிய யமனுக்கு
வரம்பை: இடப்பட்ட கால வரையை
அடுத்து: அடைந்து என்னை அணுகும்போது
மறுகும்: (என்ஆவி) சுழன்று தவிக்கும்
அப்போது: அந்த சமயத்தில்
வளைக்கை அமைத்து: (உன்) வளையணிந்த கையை அபய முத்திரையாக அமைத்துக் கொண்டு
அரம்பை யடுத்த அரிவையர் சூழ: ரம்பை முதலிய உனது கிங்கர்கள் சமேதமாய்
வந்து அஞ்சலென்பாய்: என்முன்தோன்றி அபயம் அளிக்க வேண்டும்.

### பொழிப்புரை

வீணையின் இசை போன்ற நாதஸ்வரூபிணியான தலைவியே, என் உயிர் உடலெனும் கூட்டையடைந்து அங்கு மனம் முதலிய இந்திரியங்களோடு ஒண்டுக்குடியாக வாழ்ந்து என் ஆயுள் முடிய வேண்டும் என்று இட்ட காலவரையில் யமன் என்னை அணுகும் போது நீ உன்னுடை ரம்பை முதலிய பரிவாரங்களோடு என் முன் தோன்றி பயப்படாதே என்று அபயமளிக்க வேண்டும்.

விரிவுரை

வளைக்கை அமைத்து என்பதற்கு வலக்கை அமைத்து என்றும் பாடம். வலக்கையே அபய முத்திரை காட்டும் கை. நரம்பை யடுத்த இசை. சிவத்தினின்று சக்தி ஸ்புரிக்கும் போது உண்டா கும் நாதம் அதுவே முதல் தோற்றம் ஆதலால் அம்மை யாவ ருக்கும் தலைவி அல்லது முதல்வியாகின்ருள். ''நாதா ரூபா,, (299) ''நாதரூபிணி,, (901) என்ற நாமாக்கள் அம்பிகைக்கு உண்டு. சக்தியின் தோற்றத்தின் போது சிவத்தில் ஏற்படும் 'ஸ்பந்தம், அல்லது அசைவினுல் உண்டாவது நாதம்; இதுவே பிரணவம். பிரணவத்தின் சிரோபாகத்துக்கு நாதம் என்ற பெயருண்டு. அதுவே சக்தி ஸ்வரூபம் சிரோபாகம் என்பது ஓ என்ற அக்ஷரத்தின் மேல்பாகமாகிற ⌒ வளைந்தகோடு. வீணையின் நரம்பை அசைத்த உடன் நாதம் உண்டாவது போல சிவத்தில் துடிப்பு (vibration) ஏற்பட்டவுடன் நாதம் உண்டாகின்றது. அரம்பையடுத்த அரிவையர்கள் என்பதை ''ரம்பாதி வந்திதா,, என்ற 741 வது நாமா குறிப்பிடுகின்றது. இதில் கூறப்படும் அரம்பை என்பவர்கள் தேவலோகத்தில் இருக்கும் நால்வரைக் குறிக்காது. அவர்கள் அப்ஸர ஸ்திரிகள் என்று கூறப்படுவர். இங்கு குறிக்கப்படுகிறவர்கள் சாக்த தந்திரங்களில் கூறப்படும் 60,000 தெய்வப் பெண்களைக் குறிப்பதாகும். இவர்கள் பாற் கடலில் பிறந்தவர்கள். இவர்களில் சிலர் அரம்பை, அலம்புசை, மனோகரை, ஊர்வசி, உமாவதி, இருது, சந்திரகலை, சுநகை, கலாவதி, காந்திமதி, மோகினி, சந்திரவிலேகை முதலிய அறு பதினுயிரம் தெய்வப் பெண் மணிகள். ஸஹஸ்ர நாமா ''மஹா சது,, ஷஷ்டி கோடி யோகினி கண ஸேவிதா என்ற 287 வது நாமா கூறுகின்றது. இவர்களுக்கு யோகினிகள் அல்லது பரிவார தேவதைகள் என்று பெயர். இவர்கள் என்றும் 25 வயதுடைய தெய்வப் பெண்களாய் இருப்பதால் '' அரிவையர்கள்,, என்று கூறினர். அரிவை என்பதற்கு ''பெண்,, என்பது பொது. தெய் வப்பெண், 25 வயதுடையவள் ''என்பது சிறப்புப் பொருள்.

———

50 வது பாட்டு

## ஸர்வ சக்திமயி (199)

நாயகி நான்முகி நாராயணி கைநளின பஞ்ச
சாயகி சாம்பவி சங்கரி சாமளை சாதி நச்சு
வாயகி மாலினி வாராகி சூலினி மாதங்கி என்று
ஆயகியாதி உடையாள் சரணம் அரண் நமக்கே.

### பதவுரை

நாயகி. ஸர்வலோகங்களும் ஒப்பற்ற தலைவி
நாராயணி: நான்கு முகங்களை உடையவள் நாராயணி
கை நளின பஞ்ச சாயகி: கையில் தாமரை முதலிய ஐந்து புஷ்ப பாணங்களை தரித்தவள்.
சாம்பவி; சம்புவின் பத்னீ
சங்கரி: ஹிதத்தைச் செய்பவள்
சாமளை: மேக நிறம் கொண்டவள்
சாதி நச்சு வாயகி: விஷத்தை வாயிலே உடைய நல்ல பாம்பை
மாலினி: மாலையாக உடையவள்
வாராஹீ: பன்றி முக முடையவள்
சூலினி: சூலத்தை உடையவள்
மாதங்கி: மதங்க முனிவரின் புதல்வி
என்று ஆய: இவ்வாறுகிய
கியாதி உடையாள்! கீர்த்தியை உடையவள்
சரணம்: பாதகமலங்கள்
அரண் நமக்கே: நமக்கு பாதுகாப்புக் கோட்டையாக இருக்கட்டும்,

### பொழிப்புரை

ஸர்வலோக நாயகியாகயும், நான்கு முகத்தோடு கூடியவளாயும், நாராயணியாயும், கையில் ஐந்து புஷ்ப பாணங்களையுடையவளாயும், சாம்பவியாயும், சங்கரியாயும், சியாமளையாயும், விஷம் கொண்ட பாம்பை மாலையாக அணிந்தவளும், வாராஹியும், சூலப்படை ஏந்தினவளும், மாதங்கியும் என்று இவ்வாறு பல உருவங்களும், பெயர்களுமுடைய அபிராமி அம்மையின் திருப்பாதங்கள் நமக்குப் புகலிடமாக இருக்கட்டும்.

விரிவுரை

முன்பே கூறியபடி நிற்குண பரப்ரம்ஹ ஸ்வரூபிணியா கின்ற பராசக்தி குணமும் குறியுமற்றதாய், ஏகமாய் எவ்வித அளவைகளாலும் அறிய வொண்ணுததாய் இருப்பது பிரபஞ்சத் தில் சிருஷ்டிஸ்திதி ஸம்ஹார திரோபவ அனுக்ரஹ பஞ்சக்ருத் யங்களைச் செய்யத் தன்னிச்சைய பலவித நாம ரூப பேதங்களைத் தாங்கி விளங்கிக் கொண்டிருக்கின்றது என்ற உண்மை இந்தப் பாட்டில் கூறப்பட்டது. அவளே "ஸர்வ சக்திமயீ" நாம ரூப பேதங்கள், ஸ்தான பேதம், அதிகாரி பேதம், காரியபேதம், பலனுக்குத் தகுந்த பேதம், முதலியவற்ருல் பலதிறப்பட்டு விளங்குகின்றன. இப்பாட்டில் வரும் நாமாக்களில் 1. நான்முகி 2. நாராயணி 3. பஞ்சசாயகி. 4. சாம்பவி, 5. சங்கரி, 6. சாமளை 7. மாலினி, 8. வாராகி, 9. சூலினி என்பவைகள் முறையே 505, 298, 11, 122, 126, 486, 455, 76, 506, எண்களுடைய நாமாக் களாக ஸஹஸ்ரநாமத்தில் வருகின்றன. "ஒரு நாமம் ஒருருவம் ஒன்றுமில்லாற்காயிரம் திருநாமம் பாடி நாந்தெள்ளேணம் கொட் டாமோ" என்று மணிவாசகப் பெருமானின் அருமையான திரு வாக்கு நினைவுக்கு வருகின்றதல்லவா.

## 51-வது பாட்டு.

## ஜன்ம-ம்ருத்யு-ஜரா-தப்த-ஜன-விச்ராந்த-தாயினி.

அரணம் பொருள் என்று அருள் ஒன்றில்லாத அசுரர் தங்கள்
முரண் அன்றழிய முனிந்த பெம்மானும் முகுந்தனுமே
சரணஞ் சரணமென நின்ற நாயகி தன்னடியார்
மரணம் பிறவி இரண்டு மெய்தார் இந்த வையகத்தே

பதவுரை.

அரண் நம் பொருள் என்று: (பொன், வெள்ளி இரும்பாலாகிய) கோட்டைகளே நமது உறுதியான செல்வம் என்று மதித்திருந்த
அருள் ஒன்றில்லாத அசுரர் தங்கள்: இரக்கமேயில்லாத தாரகாட்சன், கமலாட்சன், வித்யுன்மாலி என்ற மூன்று அசுரருடைய
முரண் அன்று அழிய: வலிமையானது அக்காலத்து எரிந்து ஒழிந்து போம்படி
முனிந்த பெம்மானும்: கோபத்தால் சிரித்த சிவபெருமானும்
முகுந்தனுமே அவருக்கு பாணமாக இருந்த திருமாலுமே
சரண் சரண் என நின்ற நாயகிதன்: தஞ்சம் தஞ்சம் என்று அடைக்கலம் புகும்படி வீற்றிருந்த தலைவி யாகிய அபிராமி அம்மையின்
அடியார்: மெய்யடியார்கள்
இந்த வையகத்தே: இந்த உலகத்திலேயே
மரணம் பிறவி இரண்டும் எய்தார்: இறப்பு, பிறப்பு என்ற இரண்டு அவஸ்த்தைகளையும் அடையமாட்டார்கள்

பொழிப்புரை

நமது பொன், வெள்ளி, இரும்பாலாகிய கோட்டைகளே நம்மைக் காக்க வல்லது என்று அஹங்காரம் கொண்டு அருள் சற்றும் இல்லாத தாரகாட்சன், கமலாட்சன், வித்யுன்மாலி என்ற மூன்று அரக்கர்களும் வெந்து நீராகச்சிரித்த சிவபெருமானும், அன்று அவருக்கு பாணமாக திகழ்ந்த திருமாலும்கூட தஞ்சம் தஞ்சம் என்று வந்து அடிபணியும் பெருமையையுடைய அபிராமியின் திருவடிகளை ஆச்ரயிக்கும் யோகிகளும், உபாசகர்களும் இப்பிறவியிலேயே, ஜனன மரண அவஸ்தைகளிலிருந்து மீட்கப் படுவர் என்பது உறுதி.

விரிவுரை.

சிவனும் விஷ்ணுவும் சக்தியை சரணடைகிறவர்கள் என்பது வெறும் கவிசாதுர்யமல்ல. தத்துவமே அதுதான். நிற்குணப்ரம்ம சொரூபமான பராசக்தியின் அதிஷ்டானத்தாலேயே சகுண மூர்த்திகளான பரமசிவன் திருமால் முதலியவர்கள் தோன்றி அவளுடைய அம்ச பூதைகளான சக்திகளையே சேர்ந்து தொழிலாற்றுகின்றனர். தாயார் ஸ்தானத்தில் இருப்பவளைத் தொழுவதில் என்ன குற்றம், சங்கரர் இரண்டு சுலோகங்களில் மிகுந்த காவ்யரஸனையுடன் கூறுகின்றார். ஸௌந்தர்யலஹரி 2-வது சுலோகத்தில் அம்பாளின் பாததூளியில் ஒரு சிறு பங்கைக்கொண்டு பிரம்மா பிரபஞ்சத்தைச் செய்கிறார். அவ்வாறனதை விஷ்ணு தன் தலைமேல் சிரமப்பட்டுதாங்குகிறார். பரமசிவனே அதனை உத்தூளனமாகத்தன் உடம்பில் பூசிக்கொள்கிறார் என்றும் 84-வது சுலோகத்தில் அம்பாளின் பாதங்களைக்கழுவிய ஜலத்தை கங்கையாக பரமசிவன் சடையில் வைத்துக்கொள்கிறார் உன்பாதத்திலிருக்கும் செம்பஞ்சுக்குழம்பின் திவலையே கௌஸ்துப மணியாக விஷ்ணு தன் மார்பில் வைத்துக்கொள்கிறார் என்றார். ஈண்டு சொல்லப்படுவதெல்லாம் சகுண மூர்த்திகள் நிற்குண சிவத்தைச் சொல்லவில்லை என்பதை நேயர்கள் அறிந்து சிந்திக்கவேண்டும் இது சிவ, விஷ்ணு நிந்தையல்ல யோகமார்க்கத்தில் அம்பாளை ஸஹஸ்ராரகமலத்தில் அனுபவித்தவர்களுக்கு மரணம் கிடையாது அவர்கள் சித்தர்கள் திருமூலர்.

(574) இட்டதவ்விடிளகாதிரேசித்துப்
புட்டிபட தசநாடியும் பூரித்துக்
கொட்டிய பிராணனபானனுங்கும்பித்து
நட்டமிருக்க நமனில்லைதானே என்று கூறுவதும்

காண்க. இதுபோன்று திருமந்திரத்தில் வேறு சில பாடல்களும் இருக்கின்றன. உபாஸனமார்க்கத்தில் பராசக்தியை தியானிக்கின்றவர்களுக்கு இனிப்பிறப்பில்லை இருவரும் அடைவது ஜீவன் முக்தியாதலாலே எய்தார் இந்த 'வையகத்தே' என்று கூறுகிறார்.

---

## 52-வது பாட்டு.

## ஸாம்ராஜ்ய தாயினி (692)

வையம் துரகம் மதகிரி மாமகுடம் சிவிகை
பெய்யும் கனகம் பெருவிலை ஆரம்பிறை முடித்த
ஐயன் திருமனையாள் அடித்தாமரைக்கு அன்புமுன்பு
செய்யும் தவமுடையார்க்குளவாகிய சின்னங்களே

### பதவுரை.

வையம்: தேர்

துரகம்: குதிரை

மதகரி: மதமுடைய யானை

மாமகுடம்: சிறந்த கிரீடம்

சிவிகை: பல்லக்கு

பெய்யும் கனகம்: பொழியும் தங்கம் முதலிய செல்வம்

பெருவிலை ஆரம்: விலையுயர்ந்த ஆரங்கள் இத்தனை சம்பத்துக்கள் யாவும்

பிறைமுடித்த ஐயன்: சந்திரமௌளீச்வரனை சிவபெருமானின்

திருமனையாள்: திருவுடைய மனைவியாகிய அபிராமியின்

அடித்தாமரைக்கு: பாதபங்கயங்களுக்கு

முன்பு அன்பு செய்யும்: முன் ஜென்மத்தில் அன்பு கொண்டு வழிபாடு செய்த

தவமுடையார்க்கு: பெரிய தவத்துடைய அடியவர்கு

உளவாகிய: உண்டாகும்

சின்னங்களே: அடையாளங்களே

### பொழிப்புரை.

சந்திரனை தலையில் தரித்த பரமசிவனின் மனைவியாகிற அபிராமி அம்மையின் திருவடித்தாமரைகளை முற்பிறவியில் அன்புடன் வழிபட்ட அடியார்கள் யாரெனில் இந்த ஜன்மத்தில் தேரும், குதிரையும், யானையும், மகுடமும், பல்லக்கும், பெருகும் செல்வமும், விலையுயர்ந்த ஆபரணங்களும் உடையவர்களாக இருப்பவர்களாகும்.

விரிவுரை.

தைத்ரீய உபநிஷத்சிக்ஷாவல்லி 6-வது அநுவாகத்தில் லம்பிகாயோகம், தகரவித்தை இவற்றைக்கூறி அதை அனுஷ்டிக்கிறவர்கள் ஆப்நோதிஸ்வராஜ்யம் ராஜ்யசம்பத்தை அடைகிறார்கள் என்று கூறுகின்றது. அதாவது முன்ஜன்மத்தில் காமியமாக வழிபட்டவர்கள் அடையும் இகலோக நன்மைகள் பொய்யாமொழியான திருக்குறளிலும் "இவர் பலராகியகாரணம் நோற்பார் சிலர் பலர் நோலாதவர்" என்றும் அறத்தாறிது வென வேண்டா சிவிகை பொருத்தானொ டூர்ந்தானிடை "என்றும் கூறியிருப்பதும் காண்க. முன் ஜென்மத்தில் தேவியை வழிபட்டவர்களே இந்த ஜென்மத்தில் சகல ஐச்வர்யங்களையும் போகங்களையும் அடைந்து வாழ்கின்றவர்கள் நாம் சில மனிதரிடம் செல்வம் கொழிப்பதையும் சகலவசதிகளோடு வாழ்வதையும் பார்க்கிறோம் அதே சமயத்தில் அவர்களிடம் கள்வியோ நற்பண்போ இருக்காது ஆயினும் அவர்கள் அடைந்திருக்கும் செல்வம் பூர்வ புண்ணியத்தின் பலன் என்றுதான் கொள்ளவேண்டும்.

———

## 53-வது பாட்டு

### காமகலா ரூபாயை நம:

சின்னஞ்சிறிய மருங்கினிற் சாத்திய செய்யபட்டும்
பென்னம் பெரிய முலையு முத்தாரமும் பிச்சி மொய்த்த
கன்னங்கரிய குழலுங் கண் மூன்றுங் கருத்தினில் வைத்துத்
தன்னந்தனி யிருப்பார்க்கிது போலும் தவமில்லையே

### பதவுரை

சின்னஞ்சிறிய மருங்கினில்: மிகச்சிறிய இடையில்
சாத்திய செய்ய பட்டும்: அணியப்பட்ட சிவந்த பட்டாடையும்
பென்னம் பெரிய: மிகப் பெரிய
முலையும்: ஸ்தன பாரங்களும்
முத்து ஆரமும்: முத்துமாலையும்
பிச்சி மொய்த்த: பிச்சிப்பூ (ஒரு வித மல்லிகை) நெருங்கி அமைந்தது
கன்னங்கரிய: மிக்ககருமையான
குழலும்: கூந்தலும்—கேசபாரமும்
கண்மூன்றும்: முக்கண்ணும்
கருத்தினில் வைத்து: இந்தவிதமான உருவதியானத்தைச் செய்து
தன்னந்தனியேயிருப்பார்க்கு: தனித்திருந்து யோகம் செய்வாருக்கு
இது போலும் தவமில்லையே: இது போன்ற வேறு ஒன்றுமில்லை

### பொழிப்புரை

அம்பாளை நுண்ணிடையில் சிவந்த பட்டாடை உடுத்தியிருப்பவளாயும், பெரிய ஸ்தானமுடையவளாயும், முத்தாரம் அணிந்தவளாயும், ஜாதி மல்லிகையைச் சூடிய கரிய கூந்தல் உடையவளாயும், கண் மூன்றுடையவளாயும், மனதில் அநுசந்தானம் பண்ணி இந்த உருவதியானத்தை தனித்திருந்து ஏகாக்ரமாய்ச் செய்துவரும் உபாஸகர்களுக்கு இதைவிட மேலான தவயோகம் இல்லை.

விரிவுரை

தியானத்துக்கு ஓர் உருவம் அவசியம் என்பதை எல்லா ஆகம நூல்களும் கூறியிருக்கின்றன. ஒவ்வொரு மூர்த்திக்கும் தியான சுலோகம் கூறப்பட்டும் இருக்கின்றது. கோரிய பலனையும், அதிகாரிபேதத்தையும் அனுசரித்து உருவமும் வெவ்வேறாக இருக்கும் இது மாதிரி அம்பாளின் நானுவித உருவங்களுக்குப் பெயரும் அமைப்பும் ஆகமங்களிலும், காச்யபசில்பம் போன்ற சில்பநூல்களிலும் பரக்கக் காணலாம். அவற்றில் இப்பாட்டில் கொடுத்திருப்பது ஓர் சிறந்த உருவம். மூன்று கண்களை உடையவளாயும் பருத்தஸ்தான பாரங்களை உடையவளாயும் சிவப்பு வஸ்தரம் அணிந்தவளாயும் தேவியை தியானிக்க வேண்டும் என்று சொல்லப் பட்டிருக்கிறது. அர்ச்சா மூர்த்திகள் யாவும் இத்தகைய தியான சுலோகங்களைக் கொண்டே சில்பிகள் உருவாக்குவார்கள். சகுண உபாஸனையிலிருந்தே நிற்குண உபாஸனைக்குச் செல்லவேண்டும் என்பதுதான் நமது சமயத்தின் சீரிய கொள்கை விக்ரஹ ஆராதனை ஓர் படியே யன்றி முடிந்த முடிவல்ல. தியானத்தின் பெருமையைப்பற்றி கிருஷ்ண யஜுர் வேதத்தைச் சேர்ந்த "தியான பிந்து உபநிஷத் முதல் மந்தரத்திலேயே கூறுகின்றது. "யதி சைலஸமம் பாபம் விஸ்தீரணம் பஹுயோஜனம் பித்யதேத்யான யோகேன நான்யோ பேத: கதாசன" அதாவது மலையளவு பாபம் அநேக யோஜனை விஸ்தீரணமாய் இருந்தாலும் தியான யோகத்தால் பிளக்கப்படும் ஒரு பொழுதும் வேறு வழியால் அழிக்கப்படுவதன்று "என்று பொருள். அது போன்றே இந்தப் பாட்டிலும் தியானத்துக்கு மிஞ்சின தவமில்லை என்று உபதேசிக்கப்படுகின்றது. இந்தப்பாட்டின் அதிரஹஸ்யக கருத்து "காமகலாதியானம் என்பது குருமுகமாகவே அறியவும் முகத்தை ஒரு பிந்துவாகவும் அதற்குக் கீழ் இரண்டு ஸ்தனங்களை இரண்டு பிந்துகளாகவும் பின்பு கடி பிரதேசத்தில் ஓர் கீழ் நோக்கிய முக்கோணமிட்டு அதில் காமார்ஜ பீஜாக்ஷரத்தை எழுதி தியானம் செய்வது காமகலாதியானம். இந்தப் பாட்டில் அந்தந்த அங்கங்கள் கூறியிருப்பது காண்க வெளிப்படையாய் சொல்லக்கூடாது என்ற நியதியை அனுசரித்து காவ்யரஸனையுடன் ஓர் உருவமாக அமைத்து நமக்கு அளிக்கிறுர் காமகலா ரூபம் அம்பாளின் சூக்ஷ்மதர ரூபம் என்று சாக்தம் கூறுகின்றது. ஸ்தூலரூபம் இங்கு கொடுக்கப்பட்டதிலிருந்து சூக்ஷ்மரூபத்தையும் கூறினுர்.

54-வது பாட்டு

## தரித்ராஹனும் சிந்தாமணி குணநிகா

இல்லாமை சொல்லி ஒருவர்தம் பாற்சென்று இழிவுபட்டு
நில்லாமை நெஞ்சில் நினைகுவிரேல் நித்தம் நீடுதவம்
கல்லாமை கற்ற கயவர்த்தம்பால் ஒரு காலத்திலும்
செல்லாமை வைத்த திருபுரை பாதங்கள் சேர்மின்களே

பதவுரை

ஒருவர் தம்பால் சென்று: செல்வர் ஒருவரிடமும் போய்
இல்லாமை சொல்லி: தன்னுடைய வறுமையைக் கூறி
இழிவுபட்டு: மானம் அழிந்து
நில்லாமை: நில்லாது இருத்தலை
நெஞ்சில் நினைகிவிரேன்: உள்ளத்தில் கருதுவீர்களானல்
நித்தம்: நாள்தோறும்
நீடுதவம்: உயர்ந்த தவத்தைச் செய்வதை
கல்லாமை கற்ற: பழகாததையே படித்த
கயவர் தம்பால்: கீழ் கடையானவர்களிடம்
ஒருகாலத்திலும்: எக்காலத்திலும்
செல்லாமை வைத்த: போகாமல் நிறுத்தும்படியாக (சகலஸௌபாக்யங்களையும் நல்கினி)
திருபுரை பாதங்கள்: திரு புரையாகிய அபிராமி அம்மையின் திருவடிகளை
சேர்மின்களே: இடைவிடாது தியானம் செய்யுங்கள்

பொழிப்புரை

நேயர்களே! செல்வவந்தர் ஒருவரை நாடி உமது வறுமையை எடுத்துரைத்து மானம் அழிந்து போகாமல் இருக்கவேண்டும் என்று நீங்கள் விரும்பினல் நாள்தோறும் தவவாழ்க்கை என்பதையே அறியாத கீழ்க் கடையான மனிதரிடமும் எக்காலத்தும் செல்ல வேண்டாதபடி செல்வத்தை அளிக்கும் திருபுரையாகிய அபிராமி பாதத்தை தியானம் செய்யுங்கள்

விரிவுரை

திருபுரை என்பது அம்பாளின் ஸ்தான பேதங்களில் ஒன்று. அவள் ஸ்ரீ சக்கரத்தின் பூபுரத்தின் அதிஷ்டான தேவதை பூபுரம் என்ற மூன்று வாசல்கள் உடைய மூன்று கோடுகள் உடையது அதற்கு த்ரைலோக்ய மோஹன சக்கரம் என்று பெயர் அம் மூன்று கோடுகளில் முதல் கோட்டு தச சித்திகளும், இரண்டாவது கோட்டில் ப்ராம்மி முதலிய அஷ்டமாத்ருகா சக்திகளும், மூன்றுவது கோட்டில் தசமுத்ரா தேவதைகளுமாக 20 யோகினிகள் இருக்கின்றன. இவர்களுக்கு ப்ரகட யோகினிகள் என்று பெயர். திரிபுரை இந்த முதலாவது ஆவரணத்தின் அதிதேவதை. அவளை தியானிப்பதால் தசமஹாசித்திகளும் உபாஸகனுக்கு சித்திக்கும் ஆகையால் அவன் பிறரிடம் சென்று யாசிக்க வேண்டியதில்லை. இந்தப்பாட்டு சுந்தரமூர்த்தி சுவாமிகள் 7 ம் திருமுறையில் அருளியே ‘‘தம்மையே புகழ்ந்திச்சை பேசினும்’’ என்ற திருப்பாட்டை நினைவூட்டுகின்றது. சேர்மின்களே என்றதற்கு இடைவிடாது தியானம் செய்யுங்கள் என்று பொருள் கொள்ள வேண்டும். அதாவது உடலைப் பற்றிய சேர்தல் அல்ல உள்ளத்தை அவளிடம் சேர்ப்பது என்பது பொருள். குறளில் வரும் ‘இறைவனடி சேராதார்’ என்ற இடத்தில் பரிமேலழகரும் இவ்வாறே பொருள் கண்டார். நித்தம் என்ற சொல்லை மூன்று இடங்களில் சேர்க்கலாம் (1) நித்தம் நினைதவிரேல் (2) நித்தம் நீடு தவம் கல்லாமை (3) நித்தம் சேர்மின்களே என்று

வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல.

என்பது பொய்யாமொழி.

55-வது சாட்டு

## அவ்யாஜ கருணாமூர்த்தி.

மின்னாயிர மொரு மெய்வடிவாகி விளங்குகின்றது
அன்னாள் அகமகிழ் ஆனந்தவல்லி அருமறைக்கு
முன்னாய் நடுவெங்குமாய் முடிவாய முதல் விதன்னை
உன்னா தொழியினும் உன்னினும் வேண்டுவதொன்றில்லையே

### பதவுரை

மின்னாயிரம்: ஆயிரம் மின்னல்கள்

ஒரு மெய்வடிவாகி: ஒருங்கே திரண்டு ஒரு திருவுருவத்தைத் தாங்கி

விளங்குகின்றது: பொலிவுற்று நிற்கின்றது

அன்னாள்: அவளே

அகமகிழ் ஆனந்தவல்லி: யாவருடைய உள்ளங்களிலும் ஆனந்த மயமான கொடிபோல் இருப்பவள்

அருமறைக்கு முன்னாய் நடுவெங்குமாய் முடிவாய முதல்வி: நான்கு வேதங்களின் முதலாயும் நடுவாகி எங்கும் பரவியும் அவற்றின் முடிவாயும் இருக்கின்றவள்

தன்னை உன்னாது ஒழியினும்: தம்மை தியானிக்காமல் இருந்தாலும்

உன்னினும்: தியானித்தாலும்

வேண்டுவதொன்றில்லையே: அவளுக்கு ஆக வேண்டியது ஒன்றுமேயில்லை

### பொழிப்புரை

ஆயிரம் மின்னல்கள் ஒருங்கே திரண்டு ஓர் உருப்பெற்றது போல் ஸ்வயம் ஜோதியாய் விளங்குமவள் யாவருடைய உள்ளத்திலும் ஆனந்த ஸ்வரூபமான கொடி போன்று விளங்கி நான் மறைகளின் அடியிலும் நடு வெங்கேயும் முடிவிலும் இருக்கும் ஆதிகாரண வஸ்துவானவளை யார் வணங்காவிட்டால் என்ன வணங்கினால் தான் என்ன அதனால் அவளுக்காக வேண்டியதென்றுமேயில்லை

விரிவுரை

ஆயிரம் என்பது எண்ணற்ற என்று பொருளில் வந்தது மெய்வடிவு என்பது உருக்கொண்டு என்று உண்மையான உருவம் என்றும் பொருள் கொள்ளலாம் "மின்னுயிரம்" உன்பது "தடில் லதா—ஸ்மருசி:" என்று ஸஹஸ்ர நாமத்திலும் "வித்யுல்லே கேவ பாஸ்வரா" என்று நாராயஸூக்தத்திலும் "தடில்லேகாதந்வீம்" என்றுசங்கரர் கூறுவதும் ஒப்புநோக்க "அகமகிழ் ஆனந்தவல்லி" "ஆனந்தோப்ரம்ஹேதி வ்யஜாநாத்" என்ற தைத்ரீய உபநிஷத் வாக்குப்படி ஆனந்தமே ப்ரம்மம். அதுஜீவர்களுள் பிரவேசித்து இருக்கிறது. ஆனந்தம் எத்தகையாதாயினும் சரி. இந்திரியங்களின் இன்பமானாலும், மனத்தின் இன்பமானாலும், ஆன்மானந்தமானா லும் அம்பாள் ஆனந்தரூபிணியாக யாவருடைய உள்ளத்திலும் பிரவேசித்து இருப்பதால் எல்லாவித ஆனந்தமும் அவளே. அருமறைக்கு முன்னாய் நடுவெங்குமாய் முடிவாய முதல்வி என்ப தனைச் சற்று விளக்குவோம். வேதங்கள் எழுத்தாலும் சொற்க ளாலும் ஆனவை. "வாக்" என்ற பதத்தால் குறிக்கப்படுகின்றது. "வாக்" என்பது பர, பச்யந்தி, மத்திமா, வைகரி என்று நால் வகைத்து. லலிதா ஸஹஸ்ரநாமத்தில் இந்த நான்கு வித வாக்கும் அம்பாளே என்று கூறப்பட்டிருக்கின்றது 81-வது சுலோகம்

''பாரா ப்ரத்யக்சிதீரூபா பச்யந்தி பரதேவதா
மத்யமா வைகரீரூபா பக்தமானஸ ஹம்ஸிகா"

ரிக்வேதம் 1-வது மண்டலம், 22-வது அனுவாகம், 164-வது சூக்தம், 45வது மந்த்ரம் பார்க்க. மேலும் லிபிகளும் மூலாதாரத் தில் உறங்கிக் கொண்டிருக்கும் குண்டலினியின் உச்வாஸ நிச் வாஸமே பிராணவாயுவினால் உந்தப்பட்டு, இடா, பிங்கலா, சுஷும்னா என்ற மூன்று நாடிகளின் வழியாக மேலே செல்லும்போது உண்டாகும் ஓசைப்பாகுபாடுகளே யாகும். குண்டலினியின் உச் வாஸ நிச்வாஸ சப்தத்தைத்தான் அஜபாமந்த்ரம் என்கிறோம். குண்டலினி பராசக்தியின் வியஷ்டி சூக்ஷ்மரூபம். ஆகவே வேதங் கள் அனைத்திலும் அம்பாளே அமர்ந்திருக்கிறாள் என்பது வெளிப் படை. யார் வழிப்பட்டாலும் வழிபடாவிட்டாலும் அவள் பாரபக்ஷமற்ற கருணையால் யாவரையும் ரக்ஷித்து வருகின்றாள் அவ்யாஜகருணாமூர்த்தி. அவள் ஸ்வதந்த்ரை யாதலால் ஒருவர் வழிபடுவதனாலோ, வழிபடாததாலோ பாதிக்கப்படாதவள். மக் கள் வழிபடுவது அவர்களுடைய க்ஷேமத்துக்கேயன்றி வழிபாட் டால் அம்பாள் அடையும் நன்மை ஒன்றுமில்லை.

1222

56-வது பாட்டு

## "ஏகாகிநீ பூமரூபா நிர்த்வைத த்வைதவர்ஜிதா"

ஒன்ருய் அரும்பிப் பலவாய்விரிந்து இவ்வுலகெங்குமாய்
நின்ருள் அனைத்தையும் நீங்கிநிற்பாள் என்றன்
நெஞ்சினுள்ளே
பொன்ருது நின்று புரிகின்றவா! இப்பொருளறிவார்
அன்ருலிலையில் துயின்றபெம்மானும் என் ஐயனுமே.

பதவுரை

ஒன்ருய்: ஆதியில் அத்விதியமாய் ஏகமாய் நின்ற பராசக்தி
அரும்பி: அங்குரித்து
பலவாய் விரிந்து: பிரபஞ்சத்தில் காணப்படும் சகல சராசரங்களுமாகி
இவ்வுலகெங்குமா நின்ருள்: பிரபஞ்சமனைத்தினிலும் ஊடுருவி அந்தர்யாமியாயும் நின்ருள்
அனைத்தையும் நீங்கி நிற்பாள்: அவைற்றிற்கு வேராகவும் அதீதமாகவும் இருப்பாள் (அத்தகையவள்)
என்றன் நெஞ்சினுள்ளே: க்ஷுத்ரபிரம்மாண்டமான என் சரீரத்திலிருக்கும் உள்ளத்திலே
பொன்ருது: நீங்காமல் சதாஸர்வகாலமும்
நின்று புரிகின்றவா!: நிலை நின்று அருள்புரிவது என்ன ஆச்சரியம்!
இப்பொருளறிவார்: இந்த உண்மையை அறிகின்றவர்கள்
அன்று: ஊழிகாலத்திலே உலகையெல்லாம் உண்டு
ஆலிலையில் துயின்றபெம்மானும்: ஆலிலை மீது அறிதுயில் கொண்ட பெருமானுன திருமாலும்
எம்ஐயனுமே!: என் தந்தையாகிய சிவபெருமானுமேயாவர்.
(பிறர் அறிகிலார்)

பொழிப்புரை

ஆதியிலே அத்விதியமாய் ஏகமாய் நின்ற பரப்ரம்ஹ சொருபிணியான பராசக்தித் தன்னிச்சையாலே அங்குரித்து, உலகத்திலுள்ள சேதன சேதனமான சகல வஸ்துக்களாக பரிணமித்தும், அவற்றிங்குள் அந்தர்யாமியாய் ஊடுருவி நின்றும், அவற்றிற்கு அப்பாலாய் இருக்கும் அத்தகைய மஹத்துவம் வாய்ந்தவள் என் சிறிய உடம்பினுள்ளும் புகுந்து அங்கேயே நித்தியவாசம் செய்வது

ஓர் ஆச்சரியமன்ருே? இதை யார் அறியமுடியும் என்ருல் ஊழி காலத்தில் பிரபஞ்சத்தை கபளீகரித்து ஒன்றும் அறியாத குழந்தை போல் ஓர் சிறு ஆலிலையில் அறிதுயில் கொள்ளும் விஷ்ணுவும், மறுபடியும் ஜகத்தைத் தோற்றுவிக்க பஞ்சக்ருத்ய தாண்டவமாடும் என் தந்தை பரமசிவனுமேயாவர். மற்ற எவர்க்கும் அவள் அறிய முடியாதவள்.

விரிவுரை

உரையாசிரியர்கள் பலவாய் விரிந்து என்பதை பலவிதமான சக்தி ரூபங்களாய் விரிந்து என்று கூறியுளர். ஈண்டு அம்மையே பிரபஞ்சமாக விரிந்து அவற்ருேடு ஒன்ருய் உடனுய் வேருய் இருக்கும் தத்துவத்தைக் கூறியது என்பதுதான் சரியான பொருள். ஸிருஷ்டியாதி பஞ்சக்ருத்யங்களிலும் சக்தி விரவியிருப்பது மட்டு மின்றி உலகில் காணப்படும் சகல நாமரூபங்களும் அவளே. அகளமாய் யாரும் அறிவரிதப்பொருள் சகளமாய் விரிந்தது. அது தானே தந்தது. பராசக்தியே பிரபஞ்சத்தில் சகல வஸ்துக்களிலும் வியாபித்திருக்கிருள் என்பது சுவேதாச்வரோபநிஷத்தில் 4-வது அத்தியாயம் 10-வது மந்த்ரத்தில் கூறப்பட்டிருக்கின்றது. அகளமான சிவம் பலவாக தன்னிச்சையால் சக்தியின் சேர்க்கையால் விரிந்தது என்பதை ப்ரஹதாரண்ய கோபநிஷத் அத்தியாயம் 1 பிராம்மணம் 2-ல் கூறுகின்றது. இவ்வாறு முதலில் ஏகமாய் நிற்குணமாய் நின்ற வஸ்துதானேவிரிந்து பலவாகி அவற்ருேடு ஒன்ருய் உடனுய் வேருமாய் இருப்பது என் உள்ளத்திலே நித்யவாசம் பண்ணுகிறது என்று இறும்பூது எய்து பாடுகிருர். "ஏகம்ஸத் விப்ராபஹுதாவதந்தி" என்பது ரிக்வேத மந்த்ரம்.

## 57-வது பாட்டு

## சாக்த உபாஸகர்கள் நரஸ்துதி செய்யமாட்டார்.

ஐயன் அளந்தபடி யிருநாழி கொண் டண்டமெல்லாம்
உய்ய அறம்செயும் உன்னையும் போற்றி ஒருவர் தம்பால்
செய்ய பசுந்தமிழ்ப் பாமாலையுங்கொண்டு சென்றுபொய்யும்
மெய்யும் இயம்பவைத்தாய்; இதுவோ உன்றன் மெய்யருளே.

### பதவுரை

ஐயன்: சிவபெருமானாகிய ஏகாம்பரநாதர்
அளந்தபடி இருநாழி: அளந்து கொடுத்த இருநாழி நெல்லை
கொண்டு: பெற்றுக்கொண்டு
அண்டமெல்லாம் உய்ய: அண்டத்திலுள்ள சகல ஜீவராசிகளும் வாழும்படிக்கு
அறம் செயும்: 32 அறங்களைச்செய்த
உன்னையும்: காமாக்ஷியாகிய உன்னையும்
போற்றி: துதித்துவிட்டு (ப்பின்)
ஒருவர் தம்பால்: வேறொருவரிடம்
செய்யபசுந்தமிழ் பாமாலையும் கொண்டுசென்று: சிறந்த புதிய தமிழ் பாமாலையை அவர் மீது புனைந்து கொண்டுபோய்
பொய்யும் மெய்யும்: இல்லாததையும் இருப்பதையும் கலந்து
பேசவைத்தாய்: அவர்களை புகழவைத்தாய்
இதுவோ உன்றன் மெய்யருள்: இதுதானா உனது திருவருளின் செயல்?

### பொழிப்புரை

ஏகாம்பர நாதரால் அளந்து கொடுக்கப்பட்ட இருநாழி நெல்லைக்கொண்டு காஞ்சி காமாக்ஷியாகிற நீ அண்டத்தின் ஜீவராசிகள் அனைத்தும் வாழும்படி 32 அறங்களை வளர்த்தாய். அப்படி அறம் வளர்த்த நாயகியாகிய உன்னையும் துதிசெய்துவிட்டு அதே நாவால் மானிடரிடம் சென்று அவர் மீது பொய்யும் மெய்யும் கலந்து புகழ்மாலை செய்ய தமிழில் பாடவைத்தது உன் பேரருளுக்குத் தகுதியாகுமா?

விரிவுரை

இருநாழி கொண்டு அறம் வளர்த்தது. பெரிய புராணம் திருக்குறிப்புத்தொண்டர் புராணத்தின் 70, 71-வது பாடல்களைப் பார்க்க. மேலும் தண்டியலங்காரத்தில் ஓர் மேற்பாடல்,

"தொல்லை மறைதேர் துணைவர்பால் யாண்டுவரை
எல்லை இருநாழி நெற்கொண்டோர்-மெல்லியலாள்
ஓங்குலகில் வாழும் உயிரனைத்தும் ஊட்டுமால்
ஏங்கொலி நீர்க்காஞ்சியிடை"

என்பதாலும் அறியலாம். பொய்யும் மெய்யும் பேசுவது சுந்தரர் திருவாக்கான "மிடிக்கிலாதானை வீமனே விறல் விசயனே வில்லுக் கிவனென்று, கொடுக்கிலாதானைப் பாரியே யென்று கூறினும்" என்ற அடிகளை நினைவூட்டுகின்றது. ஆசிரியர் இது தன்னைப்பற்றிக் கூறிக்கொண்டதாகக் கொள்ளுதல் கூடாது. சரபோஜி மன்னன் வலியக்கொடுத்த சன்மானங்களையே மறுத்தவர். தம்மைக் கூறிக் சொள்வதுபோல பிறருக்கு உபதேசம் செய்கின்றார். அவர் காலத் தில் இப்படி யாரும் இருந்திருப்பார் போலும். அண்ட பிண்ட சராசரங்களை ரக்ஷிக்கும் தாயைத் துதிப்பவர் நரஸ்துதி பண்ண மாட்டார். அன்னையே சகல சௌபாக்யங்களையும் நல்க இருக் கும்போது பிறர் மனைசென்று யாசிக்க அவசியம் இல்லை, மேலும் தனக்கு அன்னையருளால் உண்டான செய்ய தமிழ் பாமாலை இயற்றும் கவிதா சக்தியை கேவலம் மானிடரைப் புகழ்வதில் செலவிடுவது எவ்வளவு மதியீனம் என்பதையும் எடுத்துக்காட்டு கின்றார். 54 வது பாட்டிலும் இக்கருத்து கூறப்பட்டிருக்கின்றது. 44-வது பாட்டில் உன்னைத் தொழுதபின் வேறொரு தெய்வத்தை யும் தொழமாட்டேன் என்றவர் மனிதனையா தொழுது இறைஞ்சு வார்? பொதுவாக தீவிர சாக்த உபாஸகர்கள் பிறரை வணங்கார். வணங்கினால் அவ்வாறு வணங்கப்படுவர்களுக்கே கெடுதி சம்பவிக் கும் என்பது ஐதிஹ்யம். இதற்குப் பல அடியார்கள் வரலாறு களும் இருக்கின்றன.

---

58-வது பட்டு

## ஸ்ரீ பாலா திரிபுரசுந்தரி தியானம்,

அருணம் புயத்தும் என்சித்தாம் புயத்தும் அமர்ந்திருக்கும்
தருணம் புயமுலைத் தையல் நல்லாள் தகைசேர் நயன
கருணம் புயமும் வதனம்புயமும் கராம்புயமும்
சரணம் புயமும் மல்லால் கண்டிலேன் ஒரு தஞ்சமுமே.

பதவுரை

அருணம் புயத்தும்: சிவந்த தாமரை மலர் மீதும்
என் சித்தாம் புயத்தும்: என்னுடைய இருதய தாமரையிலும்
அமர்ந்திருக்கும்: வீற்றிருக்கின்ற
தருணம் புயமுலைத் தையல் நல்லாள்: தாமரை மொட்டுப்போல் இருக்கும் இளமுலையுடைய பெண்ணரசியான அபிராமியின்
தகைசேர்: அழகு பொருந்திய
நயனக் கருணம்புயமும்: கருணை பொழியும் விழித்தாமரையும்
வதனம் புயமும்: திருமுகத் தாமரையும்
கராம் புயமும்: திருக்கரங்களான தாமரையும்
சரணம் புயமும்: திருவடித் தாமரையும்
அல்லால்: அல்லாமல்
ஒரு தஞ்சமுமே: வேறொரு புகலிடம்
கண்டிலேன்: நான் கண்டறியேன்

பொழிப்புரை

சிவந்த தாமரையிலும், என் ஹ்ருதய தாமரையிலும் வீற்றிருக்கும் தாமரை மொட்டுப்போன்ற முலைகளையுடைய பெண் நல்லாளுடைய அழகியதும், கருணை நிறைந்ததுமான விழித்தாமரையும், திருமுகத் தாமரையும், திருக்கரங்களான தாமரையும், திருவடித் தாமரையுமேயன்றி வேறு புகலிடம் நான் கண்டதில்லை.

விரிவுரை

அம்பாளுக்கு "மஹாபத் மாடவீஸம்ஸ்தா" என்று ஒரு பெயர் உண்டு. அதாவது தாமரைக் காட்டில் வசிப்பவள் என்று. இப்பாட்டில் நூலாசிரியர் அத்தகைய தாமரைக் காட்டையே உண்டு பண்ணி விட்டார். "தாமரைக்காடனையமேனி" என்று மாணிக்கவாசகரும், "கருமுகில் தாமரைக்காடு பூத் து" என்று கம்பனும்

சொல்லியிருப்பது ஞாபகம் வருகின்றது. சிவந்த தாமரை அவள் வாசஸ்தலம் "பதமாஸனி" (278) என் ஹ்ருதயம் என்பது அனுகதஸ் தானம், அதுவும் 12 இதழ் தாமரை, "அனகதாப்ஜ நிலேயா" (485) அம்பாளின் ஸ்தனங்களோ மலரும் பக்குவத்தில் இருக்கும் தாமரை மொட்டுகள். "ஸ்தனபங்கஜத்வயி". கண்கள் மூன்று. "பத்மநயனு" (247) "பத்மாக்ஷி" (லக்ஷ்மீ அஷ்டோத்தரம்) "பத்மதளாயதாக்ஷி" (ஸ்ரீசூக்தம்) முகம் தாமரை. "பத்மானனே" (ஸ்ரீசூக்தம்) பத்மமுகீ (லக்ஷ்மீஅஷ்டோத்திரம்) கைகள் நான்கு அவைகள் தாமரைகள் "பத்மஹஸ்தா" (லக்ஷ்மீ அஷ்டோத்தரம்) சரணங்கள் தாமரை. "சரணகமலாலயம்" (அருணகிரியார்) "சரணபங்கேருஹம்" (சங்கரர்) சரணகமலம் (சங்கரர்) ஆக. ஆஸனம் 1 ஹ்ருதயம் 1 ஸ்தனங் கள் 2 கண்கள் 3 கரங்கள் 4 முகம் 1 சரணம் 2 மொத்தம் 14 தாமரைகள் இந்தப்பாட்டில் காட்சியளிக்கின்றன. தருணும் புயமுலே என்பதில் தருணு என்பது பரிபாஷையில் பாலா தேவியைக் காட்டுகின்றது. பஞ்சதசாக்ஷரீ மந்த்ரத்தோடு பாலா மந்த்ரத்தின் மூன்று அக்ஷரங்களைச்சேர்த்து ஜபம் செய்ய வேண்டும். இதற்கு சௌபாக்ய பஞ்சதசாக்ஷரி என்று பெயர். "ஸர்வாருணு"என்றபடி அம்பாளை முழுதும் சிவப்பாகவே காட்டி யிருக்கிறார். சித்தர்கள் நூல்களில் "வாலே" என்று அழைக்கப் படுகிறவள் இவளே. லகுஸ்துதி முதல் சுலோகத்தில் பாலாமந்த்ரம் விவரிக்கப்படுவதாக அதன் பாஷ்யத்தில் தெரிகிறது.

---

59 வது பாட்டு

## ஸ்ரீ மாத்ரே நம; அம்பாளின் மாத்ரு பாவம்.

தஞ்சம் பிறிதில்லை ஈதல்ல தென்றுன் தவநெறிக்கே
நெஞ்சம் பயில நினைக்கின்றிலேன்; ஒற்றை நீள் சிலையும்
அஞ்சம்பும் இக்கலராகி நின்ருய் அறியார் எனினும்
பஞ்சஞ்சு மெல்லடியார் அடியார் பெற்ற பாலரையே.

பதவுரை

நீள்சிலையும் நீண்டவில்லும்
அஞ்சம்பும்: பஞ்சபாணமும்
இக்கு அலராக: முறையே கரும்பும் புஷ்பங்களுமாக அவற்றை கையில் கொண்டு
நின்ருய்: நிலையாக இருப்பவளே!
ஈதல்லது தஞ்சம் பிறிதில்லை என்று: முன்பாட்டில் சொன்னவற்றைத்தவிர வேறு புகலிடம் இல்லை என்பது அறிந்தும்
உன் தவநெறிக்கே: உன்னை வழிபடும் சகலாகம பத்ததிக்கே
நெஞ்சம் பயில: மனதைப் பழக்கி வழிபட
நினைக்கின்றிலேன்: எண்ணுகின்றேன் இல்லையே
பஞ்சு அஞ்சும் மெல்லடியார்: மிருதுவான பஞ்சை மிதித்தாலும் நோகும் என்று அஞ்சும் மென்மையான பாதங்களை உடைய பெண்கள்
அறியார் எனினும்: பேதைகளே யானாலும்
பெற்ற பாலரையே அடியார்: குற்றம் செய்த தமது குழந்தைகளை அடித்து தண்டிக்க மாட்டார்கள்.

பொழிப்புரை

நீண்டகரும்புவில்லும், பஞ்ச புஷ்பபாணமும் கையிலேந்தி நிலையாக இருக்கும் அபிராமி அம்மையே! உன்னையன்றி தஞ்சம் வேறில்லை என்று நான் உணர்ந்திருந்தும் உன்னை வழிபடும் சகலாகம பத்ததியால் வழிபட என் மனதில் எண்ணம் எழவில்லையே! ஆனால் பஞ்சைவிட மென்மையான பாதங்களையுடைய பெண்கள் பேதையரேயானாலும் தாம் பெற்ற புதல்வர்கள் குற்றம் செய்தாரேனும் அவர்களை தண்டிக்கமாட்டார்கள்.

விரிவுரை

பேதைப் பெண்களே பெற்ற பிள்ளைகளை அடிக்கமாட்டார்கள் என்றால் எல்லாம் அறிந்த நீ நான் செய்த குற்றத்துக்கு எனக்கு தண்டனை கொடுப்பாயோ? உன்னையன்றி தஞ்சம் பிறிதில்லை யென்று நான் அறிந்திருந்தும் என் மனம் தவநெறியில் ஈடுபடாதது என் குற்றமா? அப்படியே என் குற்றமாயினும் உனது மாத்ருபாவத்தால் என்னை அணைப்பது போக அடிப்பது கூடுமோ. மேலும் உன் கையில் வில்லாக இருப்பது கரும்பு. பாணமாக இருப்பது புஷ்பம் இவற்றை பிரயோகம்பண்ணி என்னைத்தான் தண்டிக்கமுடியுமா? உன் கரும்புவில் "மனோரூபேக்ஷு கோதண்டா" என்றபடி மனஸ்தத்துவமேயாகும். உன் பாணங்கள் "பஞ்சதன் மாத்ரஸாயகா" என்றபடி பஞ்சதன்மாத்ரா ரூபமான எனது ஞானேந்திரியங்கள். அவற்றை ஏந்திக்கொண்டிருக்கும் நீயன்றோ என் மனதையும் என் ஐந்து ஞானேந்திரியங்களையும் வசப்படுத்த வல்லவள். ஆகையால் அவ்வாயுதங்களை என்மீது ஏவி என் மனதையும் இந்திரியங்களையும் உன்வசப்படுத்திக் கொள்வது உன் கடமையாயிருக்க, என் தாயாகிய நீ தண்டிக்க முற்படுவையோ? பஞ்சஞ்சு மெல்லடி என்பதற்கு செம்பஞ்சுக் குழம்புக்கும் அஞ்சுகின்ற மெல்லடி என்று பொருள் கூறுவாருமுளர். "பொல்லாத சேயெனில் தாய்தள்ளல் நீதமோ புகலிடம் பிறிதுமுண்டோ" என்ற தாயுமான அடிகள் இங்கு ஒப்பு நோக்கற்பாலது. உன் தவநெறி என்பது சாக்தபத்ததி என்றுதான் இங்கு பொருள் கொள்ள வேண்டும். சிவநெறி என்றும் சரியை கிரியை யோகம் என்றும் பொருள் கூறுவது பொருந்தாது.

60 வது பாட்டு

5

## ஹ்ரீங்கார கமலேந்திராயை நம:

பாலினும் சொல்லினியாய்! பனிமா மலர்ப்பாதம் வைக்க
மாலினும் தேவர் வணங்க நின்ருேன் கொன்றைவார் சடையின்
மேலினும் கீழ்நின்று வேதங்கள் பாடுமெய்ப் பீடமொரு
நாலினும் சாலதன்ருே? அடியேன் முடைநாய்த்தலையே.

பதவுரை

பாலினும் (இனிய) : பாலைக்காட்டிலும் இனிமையான
சொல்லினியாய்!: இனியமொழியை உடையவளே!
மால் இனும் தேவர்: திருமால் இன்னும் மற்றுமுள்ள தேவர்
வணங்க நின்ருேன்: வணங்கும்படி விளங்கும் சிவபெருமானுடைய
கொன்றைவார் சடையின் மேலினும்: கொன்றை மாலையணிந்த நீண்ட சடாபாரத்தைக் காட்டிலும்
கீழ் நின்று: பீடமாகக் கீழேஅமர்ந்து
வேதங்கள் பாடும்: உத்கோஷிக்கின்ற
மெய்ப்பீடம் ஒருநாலினும்: உண்மையானபீடங்கள் நான்கையும் காட்டிலும்
அடியேன் முடை நாய்த்தலை: அடியேனுடைய நாற்றமுடைய நாய்த்தலை
பனிமலர் மாப்பாதம் வைக்க: உன்னுடைய குளிர்ச்சி பொருந்த பாதத்தாமரையை வைக்க
சால நன்ருே! மிகவும் நல்லதாகக் கருதினுயோ!

பொழிப்புரை

பாலைக்காட்டிலும் இனிய சொல்லையுடைய அபிராமி அம்மையே, திருமாலும் ஏனைய தேவர்களும் வந்து வணங்கும்படி நின்ற பரமசிவனுடைய கொன்றை மாலை அணிந்த நீண்ட சடையைக்காட்டிலும், உனது அடியின் கீழ் நின்று உத்கோஷிக்கும் வேதங்களால் புகழப்பட்ட நான்கு பீடங்களையும் காட்டிலும் உன்னுடைய குளிர்ச்சி பொருந்திய பெருமை வாய்ந்த திருப்பாதங்களை வைப்பதற்கு நாய் போன்ற கடையனை அடியேனுடைய நாற்றம் பொருந்திய தலையையோ சிறந்ததாகக் கருதினுய்?

விரிவுரை

இப்பாட்டில் முக்கியமான பகுதி "பீடமொரு நாலினும்" என்பதே. உரை எழுதிய சைவப்பெரியார் யாவரும் திருமூலர் திருமந்திரத்தின் ஒன்பதாவது தந்திரம் 3வது தலைப்பு பிரணவசமாதியின் முதல் திருப்பாட்(2675)டின் ஆதரவை வைத்துக்கொண்டு தூல பிரணவபீடம், சூக்குமபிரணவபீடம், காரணபிரணவபீடம், மகா காரண பிரணவபீடம் என்று பொருள் கொண்டனர். மேலும் இப்பீடம் நான்கினையும் சிவபெருமானுக்கே ஏற்றி "கீழ்நின்ற" என்பதை சிவபெருமானின் பாதுகையாக நிற்கும் பீடங்கள் என்றும் பொருள் கொள்கின்றனர். சாக்தாகமம் தெரிந்த பெரியார் கொண்ட கருத்தை இங்கு கூறுகிறோம். சாக்தத்தில் பிரணவத்துக்குச்சமானமாய், சில இடங்களில் அதற்கும் மேலாகக் கருதப்படுவது "ஹ்ரீம்" என்ற பீஜாக்ஷரம். இந்த அக்ஷரம் நான்கு பகுதிகளைக் கொண்டது. இந்த அக்ஷரமே பரதேவதையின் சொரூபமாயும், சிரோமணியாயும், பீடமாயும் இன்னும் பலவிதமாகவும் கூறப்பட்டிருக்கின்றது. லலிதா திரிசதியில் இந்த அக்ஷரத்தை முதலாகக் கொண்டு 60 நாமாக்கள் இருக்கின்றன. அவற்றிற்கு ஸ்ரீசங்கரர் எழுதிய பாஷ்யத்தைக்காண்க, இந்த அக்ஷரத்தின் ஓர் சிறப்புப் பகுதியாக அமைந்தது "ஈம்" என்ற அக்ஷரம். இதை வெளிப்படையாகச் சொல்லக்கூடாது என்பது சட்டம். குருமுகமாகவே அறியத்தக்கது. வேதம் கோஷிக்கின்றது என்பதும் "ஹ்ரீம் காரவேதோபநிஷதேநம:" என்ற 294வது நாமாவில் கூறப்படுகின்றது. அனைத்தையும் விரிக்க இடமும் இல்லை. அதிகாரமும் இல்லை. அறியஇயலாதவர்கள் மேற்சொன்ன திருமந்திரப் பாட்டையே ஆதாரமாக்கொண்டுள்ள உரையையே கொள்வதில் குற்றமில்லை. திருமாலும் ஏனைய தேவர்களும் வணங்கியது, பாற்கடல் கடையும்போது உண்டான ஆலகால விஷத்துக்கு அஞ்சியென்பது புராணக்கூற்று. இறைவன் தலைமீது இருக்கும் கொன்றை மாலையே தேவியின் சொரூபம் என்பது முன்னரே கூறப்பட்டது. சஹஸ்ரநாமம் 301வது நாமாவையும் பார்க்க.

6

## 61 வது பாட்டு

### பக்த-ஹார்த்த-தமோ-பேதபானுமத்-பானுஸந்ததி (404)

நாயேனையும் இங்கொரு பொருளாக நயந்துவந்து
நீயே நினைவின்றி ஆண்டுகொண்டாய் நின்னை உள்ளவண்ணம்
பேயேன் அறியும் அறிவுதந்தாய் என்ன பேறுபெற்றேன்
தாயே! மலைமகளே! செங்கண்மால் திருத் தங்கைச்சியே.

பதவுரை

தாயே: அன்னையே
மலைமகளே: பர்வதராஜன் புத்திரியே
செங்கண்மால்: (தாமரைபோன்ற) சிவந்தகண்களையுடைய திருமாலின்
தங்கைச்சியே: இளைய சகோதரியே
நாயேனையும்: நாயினும் கடையனான என்னையும்
ஒருபொருளாக: ஒரு தகுதி வாய்ந்தவனாக
நயந்து வந்து: விரும்பி வந்து
நீயே: உன் சுய இச்சையினாலேயே
நினைவின்றி: என்னுடைய தற்போதமற்ற நிலையில்
ஆண்டுகொண்டாய்: என்னை உன் சுவாதீனப்படுத்திக் கொண்டாய்
(மேலும்) பேயேன்: அறிவற்றவனான நான்
நின்னை உள்ளவண்ணம்: உன்னை உள்ளவாறு
அறியும் அறிவு தந்தாய்: சாக்ஷாத்கரிக்கும் மெய்ஞ்ஞானத்தையும் கொடுத்தருளினாய்
என்னபேறு பெற்றேன்: (இத்தகைய மெய்ஞ்ஞானம் தலைக் கூடுவதற்கு) எவ்வளவு பாக்கியம் நான் செய்தவனாக இருக்கவேண்டும்

பொழிப்புரை

அன்னையே! பர்வதராஜனின் தவப்புதல்வியே! புண்டரீகாக்ஷனான திருமாலுக்குச்சிறந்த தங்கையே! நாயிற்கடையாய்க் கிடந்த அடியேனையும் நின் கருணையினால் தகுதியுள்ளவனாகத் திருவுளம் கொண்டு, உன் சொந்த விருப்பத்தால் அடியேனின் தற்போதம் இழக்கும்படி உன் சுவாதீனமாக்கிக்கொண்டாய். அம்மட்டேயன்றி உன் சொரூபலக்ஷணத்தையும் அறிந்து உன்னோடு தாதாத்மியம் ஆகும் ஸ்ரீவித்யை என்ற பிரம்மஞானத்தையும் அருளினாய். நான் என்ன பாக்கியம் செய்திருக்கிறேன்.

விரிவுரை

செங்கண்மால் சிவபெருமானுல் தாமரைக்கண் பெற்றவன், புண்டரீகாக்ஷன், நினைவின்றி என்பதை அம்பாளுக்கு ஏற்றிக்கூறி அம்பாள் நினைவில்லாமல் தன்னை ஆட்கொண்டாள் என்று உரை கூறி இடர்ப்படுவாருமுண்டு. அவளுடைய சுவாதீனமாய் விட்டதால் தன் சுவாதீனம் அற்றுவிட்டது என்பது பொருள். உள்ள வண்ணம் அறிதல், அபிராமியே பரப்ரம்ஹ சொரூபிணியாகவும் அவளோடு தாதாம்மியம் ஆவதே முக்தி என்பதும் அறிதல். அன்னை, உலகின்ற அன்னை. ஜகஜ்ஜனனீ. திருமால் தங்கை. பத்மநாமசகோதரி. அறிவுதந்தாய், ஞானதா என்பன ஸஹஸ்ர நாமப்பதங்கள். நாயேனையும் நாயிற்கடையாய்க்கிடந்த அடியேற்குத் தாயிற்சிறந்த தயாவான தத்துவனே—திருவாசகம். ஆண்டு கொள்ளுதல். தன் சுவாதீனப் படுத்திக் கொள்ளல்.

7

## 62 ம் பாட்டு

## காமேச்வரா லிங்கிதாங்கி (திரிசதி 246)

தங்கச்சிலை கொண்டு தானவர் முப்புரம் சாய்த்துமத
வெங்கட் கரியுரிபோர்த்த செஞ்சேவகன் மெய்யடையக்
கொங்கைக் குரும்பைக் குறியிட்ட நாயகி கோகனகச்
செங்கைக் கரும்பும் மலரும் எப்போதுமென் சிந்தையதே.

### பதவுரை

தங்கச்சிலைக் கொண்டு: பொன் மயமான மேருபர்வதத்தை வில்லாகக் கொண்டு
தானவர் முப்புரம்: அரக்கர்களுடைய முப்புரங்களையும்
சாய்த்து: சாம்பலாகும்படி அழித்து
மத வெங்கரி: மதங்கொண்ட கொடிய கண்களையுடைய யானையின்
உரிபோர்த்த: தோலை உரித்துப் போர்த்துக்கொண்ட
செஞ்சேவகன்: சிவந்த அல்லது சிறந்த வீரனாகிய சிவபெருமானுடைய
மெய்யடைய: திருமேனியிலே பொருந்தும்
குரும்பை: குரும்பை போன்ற தனங்களால்
குறியிட்ட நாயகி: அடையாளம் இட்ட தலைவியாகிய காமாக்ஷியம்மையின்
கோகனக: தாமரை மலர் போன்ற
செங்கை! சிவந்த திருக்கரங்களில் ஏந்திய
கரும்பும்! இக்ஷுகோதண்டமும்
மலரும்: புஷ்ப பாணங்களும்
எப்போதும்: சர்வ அவஸ்தைகளிலும்
என் சிந்தையதே: என் உள்ளத்தில் நித்யவாசம் செய்வன.

### பொழிப்புரை

பொன்னிறமான மேருவை வில்லாகக் கொண்டு முப்புர அரக்கர்களை அழியச் செய்தவரும், மதங்கொண்ட யானையின் தோலை உரித்துப் போர்வையாக உடுத்துக் கொண்டவருமான வீரரான சிவபெருமானைத் தன் குரும்பமுலை பொருந்தத் தழுவி அதனால் அவர்மீது ஸ்தனங்கள் பதிந்து அடையாளமிட்ட காஞ்சி காமாக்ஷியம்மையின் செந்தாமரை போன்ற திருக்கரங்களில் ஏந்தும் கரும்பு வில்லும் புஷ்ப பாணங்களும் எப்போதும் என் உள்ளத்திலேயே இருக்கின்றன.

விரிவுரை

அபிராமியம்மையே பரப்ரம்ஹ சொரூபிணியான பராசக்தி என்ற சித்தாந்தத்தை உடையவராதலால் அபிராமிபட்டர் காஞ்சி காமாக்ஷியும் அவளே என்று கூறுகின்றார். திருக்கடவூர் அபிராமியின் திருவுருவத்தில் கரும்புச்சிலையும் புஷ்பபாணமும் இல்லை. அவற்றிற்கு பதிலாய் அபயவரத ஹஸ்தங்களே இருக்கின்றன. அது போன்றே பாசாங்குசங்களுக்கு பதிலாய் அக்ஷமாலையும் ஸ்தாலியும் இருக்கின்றன. ஆயினும் ஆசிரியர் இந்த மூர்த்தியிலே சகல தேவி உருவங்களையும் காண்கின்றார். ஏனெனில் முந்தின பாட்டில் "நின்னை உள்ள வண்ணம் அறியும் அறிவு தந்தாய்" என்பதால் அபிராமியே சகல சக்தி பேதங்களும் என்பதைக் கூறுகின்றார். இறைவன் கையிலிருக்கும் வில் மேருமலை. இறைவியின் கையிலிருக்கும் வில் கரும்பு என்ற நயம் கருதத்தகுந்தது. கரும்புவில், புஷ்பபாணம் இவற்றின் தத்துவம் முன்பும் கூறப்பட்டது. அவை மனதையும் இந்திரியங்களையும் குறிப்பன. அவன் தன் உள்ளத்தில் இருப்பதால் மனதும் இந்திரியங்களும் செயல் அடங்கின என்பது குறிப்பு. சிலை என்பதற்கும் மலையென்றும் வில்லென்றும் இரண்டு பொருள்கள் உண்டு. இறைவனைக் குழையத்தழுவிய விருத்தாந்தம் முன் 38ம் பாட்டின் விரிவுரையில் கூறப்பட்டது.

---

63 வது பாட்டு

## ஸர்வதந்தர் ரூபா—ஸர்மந்தர—ஸ்வரூபிணி (206-204)

தேறும்படி சில ஏதுவுங்காட்டி முன்செல் கதிக்குக்
கூறும் பொருள் குன்றிற் கொட்டுந் தறிகுறிக்குஞ் சமயம்
ஆறும் தலைவி இவளாய் இருப்பதறிந்திருந்தும்
வேறும் சமய முண்டென்று கொண்டாடிய வீணருக்கே

பதவுரை

சமயம் ஆறும்: ஷண்மதங்கள் என்று சொல்லப்பட்ட அறு மதங்களுக்கும்
தலைவி இவளாய் இருப்பது அறிந்தும்: பராசக்தியே தலைவி என்பதை அறிந்தும்
வேறும் சமயம்: வேறு சமயம்
உண்டென்று கொண்டாடிய: இருப்பதாகக் கருதி அவற்றைப் பின்பற்றும்
வீணருக்கே: வீண்பொழுது போக்கும் அறிவிலிகளுக்கு
தேறும்படி: அவர்கள் கடைத் தேறும்படி
சில ஏதுவும்காட்டி: சில முகாந்தரங்களைக் கூறி
செல்கதிக்கு: அவர்கள் அடைய இருக்கும் முக்திக்கு
கூறும் பொருள்: (வழி) சொல்லும் சாத்தாகமங்களைக் கூறுதல்
குன்றிற் கொட்டும் தறிகுறி: மலையை உடைக்க ஓர் மரக்கட்டையைப் பயன் படுத்துவது போலாகும்

பொழிப்புரை

ஆறுமதங்களிலும் பொருந்தித் தலைவியாய் உறைவது பராசக்தியே என்ற உண்மையை அறிந்தும் சாக்தத்தை விட்டு வேறு சமயங்களைத்தழுவி இடர்படும் அறிவிலிகளுக்கு தகுந்த முகாந்தரங்களை எடுத்துக்கூறி அவர்கள் உய்யும் பொருட்டு சக்தியின் பிராதான்யத்தையும் அவளுடைய வழிபாட்டையும் எடுத்து உபதேசிக்க ஆரம்பிப்பது மலைப்பிளக்க ஓர் கட்டையைக் கொண்டு அடிப்பது போலாகும்.

விரிவுரை

ஷண்மதங்களாவன. இவை பல்வேறு விதமாகக் கூறுவர். ஒருசாரார் நியாயம், வைசேடிகம், சாங்கியம், யோகம், மீமாம்ஸை, வேதாந்தம் எனக்கூறுவர். வேறுசிலர் சைவம், சாக்

தம், வைணவம், காணபத்தியம், கௌமாரம், சௌரேயம் என்பர். இவ்விரண்டு வரிசைகளும் வேத அடிப்படையிலேயே எழுந்தவைதான். வேதத்தை ஒப்புக்கொள்ளாமல் போன சமயங்கள் உலோகாயதம், க்ஷமணம், யூதம், பௌத்தம் என்பன இவற்றோடு பிற்காலத்தில் தோன்றிய கிருஸ்துவம், இஸ்லாமியம் சேர்த்தால் அவையும் ஆறு ஆகிவிடுகின்றன. சிவஞான சித்தியார் எழுதிய அருணந்திசிவம் சமயங்களை புறப்புறச்சமயம், அகப்புறச் சமயம், அகச்சமயம் என்று பிரித்துக் காட்டுகிறார். இந்நூலுக்கு உரை எழுதிய சைவப் பெரியார்கள் ஈண்டு சைவ சித்தாந்தத்தையே பெருமை படுத்திக் கூறியதாகக் கொள்வர். வைதிகசமயம் ஆறிலும் அதாவது சைவம், சாக்தம், வைணவம், கௌமாரம், காணபத்தியம், சௌரேயம் என்பனவற்றில் சக்தியை மறுக்காமல் அவளது அதிட்டிப்பினாலேயே பரம்பொருள் தொழிற்படும் என்பதை ஒருவாறு ஒப்புக்கொள்கின்றன. அவற்றில் சாக்தம் ஒன்றே சக்தியை பரபாம்ஹ சொரூபிணி. மற்றயாவும் அவளினின்றே தோன்றி இயங்கி அழியும் என்று கூறும். ஆகவே பராசக்தியின் முக்கியத்துவத்தை ஒப்புக் கொள்ளாத சமயங்களையே ஈண்டு குறிப்பிட்டதாகக் கொள்வதுதான் முறை. அதிலும் அபிராமி பட்டர் வைதிக பிராம்மணராக இருந்து வேதம்கற்று வைதீக அனுஷ்டானங்களை விட்டுவிட்டு சாக்த அனுஷ்டானத்தில் திளைத்தவர். வைதிக பிராம்மணர் என்போர் பெரும்பாலும் வேதத்தின் கர்மகாண்டத்துக்கு அதிக முக்கியத்துவம் வழங்கினவர்கள். அவர்கள்தான் மீமாமம்ஸகர்கள் என்போர். இத்தகையோர் பட்டரை வெறுத்தனர். மீமாம்ஸத்திலேயே ஒருபகுதி நிரீச்வர வாதமாயும் அக்காலத்தில் இருந்தது. ஆகஇப்பாட்டில் வரும் வேறும் சமயம் உண்டு என்பதை முன்னடியில் சொன்ன சமயம் ஆறும் என்பன விட்டுவேறு சமயங்கள் என்று பொருள் கொண்டோம். சக்தியை ஒப்புக்கொள்ளும் சமயங்களேயன்றி கர்ம பட்டர்களாய் மீமாம்ஸை, நியாயம், வைசேடிகம், சாங்கியம் போன்றவைகளையே ஈண்டு வேறுசமயம் என்பதில் கொள்ள வேண்டும். என்பது நமதுதுணிபு சக்தியை மட்டும் கூறுவதாயிருந்தால் இந்நூலில் சிவபெருமானின் மனைவியென்றும் விஷ்ணுவின் தங்கை என்றும் கூறுவதோடு விநாயக வணக்கமும் கூறியிருக்கிறார். பட்டர் அறவே வெறுத்தது மீமாம்ஸத்தையே என்பது அவர் சரித்திரவரலாற்றில் அறியக்கிடக்கின்றது. அடுத்தபாட்டிலும் இதையே விவரிக்கின்றார்.

64 வது பாட்டு

## மற்றோர் தெய்வம் கனவிலும் நினையா (திருவாசகம்)

வீணே பலிகவர் தெய்வங்கள் பாற்சென்று மிக்கவன்பு
பூணேன் உனக்கன்பு பூண்டு கொண்டேன் நின்புகழ்ச்சியன்றிப்
பேணேன் ஒருபோதும் திருமேனிப்ர காசமன்றிக்
காணேன் இருநிலமும் திசைநான்கும் ககனமுமே

பதவுரை

**உனக்கு அன்பு பூண்டு கொண்டேன்:** உன்னிடத்து ஆராக் காதல் கொண்டமையால்

**வீணே:** வீணாக பயனில்லாமல்

**பலிகவர் தெய்வங்கள் பாற் சென்று:** ஹோமத்தீயில் ஆஹுதி என்றபெயரால் ஊனைப் பெய்து அதை ஏற்பதாகக் கருதப்படும் க்ஷுத்ர தெய்வங்களான இந்திரன், சோமன், அக்னி, வருணன் போன்றவர்களிடம் சென்று

**மிக்கஅன்பு பூணேன்:** அதிகமான பக்திவைத்து வணங்க மாட்டேன்

**உன்புகழ்ச்சியன்றிப் பேணேன்:** உனது கீர்த்தியைக் கூறும் தோத்திரங்களையன்றி வேறுசிறு தெய்வங்களின் தோத்திரங்களை விரும்பிப் போற்ற மாட்டேன்

**ஒரு பொழுதும்:** ஒரு போதும்

**உன் திருமேனிப்ரகாசமன்றி:** உன் திவ்ய தேஜோமயமான திருவுருவத்தையன்றி

**இருநிலமும், திசைநான்கும், ககனமுமே:** பெரிய பூவுலகத்திலும், நான்கு திசைகளிலும், ஆகாயத்திலும்

**காணேன்:** காணமாட்டேன்

பொழிப்புரை

உன் மீது அயரா அன்பு கொண்டு உபாஸிப்பதின் காரணத்தால் வேதத்தின் கர்மகாண்டத்தில் விதித்துள்ள யாகங்களைச் செய்து ஆஹுதி என்ற பெயரால் க்ஷுத்ரதேவதைகளான இந்திரன், சோமன், வருணன், முதலியவர்களுக்கு ஊன் சொரிந்து விளுக்கமாட்டேன். உன் ஸ்தோத்திரங்களையன்றி வேதத்தில் விதிக்கப்பட்டிருந்தாலும் ஏனைய தேவதைகளின் தோத்திரங்களை ஓதமாட்டேன். நிலத்திலும், திக்குகளிலும், ஆகாயத்திலும் நான் கண்டு தரிசிப்பது உன் பிரகாசம் பொருந்திய திருமேனியேயன்றி அந்தந்த இடங்களுக்கு அதிதேவதைகளாகக் கருதப்படுகிற நிருதி, யமன், இந்திரன் முதலிய திக்பாலகர்களையும் நான் பார்க்கமாட்டேன்.

விரிவுரை

ஊன்பலி கொள்ளும் தேவர் என்பது கிராம தேவதைகளாய்க் கருதப்படும் பிடாரி, இருளன், கருப்பணன் என்பவனற்றைக் கூறவில்லை. ஏனெனில் அந்தணராதலின் அத்தெய்வங்களுக்கு பலி கொடுத்து வணங்குவது குலாச்சாரமல்ல. ஆனல் வேதியர் குலத்திலே பிறந்து வாஜபேயயாகம் போன்ற யாகங்களில் ஓமகுண்டத்தில் ஊனைச் சொரிந்து ஆஹுதியிட்டு அதனுல் சமாதானம் அடைபவர்களாய்க் கருதப்படுன்ற க்ஷுத்ர தேவதைகளைக் கூறியதாகும். இவ்வகை யாகங்கள் பல வேதத்தின் கர்மகாண்டத்தில் கூறப்பட்டிருக்கின்றன. அவற்றையே மேற்கொண்டு அந்தணர் அக்காலத்தில் செய்து வந்த யாகங்களை ஆனுஷ்டித்த மீமாம்ஸகர்களையே இங்கு கூறியதாகக் கொள்ளல் வேண்டும். இதுவே பட்டரின் வாழ்க்கையோடும் தொடர்புடையது. உன் புகழ்ச்சியன்றிப்பேணேன் என்பதும், வேதத்தில் நவக்கிரஹங்களுக்கும், அஷ்ட திக்பாலகர்களுக்கும் கூறப்பட்டிருக்கும் மந்திரங்களையாகும். வேதத்திலேயே ஸ்ரீஸூக்தம், துர்க்காஸூக்தம், நீளாஸூக்தம் போன்றபகுதிகளும், தேவிஉபநிஷத்துகளும் இருக்கின்றன. அவையன்றி ஏனையவற்றை தியாஜ்யம் செய்வேன் என்கின்ருர். இவற்றில் ருத்ரம், சமகம், புருஷஸூக்தம், முதலியவைகள் சேரா. ஏனெனில் சிவனையும் விஷ்ணுவையும் இந்நூலில் சிறப்பித்திருப்பதால் என்றறிக. இப்பாட்டுக்கும் முந்திய பாட்டுக்கும் இருக்கும் இயைபு வெளிப்படை.

## 65 வது பாட்டு

## குஹஜன்மபூ : (606)

ககனமும் வானும் புவனமும்காண விறகாமனங்கம்
தகனமுன் செய்த தவப் பெருமாற்குத் தடக்கையும்
முகனும் முந்நான் கிருமூன்றெனத் தோன்றிய மூதறிவின்
மகனும் உண்டாயதன்றோ வல்லி நீ செய்த வல்லபமே.

### பதவுரை

வல்லி: கொடி போன்றவளே
ககனமும்: ஆகாயத்திலுள்ளவர்களும்
வானும்: விண்ணுலோரும்
புவனமும்: மண்ணுளோரும் யாவரும்
காண: பார்க்கும்படி
விற்காமன்: கரும்புவில்லைத் தாங்கிய மன்மதனது
அங்கம்: உடலை
தகனம் முன் செய்த: அக்காலத்தில் நெற்றிக் கண்ணுல் எரித்த
தவப்பெருமாற்கு: தக்ஷிணுமூர்த்தியாகி தவமியற்றிய ஜிதேந்திரியான சிவபெருமானுக்கு
தடக்கையும் செம்முகமும்: நீண்ட திருக் கரங்களும் சிவந்த முக மண்டலங்களும் (முறையே)
முன்நான்கு இரு மூன்றென: பன்னிரண்டும் ஆறுமாக
தோன்றிய: சிவகுமாரஞக (சரவணத்தில்) உதித்த
மூதறிவின் மகன்: ஞானமே உருவாகிய குமாரன் உண்டாயது ஆவிர்பவித்து
நீ செய்த வல்லபமே: உன்னுடைய பராக்கிரமம் மல்லவா

### பொழிப்புரை

அண்டத்திலுள்ளவரும், விண்ணுளோரும், மண்ணுளோரும் காணும் படி கரும்பு வில்லை ஏந்திய மன்மதனது உடலை நெற்றிக் கண்ணுல் எரித்த தவயோகிய சிவபெருமாற்கு பன்னிரண்டு திருக்கரங் களும் ஆறு திருமுகங்களும் பொருந்திய ஞானமே உருவான ஓர் மகன் தோன்றியது உன்னுடைய பராக்கிரமம்தான்,

## விரிவுரை

நெற்றிக்கண்ணிற் தோன்றிய அக்னியே மன்மதனை எரித்தது. அக்கண்ணில் தோன்றிய பொறிகளே முருகன் அவதாரத்துக்கும் காரணமாயிற்று. ஆக நெற்றிக்கண்ணுக்கு அழித்தல் சக்தியும், ஆக்கல் சக்தியும் உண்டு. நெற்றிக்கண்ணை ஞான சக்ஷுஸ் என்று வேதாகமங்கள் கூறும். ஞானமே காமத்தை எரித்தது. அந்த ஞானமே தனியுருக் கொண்டு முருகனாகவும் தோன்றியது தவப் பெருமான் என்பது ஜிதேந்திரியரான மேதா தக்ஷிணாமூர்த்தியை யோகி போகியானதை முன்பொரு பாட்டில் கூறினோம். வல்லி கொடி, அவள் கொடிபோல பரமசிவனாகிய கோவில் படர்ந்திருப்பதைக் குறிக்கின்றது. சக்தி பக்கத்திலில்லாத போது அழிமானமும் பக்கத்திலிருந்தபோது ஆக்கமும் ஏற்பட்டதை உன்னி நோக்குக. சக்தி அருள் சக்தியாதலின் எங்க. தவயோகி ஓர் பிள்ளைக்குத் தகப்பனானன் என்றதில் உள்ள நகைச்சுவை காண்க. முன் தகனம் செய்த என்றதால் முதலில் காமதகனமும் பின்பு குஹாவதாரமும் ஏற்பட்டதால் 'முன்' என்பதை முதலில் என்றும் கொள்ளலாம் தைத்ரீய உபநிஷத் பிரம்மானந்தவல்லி 7-வது அநுவாகம், "அஸத் வா இதமக்ர ஆஸீத்", என்று தொடங்குகின்றது. அதாவது முதன் முதலில் நாம ரூப விசேஷங்களால் விகாரப்படாத அவ்யக்தமாய் அஸத்தாய் பிரம்மம் இருந்தது. அதை இயக்கியது சக்தியே. அந்த அஸத்துக்கு நான் என்ற அறிவு ஏற்பட்டு ஸத்தானது.

---

## 66 வது பாட்டு

## நாமபாராயணப்ரீதா (732)

வல்லப மொன்றறியேன் சிறியேன் நின் மலரடிச்செம்
பல்லவ மல்லது பற்றொன்றிலேன் பசும் பொற் பொருப்பு
வில்லவர் தம்முடன் வீற்றிருப்பாய் வினையேன் தொடுத்த
சொல்லவமாயினும் நின்திரு நாமங்கள் தோத்திரமே.

### பதவுரை

பசும் பொற் பொருப்பு வில்லவர்: பசும் பொன்மயமான மேரு மலையை வில்லாக உடைய சிவபெருமான்
தம்முடன் வீற்றிருப்பாய்: அவருடன் அமர்ந்திருக்கும் அபிராமியம்மையே
வல்லபம் ஒன்றறியேன்: அற்றல் உனது யாதொன்றும் அறியாதவன்
சிறியேன்: மிகச்சிறியவன் ஆகிய நான் (ஆயினும்)
நின்மலரடிச்செம்பல்லவமல்லது: உன் செய்ய மலர் போன்ற திருபாதங்களின் இளந்தளிர்களையன்றி
பற்றொன்றிலென்: வேறு ஒன்றிலும் அடியேனுக்குப் பற்றுதல் கிடையாது (ஆகையால்)
வினையேன்: பூர்வ வினைகளினால் கட்டுப்பட்ட நான்
தொடுத்த சொல்: யாத்த இந்த அந்தாதிநூல்
அவமாயினும்: வீண் சொற்களே யாயினும்
நின்திரு நாமங்கள்: அதில் ஆங்காங்கு விளங்கும் உன்னுடைய திருநாமமாகிற மந்திரங்களை உடைமையால் (அந்நூல்)
தோத்திரமே: நினது புகழைக் கூறும் தோத்திரங்கள் ஆகும் (அது உன்னால் அங்கீகரிக்கக் கூடியதேயாகும்)

### பொழிப்புரை

பொன் நிறமான மேருவை வில்லாகக் கொண்ட சிவபெருமானின் பாகத்தில் எழுந்தருளியிருக்கும் அபிராமியம்மையே உன்னுடைய பிரபாவங்களை நான் ஏதொன்றும் அறியாத சிறியவன். ஆயினும் உன் மலர் பாதங்களின் இளம் தளிர்களன்றி

வேறொரு பற்றிலேன். ஆகையால் நான் யாத்த இந்த அந்தாதி வீண் சொற்களேயாயினும் அதில் ஆங்காங்கு மிளிரும் உனது திரு நாமங்களாகிய மந்திரங்கள் இருப்பதால் இந்நூல் உன் திருவடிக்குச் சாற்றத் தகுதியுடைய தோத்திரமாலையே யாகும்.

விரிவுரை

அம்பிகையின் நாமாக்களை அறியாமல் சொன்னாலும் விசேஷ பலனைக் கொடுக்கும் என்ற கருத்து இப்பாட்டில் வலியுறுத்தப் படுகின்றது. அம்பாளின் திருநாம மகிமையைப்பற்றி லலிதா ஸஹஸ்ரநாமத்திலும் திரிசதியிலும் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றது ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்தின் பூர்வ பாகத்தில் 41 முதல் 46 முடிய சுலோகங்களில் கூறியிருப்பதைப் பார்க்க. தேவியே கூறுவதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்ரீசக்கரத்தில் அர்ச்சித்தாலும், அர்ச்சிக்காமல் போனாலும், என்னுடைய பஞ்சதசாக்ஷரீமந்த்ரத்தை ஜபித்தாலும், ஜபிக்காமல் போனாலும் இந்த 1000 நாமங்களையும் எனது திருப்தியின் பொருட்டு பாராயணம் செய்ய வேண்டும் என்னுடைய திருப்தி ஏற்பட்டால் ஸர்வ அபீஷ்டங்களையும் அடைவான். இதில் சந்தேகமில்லை. லகுஸ்துதி என்ற சிறந்த சாக்த கிரந்தத்தில் 17-வது 18-வது சுலோகங்களில் அம்பாளின் நாமாக்களில் முக்கியமானவற்றைக் கூறிவிட்டு 19-வது சுலோகத்தில் பாராயணக் கிரமம் கூறப்பட்டிருக்கின்றது. நாம பாராயணம் என்பது ஷட்பாராயணம். அதாவது ஆறுவிதமான பாராயணம் என்றும் அது மிகவும் ரகஸியமானது என்றும் கூறப்பட்டிருக்கின்றது. ஈண்டுவிரிக்க இடமில்லை பொதுவாய் அம்பாளின் சொரூப லக்ஷணத்தை அறியாதவரும், ஸ்ரீசக்ரபூஜை செய்யாதவர்களும், ஸ்ரீவித்யா மந்திரத்தை குருமூலம் அடையாதவரும் கூட அம்பாளின் நாமாக்களைப் பாராயணம் பண்ணினாலே ஸகல காமனைகளும் பூர்த்தியாகி இறுதியில் முக்தியும் எய்துகின்றனர் என்பது சாக்த ஸித்தாந்தகருத்து. இதற்கு அதிகாரிபேதமும் கிடையாது. சக்திரஹஸ்யம் என்ற கிரந்தத்திலும் முறையில்லாமலோ அறைகுறை பக்தியாலோ ஸ்ரீ அம்பாளை அர்ச்சித்தால் அது அடுத்த ஜன்மாவில் முறையுடன் ஆராதிப்பதையும் பூரணபக்தியையும் அளித்துவிடும் என்று கூறப்பட்டுள்ளது.

## 67-வது பாட்டு

## ஸம்ஸ்ருதா சேஷ பாஷாண்டா

தோத்திரம் செய்து தொழுது மின்போலும் நின்தோற்றம் ஒரு மாத்திரைப் போது மனத்தில் வையாதவர் வண்மை குலம், கோத்திரம், கல்வி குணம் குன்றி நாளும் குடில்கள் தோறும் பாத்திரம் கொண்டு பலிக்குழலா நிற்பர் பாரெங்குமே.

### பதவுரை

மின்போலும் நின்தோற்றம்: மின்னல் கொடிபோன்ற நினது திருமேனித்தோற்றத்தை
ஒரு மாத்திரப்போது: ஒரு க்ஷணநேரமாவது
தோத்திரம் செய்து: வாயினால் துதி செய்து
தொழுது: உடம்பால் வணங்கி
மனதில் வையாதவர்: மனதில் தியானம் செய்யாதவர்
வண்மை: வள்ளல் தன்மை
குலம்: குடியின் மேன்மை
கோத்திரம்: வம்ஸத்தின் மேன்மை
கல்வி: தாம்கற்ற கல்வி அறிவு
குணம்: சீலம் ஆசாரம் முதலிய நற்குணம் இவை
குன்றி: குறைந்து
நாளும்: தினந்தோறும்
குடில்கள் தோறும்: வீடுகள் தோறும்
பாத்திரம் கொண்டு: பாத்திரத்தைத்தாங்கி
பலிக்கு: பிச்சைக்கு
உழலா நிற்பர்: திரிந்து வருந்துவர்

### பொழிப்புரை

மின்னல்கொடிபோன்ற பிரகாசமான உனது திருமேனியை ஒரு க்ஷணமாயினும் வாயால் துதித்து மெய்யால் வணங்கி மனதால் தியானம் செய்யாதவர்கள் தம்முடைய குலம், கோத்திரம் கல்வி குணம்யாவும் தேய்ந்து தினந்தோறும் பாத்திரத்தை எடுத்துக் கொண்டு வீடுகள் தோறும் திரிந்து பிச்சை கேட்டு உழலுவர்.

விரிவுரை

வேதநெறி கடைப்பிடிக்காதவரை பொதுவாக பாஷாண்டர்கள் என்று கூறுவர். நாஸ்திகர் என்றும் பெயர் சிறப்பாக ஈண்டு தேவியின் திருவடிகளை வாயால்பாடி மனதினுல் சிந்தித்து உடலால் வணங்காதவரைக் குறிக்கும். அவர்கள் நல்லகுடியில் பிறந்தும், கல்வி கற்றிருந்தும் இன்னும் மற்ற லௌகீக வசதிகள் உடையவராய்ப் பிறந்திருந்தாலும் தேவியை மனமெய்மொழிகளால் வணங்காதவர் தாம் பெற்ற பேற்றை யெல்லாம் இழந்து பிச்சை எடுத்துத்திரிந்து அல்லல்படுவர் என்பதாம் முந்தினபாட்டில் நாமபாராயண மகிமையைச் சொல்லி இப்பாட்டில் அதைச்செய்யாதவர் உறும் இன்னல்களைக் கூறுகின்ருர்.

---

68 வது பாட்டு

## ஸர்வாந்தர்யாமினி (819)

பாரும் புனலும் கனலும் வெங்காலும் படர் விசும்பும்
ஊரும் முருகு சுவைஒளிஊறொலி ஒன்றுபடச்
சேரும் தலைவி சிவகாமசுந்தரி சீரடிக்கே
சாரும் தவமுடையார் படையாத தனமில்லையே.

### பதவுரை

பாரும்: நிலமும் (பிரதிவி)
புனலும்: நீரும் (அப்பு)
கனலும்: நெருப்பும் (தேயு)
வெங்காலும்: வெப்பமான காற்றும் (வாயு)
படர்விசும்பும்: பரந்தவானும் (ஆகாசம்)
(இவைஐந்தனுள்முறையே)
ஊரும் முருகு: விரவியிருக்கின்ற கந்தமாயும்
சுவை: சுவையாயும் ரஸமாயும்
ஒளி: பிரகாசம் (ரூபம்)
ஊறு: பரசம் ஸ்பர்ஸம்
ஒலி: ஓசை சப்தம் என்று பஞ்சதன் மாத்ரைகளாய்
ஒன்றுபடச்சேரும்: இரண்டறக்கலந்து நிற்கும்
தலைவி: பரமேச்வரியாக
சிவகாமசுந்தரி: சிவகாமசுந்தரியின்
சீரடிக்கே: சிறந்த திருவடிகட்கே
சாரும்: சார்ந்து சரணடைந்த
தவமுடையார்: பெருந்தவசிலர்கள்
படையாத: அடையமுடியாத
தனம்வேறில்லையே: வேறு எந்த ஐச்வர்யமும் இல்லை.

### பொழிப்புரை

பிரதிவி, அப்பு, தேயு, ஆகாசம், என்னும் ஐம்பெரும் பூதங்களில் முறையே கந்தம் ரஸம் ரூபம் ஸ்பர்சம் சப்தம் என்ற தன் மாத்ரை ரூபமாய் இரண்டறக்கலந்து அந்தர்யாமியாக இருக்கும் சிவகாம சுந்தரியாகிய அபிராமி அம்மையின் சிறந்த திருவடிகளில் சரணடையும் பாக்கியம் பெற்ற தவசிலர்கள் அடைய முடியாத செல்வம் ஒன்றுமேயில்லை.

விரிவுரை

தன்மாத்திரைகளான காரணத்திலும் பூதங்களாகிற காரியத்திலும் கலந்திருப்பாள் என்பது பிறர் உரை, இது பொருந்தாது. காரியத்தில் விரவுவது காரணத்திலும் இருக்கவேண்டுமாதலால் ஸ்தூலமான பூதங்களில் சூக்ஷ்மமான தன்மாத்திரை சொரூபமாகவும் வியக்தமான பூதங்களில் அவ்யக்தமான தன்மாத்திரைகளாய் இருப்பதாகக் கொள்வதுதான் முறை இதை மாணிக்கவாசகப் பெருமான் போற்றித் திருவகவலில் 137-முதல் உள்ள வரிகளில் ''பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி'' என்ற வரிசையில் கூறியிருப்பதுவும் அப்பரடிகள் 4-ம் திருமுறை 64-ம் திருப்பதிகம் 6-ம் திருப்பாட்டில் கூறுவதும் காண்க. இதனைசுவேதாச் வரோபநிஷத் 6-ம் அத்தியாயம் 11 வது மந்திரத்தில் ''ஏகோ தேவ: ஸர்வபூதேஷு கூட ஸர்வவியாபி ஸர்வ பூதாந்தராத்மா'' எனக் கூறுவதும் காண்க.

---

69 வது பாட்டு

## ஸர்வார்த்த தாத்ரீ (698)

தனம்தரும் கல்விதரும் ஒரு நாளும் தளர் வறியா
மனந்தரும் தெய்வவடிவும் தரும் நெஞ்சில் வஞ்சமில்லா
இனந்தரும் நல்லன எல்லாம் தரும் அன்பர் என்பவர்க்கே
கனந்தரும் பூங்குழலாள் அபிராமி கடைக்கண்களே.

பதவுரை

கனந்தரும் பூங்குழலாள்: கருத்தும் அடர்ந்ததுமான வாசனை இயற்கையாகவே உடையகூந்தலையுடைய
அபிராமி கடைக்கண்கள்: அபிராமியம்மையின் கடைக்கண்கள்
அன்பர் என்பவருக்கே: தனது மெய்யடியார் என்று கூறப்படும் சாக்த உபாஸகர்களுக்கே
தனம் தரும்: செல்வங்களை நல்கும்
கல்விதரும்: சகலவித்தைகளையும் நல்கும்
ஒருநாளும் தளர்வறியாமனம்தரும்: எக்காலத்தும் தளராத மன உறுதியை நல்கும்
தெய்வவடிவம்தரும்: பிரகாசம் பொருந்திய திவ்ய அழகையும் தரும்
நெஞ்சில் வஞ்சமில்லா இனம் தரும்: வஞ்சகம் சூது கபடு மனதில் இல்லாத மனைவி மக்கள் போன்ற சுற்றத்தாரையும் நல்கும்
நல்லனவெல்லாம் தரும். மற்றும் எது எது நல்லனவாக இருக்குமோ அவையாவற்றையும் தரும்.

பொழிப்புரை

கரியமேகம் போன்ற அடர்ந்த கனத்த இயற்கையாகவே நறுமணம் கமழும் கூந்தலையுடைய அபிராமி அம்மையின் கடைக்கண்கள் தன்னைத்தியானம் செய்யும் மெய்யடியார்களுக்கு செல்வமும் கல்வியும் தளர்வில்லாத மன உறுதியையும், தேஜஸ்ஸையும், கபடு சூது மனதில் இல்லாத சுற்றத்தையும் இன்னும் வேறு நன்மைகள் பலவும் நல்கும் வல்லமையுடையன.

## விரிவுரை

மேலே 52 வது பாட்டில் இவ்வுலகில் ரத கஜ துரகபதாதியோடு வாழும் செல்வந்தர்களைக் கண்டால் அவர்கள் முன் ஜன்மத்தில் தேவியின் கடாக்ஷத்தைப் பெற்றவர் என்று அனுமானிக்கலாம் என்பதோடு இப்பாட்டை இயைத்துப் பார்க்கவேண்டும் ஏனெனில் ஒரு சில இடங்களில் சாக்தோபாஸகர்கள் வறுமை, பிணி இவற்றால் நைவதையும் பார்க்கலாம். ஆதலால் இந்த ஜன்மாவிலில்லாவிடினும் மறுஜன்மாவில் நிச்சயமாய் ராஜ்ய போகம் கிடைக்கும் என்பது துணிபு. தளர்வறியா மனம்தரும் என்பது, ஜீவர்களைப் பற்றியிருக்கும் தாபத்ரயங்களால் வருந்த நேரிட்டாலும் அம்பாளின் அடியார்களுக்கு மனத்தளர்ச்சியேற்பட்டது. தாபத்ரயாக்னி- ஸந்தப்த ஸமாஹ்லாதன- சந்திரிகா என்ற நாமா இதை விளக்குகின்றது. தரித்ராணும் சிந்தாமணி குணநிகா என்றும் ஜடானும் சைதன்யஸ் தபக மகரந்த ஸ்ருதீஜரீ என்றும் சங்கரரும் கூறியிருப்பது காண்க அதாவது ஏழைகளுக்கு நினைத்ததை அளிக்கக்கூடிய சிந்தாமணிக்கு கல்பக விருக்ஷத்தின் வியலாயும், அவிவேகிகளுக்கு பூங்கொத்திலிருந்து பரவிச்செல்லும் மகரந்தம் போன்றும் என்று பொருள் ஏகாரம் தோற்றம்.

———

70 வது பாட்டு

## மாதங்க கன்னி

கண்களிக்கும் படி கண்டு கொண்டேன் கடம் பாடவியில்
பண்களிக்கும் குரல் வீணையும் கையும் பயோதரமும்
மண்களிக்கும் பச்சை வண்ணமும் ஆகி மதங்கர் குலப்
பெண்களில் தோன்றிய எம்பெருமாட்டிதன் பேரழகே

### பதவுரை

கடம்பாடவியில்: கடம்பவிருக்ஷங்கள் நிறைந்த வனத்தில்
பண்களிக்கும் குரல் வீணையும்: இன்னிசையால் கனிந்த குரலோடு சேர்ந்து நாதம் உடைய கச்சபி என்ற வீணையும்.
கையும்: அதனை ஏந்தி வாசிக்கும் திருக்கரங்களும்
பயோதரமும்: ஸ்தன பாரங்களும்
மண்களிக்கும் பச்சை வண்ணமும்: மண்ணுலகத்தவர் கண்டு களிக்கும் பச்சை நிறமும்
மதங்கர்குலப் பெண்களில் தோன்றிய: மாதங்க முனிவரின் குலத்தில் உதித்த பெண்களில் ஒருவளாயும்
ஆகி: இம்மாதிரியான உருவம் கொண்டு
என்பெருமாட்டி தன்பேரழகே: சியாமளா தேவியாகிய என் அம்மையின் பேரழகை
கண்களிக்கும்படி கண்டு கொண்டேன்: என் கண்கள் கண்டு மகிழும்படி தரிசிக்கப் பெற்றேன்

### பொழிப்புரை

கடம்பவனத்தில் இன்னிசையால் கனிந்த குரலோடு சுதிலயமுடைய கச்சபி என்ற வீணையையும் அதனை ஏந்தி வாசித்துக் கொண்டிருக்கும் திருக்கரங்களும், அவ்வீணை ஊராயும் திருத்தனங்களும் மண்ணுளோர் கண்டுகளிக்கும் பச்சை நிறம் உடைய திருமேனியும், மதங்ககுலப்பெண் மணியானவளுமான சியாமளா தேவியை என்கண்கள் கண்டுகளிக்கும்படி கண்டுகொண்டேன்.

விரிவுரை

இப்பாட்டும் ஓர் உருவத்தியானத்தைக் கொடுக்கின்றது கையில் வீணையும் அது சாய்ந்து இருக்கும் குசபாரங்களும் மாதங்க முனிவரின் புத்திரியாயும்' சியாமள நிறமாயும் இருப்பதாக உருவ தியானம் கல்வியைக் கொடுக்கும் என்பது ஐதிஹ்யம் காளிதாஸனுடைய சியாமளாதண்டகமும் ஸ்ரீசங்கரருடைய ஸ்ரீசியாமளா நவரத்னமாலாவும் இந்த உருவத்தை வெகு அழகாக வர்ணிக்கின்றன "காளிதாஸனின் முதல் சுலோகம்" மாணிக்ய வீணாமுபலாலயந்தீம் மதாலஸாம் மஞ்ஜுல வாக்விலாஸாம் மாஹேந்த்ர நீலத்யதி கோமலாங்கீம் மாதங்க கன்யாம் ஸததம் ஸ்மராமி "என்றும் ஸ்ரீசங்கரரின் தியானசு லோகம்" ஸ்தனத்தில் சாய்ந்த வீணையுடையவளும் மதங்க குமாரியை வணங்குகிறேன் என்கின்றார். சங்கரரின் சியாமளா நவரத்னமாலா பாராயணம் செய்து மகிழத்தக்கது அதுபோன்றே சியாமளா தண்டகமும் சியாமளா தண்டகத்தில் சாக்தசித்தாந்திகள் மட்டும் அறியக் கூடிய பல மந்த்ர ஹஸ்யங்களும் உண்டு. வடமொழியில் இருப்பனவற்றை யெல்லாம் திரட்டி நான்கே வரியில் செந்தமிழ்பாட்டாக நமக்கு அளிக்கும் வன்மை அபிராமி பட்டருக்கே உண்டு என்பது போல இப்பாடல் ஓர் உருவத்தியான சுலோகமாய் அமைந்துள்ளது. கல்வியை விரும்புவோர் இதனை நித்யபாராயணமாகக் கொள்வது நலம்.

---

## 71 வது பாட்டு

## "கோமள சியாமளம்" (காளிதாஸன்)

அழகுக்கொருவரும் ஒவ்வாத வல்லி அருமறைகள்
பழகிச்சி வந்த பாதாம்புயத்தாள் பனிமாமதியின்
குழவித் திருமுடிக்கோமள யாமளைக் கொம்பிருக்க
இழவுற்று நின்ற நெஞ்சே, இரங்கேல் உனக்கென்குறையே!

### பதவுரை

இழவுற்று நின்ற நெஞ்சே: பிறவிப் பயனை இழந்து வருந்தி நின்ற என் மனமே!

அழகுக்கு ஒருவரும் ஒவ்வா வல்லி: அழகுக்கு வேறு எவரையும் உவமை சொல்ல முடியாதபடி பேரழகாய் இருக்கும் பூங்கொடி போன்ற அபிராமியாகிற சியாமளை

அருமறைகள் பழகிச்சிவந்தபாதாம் புயத்தாள்: அருமையான வேதங்கள் காற்சிலம்பு ரூபமாக அமைய அவற்றின் சேர்க்கையால் சிவந்துபோன தாமரை போன்ற திருப்பாதங் களையுடையவள்

பனிமாமதியின் குழவி: குளிந்த பெருமை பொருந்திய சந்திரனின் பிறையைச்சூடிய

திருமுடி: திருமுடியும்

கோமள: அழகும் இளமையும் கூடிய

சியாமளை: சியாமளா தேவியாகிய

கொம்பிருக்க: கட்டுத்தரிக்கொம்பு போன்ற பற்றுக்கோடு இருக்கும் போது

இரங்கேல்: வருந்தாதே

உனக்கு என்னகுறை! உனக்கு குறையாது நேர்ந்தது

### பொழிப்புரை

மானிட ஜன்மம் எடுத்த பயனை இழந்து வாடுகின்ற என்மனமே! அவளுக்கு அவளே நிகரான அழகையுடையவளும், அரிய வேதங்களாகிய சிலம்பு உராய்வதால் சிவந்த தாமரை போன்ற திருவடிகளையுடையவளும், குளிர்ந்த பெருமை வாய்ந்த சந்திரனின் பிறையைச் சூடியவளும், இளமையும் அழகும்வாய்ந்த சியாமளா தேவியே பற்றுக்கோடாக உனக்கு வாய்த்திருக்கும் போது உனக்கு என்னகுறைவந்தது வருந்தாதே.!

விரிவுரை

"கிம் நஃபித்த்யேத் வபு: சியாமளம் கோமளம் சந்த்ர சூடான் விதம்" என்ற காளிதாசன் வாக்கை அப்படியே பெயர்த்து வைத்திருக்கின்றார் ஆசிரியர், அருமறைகள் சிலம்பாயிருப்பது முந்தின 42 வது பாட்டில்"வேதப்பரி புரையே" என்றதில் காண்க இறைவனும் இறைவியும் வெவ்வேறல்லவாதலின் இறைவனுக்குக் கூறப்படும் முக்கண்ணும், சந்த்ரமௌளியும் அம்பாளுக்கும் உண்டு சாக்தாகமங்கள் வடமொழியிலேயே இருக்கும் குறையை அகற்றுவதற்காகவே அம்மையின் அருளால் இவ்வந்தாதி பிரபந்தம் அமைந்தது என்று சொல்லும்படி பாடல்கள் இருப்பதே இந் நூலின் சிறப்பு 70,71, பாடல்கள் இரண்டிலும் சியாமளா தேவியின் சிறப்புக்கூறப்பட்டது லலிதோபாக்யானத்தில் ஸர்வ சம்பத்தையும் விரும்புகின்றவர்கள் அம்பாளை சியாமளையாக தியானம் செய்யவேண்டும் என்று கூறப்பட்டிருக்கிறது சியாமளா தேவிக்கு என்றே தனியான தந்திர சாஸ்திரமும் ஒன்று இருக்கின்றது தேவியின் நானுவித ரூபபேதங்களில் சியாமளா ரூபம் அதிக மகிமையுடையதாகக்கருதப்படுகின்றது.

72 வது பாட்டு

## சப்ஸிதார்த்த ப்ரதாயினீ. ந். ச. 43

என்குறைதீர நின்றேத்துகின்றேன் இனியான்பிறக்கின்
நின்குறையே யன்றி யார்குறைகாண் இருநீள்விசும்பின்
மின்குறைகாட்டி மெலிகின்ற நேரிடைமெல்லியலாய்
தன்குறைதீர என்கோன் சடைமேல்வைத்த தாமரையே.

பதவுரை

நீள்விசும்பின்: பரந்து நீண்ட ஆகாயத்தில் தோன்றும்
மின்குறை காட்டி: மின்னல் கூட ஒளியாலும் உருவத்தாலும் தனக்குக்குறைந்ததே என்று காட்டும்படி
மெலிகின்ற நேரிடை மெல்லியலாய்: நுணிகிய இடையை யுடைய மென்மையே இயல்பாக உடைய அபிராமியம்மையே!
தனகுறைதீர: தனக்கு இறைவியின் ஊடலால் ஏற்பட்ட குறைதீர
என்கோன்: எம்பெருமானுகிய சிவபெருமான்
சடைமேல்வைத்த தாமரையே: தனது சடா மகுடத்தில் வைத்துக்கொண்ட திருவடித்தாமரையை
என் குறைதீர: இப்பிறவிப் பெருங்கடலில் பட்டுழலும் என்னுடைய குறைதீரும் வண்ணம்
நின்றேத்துகின்றேன்: நான் நிரந்தரமாகப் பரவிப் புகழ்ந்து துதிக்கின்றேன் (அதோடு என்கடமை முடிந்தது இனி)
இனியான் பிறக்கில்: எனக்கு ஏதாவது மறுபடியும் உலகத்தில் பிறக்கும் துர்பாக்கியம் ஏற்பட்டால் அது
நின்குறையே: உன்னுடைய கருணையின் குறையே யாகும்
அன்றியார் குறைகாண்!: அஃதன்றி வேறுயாருடையகுற்றம்? காண்: முன்னிலை அசை

பொழிப்புரை

பெரிய பரந்த ஆகாயத்தில் தோன்றும் மின்னலும் குறைபடும்படி (தோற்கும்படி) ஒளியிலும் உருவத்திலும் மிக நுண்ணிய இடையையுடைய மென்மையான திருமேனி பொருந்திய அபிராமியம்மையே என் இறைவன் உன்னுடைய ஊடலை நீக்கும்

பொருட்டுத் தன்தலைமீது வைத்துக்கொண்ட உனது தாமரை போன்று சிவந்த மென்மையான திருவடிகளை அடியேன் இப்பிறவி எடுத்து உழலும் குறைதீரும் பொருட்டு நிரந்தரமாக பரவிப் புகழ்ந்து துதிசெய்கின்றேன். அப்படியிருந்தும் எனக்கு இன்னு மொருபிறவி ஏற்படுமேல் அது உன்குற்றமேயன்றி வேறுஒருவர் குற்றமுமன்று.

விரிவுரை

அம்பிகையின் பாதத்தை இறைவன் தலையில் சூடிக்கொண்டது முந்தினபாடல்களிலும் கூறப்பட்டிருக்கிறது. அதற்கு உண்டான தத்துவவிளக்கமும் கூறப்பட்டது. 11 வது பாட்டின் விரிவுரை பார்க்க. அடியார் கடன்திருவடியை ஏத்துதல் அம்மையின் கடன் அடியாரின் பிறப்பறுத்து வீடளித்தல் இக்கருத்தை திருமுருகாற்றுப் படையில் ‘‘ஆர்வலர் ஏத்த அமர்ந்துஇனிது ஒழுகி காதலின் உவர்து வரம் கொடுத்தன்றே’’ என்றும் திருக்கருவைபதிற்று பத்தந்தாதியில் பண்டமாற்று முறையில் ‘‘சிந்தனை உனக்குத்தந் தேன் திருவருள் எனக்குத்தந்தாய். பைந்துணர் உனக்குத்தந் தேன் பரகெதி யெனக்குத்தந்தாய், என்றும் வருவதுகாண்க, அப்பரடிகளும் ‘‘ தன்கடன் அடியேனையும் தாங்குதல், என்கடன் பணிசெய்து கிடப்பதே’’ என்று கூறியிருப்பதும் ஒப்புநோக்கற் பாலது. ‘‘தன்குறைதீர எங்கோன் சடைமேல் வைத்த தாமரை என்பதற்கு ’’ இறைவன் ‘‘நான் பிரபஞ்சமாக விரிவேன்’’ என்று சங்கல்பித்தபோது அச்சங்கல்பம் நிறைவேற சக்தியை ஆச்ரயிக்கிறுர் என்றும் கூறஇடமுண்டு.

73 வது பாட்டு.

## ரஹோயாகக்ரமாராத்யா, ரஹஸ்தர் பணதர்பிதா (381)

தாமம்கடம்பு படை பஞ்சபாணம் தனுக்கரும்பு
யாமம் வயிரவர் ஏத்தும் பொழுது எமக்கென்று வைத்த
சேமத்திருவடி செங்கைகள் நான்கு ஒளிசெம்மை அம்மை
நாமம் திரிபுரை ஒன்றோடிரண்டு நயனங்களே.

பதவுரை

வயிரவர் ஏத்தும் பொழுது: பைரவர் வணங்கக் கூடிய
யாமம்: நள்ளிரவு நேரத்தில்
எமக்கென்றுவைத்த சேமநிதி: எம்போன்ற சாக்த உபாஸகர்களுக்காக சேமித்துவைத்த செல்வங்கள்
தாமம் கடம்பு: மாலை கடம்ப மலர் மாலை
படை: ஆயுதங்கள்
பஞ்சபாணம்: ஐந்து புஷ்பக்கணைகளும்
தனுக் கரும்பு: கரும்பு வில்லும்
திருவடி: திருவடியும். (அழகியஅடிகள்)
செங்கைகள் நான்கு: நான்கு திருக்கரங்கள்
ஒளி செம்மை: திருமேனியின் நிறம் செந்நிறம்
அம்மை நாமம் திரிபுரை: அம்மையின் நாமம் திரிபுரை என்பது
ஒன்றோடிரண்டு நயனங்களே: மூன்று கண்கள் இவையேயாம்.

பொழிப்புரை

ஆலயங்களில் பைரவர் பூஜை செய்யப்படும் நேரமாகிற நடுநிசி (அர்த்த ஜாமம்) யிலே எம்போன்ற உபாஸகர்களுக்கென வைத்த பொக்கிஷங்கள், திரிபுரை என்றபெயருடைய அம்மையின் மூன்று கண்களும், நான்கு கைகளும், செந்நிறமும், கடம்பமலர் மாலையும் ஐந்து புஷ்பபாணங்களும், கரும்பு வில்லும், அழகிய திருவடிகளுமேயாம்.

விரிவுரை

சாக்தோபாஸனை இரவில் யாரும் அறியாவண்ணம் ரகஸிய மாகச் செய்யப்பட வேண்டும் என்பதை "வயிரவர் ஏத்தும் பொழுது யாமம்" என்றார். அவ்வாறு உபாசிக்கின்றவர்கள் மனதில் ஆவாஹனம் செய்யவேண்டிய உருவமும் பெயரும் வரிசையாகவும் கொடுக்கின்றார். செந்நிறமேனியில் கடம்பமாலை அணிந்தவளாயும், நான்கு திருக்கரங்கள் உடையவளாயும், அவற்றில் இரண்டில் பஞ்சபுஷ்ப பாணங்களும், கருப்புவில்லும் ஏந்தியிருப்பதாயும், மூன்று கண்கள் உடையவளாயும் அழகிய திருவடி உடையவளுமான திரிபுரைஎன்ற தேவியை தியானம் செய்ய வேண்டும் என்கின்றார். இவ்வாறு ரஹஸ்யமாக நடுநிசியில் உபாசிக்கின்றவர்கள் காணும காட்சியும் இதுவே யாகும் என்பதை "எமக்கென்றுவைத்த சேமம்" என்பதாலும் குறிப்பிடுகின்றார். இப்பாட்டும் ஓர் உருவதியானத்தை உடையது. திரிபுரைஎன்பவள் ஸ்ரீசக்ரத்தில் பூபுரம் என்ற பாகத்தின் அதிஷ்டானதேவதை என்பது முன்பே கூறப்பட்டது. பூபுரத்தை மட்டும் கூறுவானேன் எனில் ஸ்ரீசக்ரபூஜையில் சிருஷ்டிக்கிரமம் என்றும் லயக்கிரமம் என்றும் இரண்டு வகை. சிருஷ்டிக்கிர மத்தில் உள்ளேயிருக்கும் பிந்துஸ்தானத்திலிருந்து வெளியே இருக்கும் பூபுரம்வரை வரிசையாக ஒவ்வொரு ஆவரணமாக பூஜை செய்வது. இதுவாமாச்சாரம். லயக்கிரமம் என்பது வெளியே பூபுரத்திலிருந்து உள்ளே பிந்துஸ்தானத்து ஒவ்வொரு ஆவரணமாக பூஜை செய்வது. இதுசமயாச்சாரம் என்பது. ஆசிரியர் (வாமாச்சாரத்தை மேற் கொண்டவராதலால் பூபுரத்தில் செய்யப்படும் பூஜையே பூஜையின் முடிவைக்காட்டும்) அதனால் திரிபுரை என்று கூறினர்.

74 வது பாட்டு

## சொர்க்க போகங்களையும் நல்குவாள்.

நயனங்கள் மூன்றுடை நாதனும், வேதமும், நாரணனும்
அயனும் பரவும் அபிராமவல்லி அடியிணையைப்
பயனென்று கொண்டவர் பாவையர் ஆடவும் பாடவும் பொன்
சயனம் பொருந்து தமனியக் காவினில் தங்குவரே.

பதவுரை

நயனங்கள் மூன்றுடைநாதனும்: முக்கண்ணனான சிவபெருமானும்
நாரணனும்: திருமாலும்
அயனும்: நான்முகனும்
வேதமும்: நான்குவேதங்களும்
பரவும்: புகழ்ந்து பாராட்டும்
அபிராமிவல்லி: அபிராமி தேவியின்
அடியிணை: திருவடிகளை
பயனென்று: பிறவிப் பயன் என்று
கொண்டவர்: மனதில் உறுதியாய்க் கொண்டவரானசாக்த உபாஸகர்கள்
பாவையர்: அரம்பை முதலிய தேவஸ்திரிகள்
ஆடவும் பாடவும்: ஆடிப்பாடி மகிழ்ச்சி ஊட்டவும்
பொன் சயனம் பொருந்து: பொன்னாலான மஞ்சத்தில் வீற்றிருந்து
தமனியக்காவினில்: பொன்மயமான கற்பகமரங்கள் அடர்ந்த சோலையில்
தங்குவரே: தங்கி இளைப்பாறுவரே.

பொழிப்புரை

சோமசூரிய அக்னிகளை நேத்ரங்களாக உடைய சிவபெருமானும், ஸ்ரீமந்நாராயணனும், பிரம்மனும். நான்கு வேதங்களும் பரவிப் புகழ்ந்து ஏத்தும் அபிராமவல்லியின் இணையடிகளே பிறவிப்பயன் என்று மனதில் உறுதியாய் எண்ணியிருக்கும் சாக்த உபாஸகர்கள் மறுமையில் சொர்க்கலோகம் சேர்ந்து கற்பகச்சோலையில் அரம்பையர் முதலிய தேவமகளிர் ஆடியும் பாடியும் மகிழ்விக்கப் பொன் மயமான மஞ்சத்தில் வீற்றிருந்து இளைப்பாறுவர்.

விரிவுரை.

இதில் கூறப்படும் பயனுக்கு சாதனையாக ஓர் உருவதியானம் 38 வது பாட்டில் கொடுக்கப்பட்டிருக்கிறது. அங்குகாண்க. ஓர் கோரியபலனை உத்தேசித்துச் செய்யப்படும் வழிபாடுஎன்க. சொர்க்காதி போகங்களும் உலக வாழ்க்கையைப் போன்று அநித்யமானதே. ஆயினும் சாதகர்கள் அதனைக்கோரினல் அதையும் அபிராமியே கொடுப்பாள் என்பது கருத்து. வேதத்தின் கர்மகாண்டத்தில் நூறுயாகம் செய்தவனே இந்திரப்பதவியை எய்துவான் என்று கூறப்பட்டிருக்கின்றது. இதைதிருமுருகாற்றுப் படையில் ''நூற்றுப்பத்து அடுக்கிய நாட்டத்து நூறுபல் வேள்வி முற்றிய —-- திருக்கிளர் செல்வன்'' என்பதனுல் அறியலாம். பொன் சயனம். இந்திரனின் அரசுக்கட்டில். சுதர்மை.

---

75 வது பாட்டு

3

## சொர்க்கமும் கொடுத்துப்பின் முக்தியும் அளிப்பாள்.

தங்குவர் கற்பக தாருவின் நீழலில் தாயரின்றி
மங்குவர் மண்ணில் வழுவாப் பிறவியை மால்வரையும்
பொங்குவர் ஆழியும் ஈரேழ் புவனமும் பூத்த வுந்திக்
கொங்கிவர் பூங்குழலாள் திருமேனி குறித்தவரே.

பதவுரை

மால் வரையும்; எட்டுதிக்குகளுக்கும் எல்லையாக வுள்ள அஷ்ட குலாசலங்களையும்
பொங்குஉவர் ஆழியும்: அலைகள் பொங்குகின்ற உப்புக்கடல் முதலாய ஏழு சமுத்திரங்களையும்
ஈரேழ் புவனமும்: மேல் லோகம் ஏழு கீழ்லோகம் ஏழு ஆகிய பதிநான்கு உலகங்களையும்
பூத்த உந்தி: ஈன்றெடுத்த வயிற்றையும்
கொங்கு இவர் பூங்குழலாள்: வாஸனை பொருந்திய பூக்களை யணிந்த கூந்தலையும் உடைய
திருமேனி: திவ்ய உருவத்தை
குறித்தவரே: மனதில் அனுசந்தானம் பண்ணி தியானிப்பவர்களே
கற்பக தாருவின் நீழலில் தங்குவர்: கற்பக விருக்ஷங்கள் அடர்ந்த தெய்வலோகத்தில் தங்குவர்.

(அதோடு)

மண்ணில்: உலகத்தில்
வழுவாப்பிறவியை: விடாமல் திரும்பத்திரும்பவரும் பிறவித்துன்பத்தை
தாயரின்றி: இனிமேல் ஓர் தாயார் இல்லாமல் (தாயார்வயிற்றில் பிறக்காமல்
மங்குவர்! மங்கும்படி செய்வர். (அதாவது தாயார் வயிற்றில் பிறப்பதை விட்டு நீங்குவர்)

பொழிப்புரை

எட்டுதிக்குகளுக்கும் எல்லையாக அமைந்த எட்டுகுல பர்வதங்களையும், அலைகள் பொங்கும் உப்புநீர் முதலிய ஏழு கடல்களையும், புவர்லோகம் முதலிய மேல் ஏழு லோகங்களையும், அதலம்

முதலியகீழ்ஏழ் உலகங்களையும், ஈன்றெடுத்த திருவயிற்றையும் வாசனை பொருந்திய பூக்களை அணிந்த கூந்தலையுமுடைய அபிராமி அம்மையின் திவ்ய உருவத்தை மனதில் ஆவாஹனம் பண்ணிதியானிக்கும் உபாஸகர்கள், முதலில் சொர்க்கலோகம் அடைந்து கற்பக விருக்ஷநிழலில் இன்புறத்தங்கி பின்பு தவருமல் திரும்பத் திரும்ப வரும் பிறப்பை மறுபடியும் ஓர் தாயார் உண்டென்று சொல்லாதபடி விட்டு நீங்குவர்.

## விரிவுரை.

மால்: எல்லை. எழுகடல், உவர் நீர், நன்னீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன் இவற்றை முறையே உடைய எழுகடல் என்னப்பட்டவை. அஷ்டகுலாசலங்கள். கைலை-இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி, கந்தமாதனம். மேலேழ் உலகம். பூலோகம், புவர்லோகம். சுவலோகம், ஜனலோகம், தபோலோகம், மஹாலோகம், சத்தியலோகம். கீழ்ஏழ்உலகம்: அதலம், விதலம், சுதலம், தாரதலம், மகாதலம், இரசாதலம், பாதாளம். "பூத்தவுந்தி என்பதை "ஜகஜ்ஜனநீ" என்ற நாமா குறிப்பிடுகின்றது. மலைகளையும் கடல்களையும் உலகங்களையும் சொன்னதால் சேதனம் அசேதனம் என்று இருவகைத் தோற்றங்களும் கூறப்பட்டன. சொர்க்கத்தையும் மோட்சத்தையும் அருளுவதை "ஸ்வர்க்கபவர்க்கதா" என்ற நாமா குறிப்பிடுகின்றது சொர்க்கம் என்ற விண்ணுலகத்தையும் அபவர்க்கம் என்ற மோக்ஷத்தையும் கொடுப்பவள் என்பது பொருள் அதாவது ஈன்ற தாயாராகையாலே தமது குழந்தைகளின் விருப்பத்தையும் வினைப்பயனையும், அதிகாரிபேதத்தையும் கருதி சொர்க்கத்தையோ மோக்ஷத்தையோ கொடுப்பாள் என்றும் கொள்ளலாம். பவநாசினி: பிறவியை அகற்றுபவள்.

76-வது பாட்டு.

## யமனையும் வென்றேன்,

குறித்தேன் மனத்தில் நின்கோலமெல்லாம் நின் குறிப்பறிந்து
மறித்தேன் மறலிவருகின்ற நேர்வழி வண்டுகிண்டி
வெறித்தேன் அவிழ்கொன்றை வேணிப்பிரான் ஒரு கூற்றை-
மெய்யில்
பறித்தே குடிபுகுதும் பஞ்சபாண பயிரவியே.

பதவுரை

வண்டுகிண்டி—தேனீக்கள் கிளருவதால்
வெறித்தேன்: மணம் பொருந்திய தேன்
அவிழ்: ஒழுகுகின்ற (மலர்ந்த)
கொன்றை வேணிப்பிரான்: கொன்றை மாலையை அணிந்த-
சடா மகுடம் உடைய சிவபெருமானது
ஒரு கூற்றை: ஒரு பாகத்தை (இங்கு இடப்பாகத்தை)
மெய்யில் பறித்து: உன் திருமேனியால் ஆக்ரமித்து
குடிபுகுதும்: அதில் உன் வாசஸ்தலத்தை ஏற்படுத்திக்கொண்ட
பஞ்சபாண பயிரவியே: ஐந்து மலரம்புகளை ஆயுதமாக
உடைய பைரவியாகின்ற அபிராமியே
நின் கோலமெல்லாம்: உன்னுடை திருமேனியின் பாதாதி
கேச அழகையெல்லாம்
மனத்தில் குறித்தேன்: மனதில் ஆவாஹனம் பண்ணி
ஏகாக்ரஹமாய் தியானித்தேன்
நின் குறிப்பறிந்து: (அவ்வாறு தியானித்ததின் காரணமாகி)
உன்தடஸ்த லக்ஷணத்தில் அடங்கியுள்ள
தத்துவங்களை நன்கறிந்து சொரூப
தியானத்தில் திளைத்து சமாதியடைந்ததால்
மறலிவருகின்ற நேர் வழி: யமன் வருகின்ற தங்கு
தடையில்லாத வழியை
மறித்தேன்: அடைத்து விட்டேன்.

பொழிப்புரை.

தேனீக்கள் கிளருவதால மணம் பொருந்தியதேன் ஒழுகும் மலர்ந்த கொன்றைமாலையில் சடையில் தரித்த சிவபெருமானின் இடது பாகத்தை ஆக்ரமித்துக்கொண்டு அதுவே உன்வாச

ஸ்தலமாக ஆக்கிக்கொண்ட பஞ்ச புஷ்பபாணங்களை கையில் கொண்ட பைரவி என்ற அபிராமி அம்மையே உனது திருமேனி யின் பாதாதிகேசம் முழுவதையும் என் மனதில் ஏகாக்ரமாகத் தியானித்தேன் அதன் பயனாக உன்னுடை தத்துவங்கள் அனைத் தையும் அறிந்து உன்னோடு தாதாம்மியமானேன் அதனால் யமன் வரும் தங்குதடையில்லாத மறிக்கமுடியாத வழியை அடைத்து விட்டேன்.

விரிவுரை

நின் குறிப்பறிந்து: உன்னுடைய தத்துவத்தை உணர்ந்து என்று பொருள் கொள்வது சாலநன்று சகுணோபாஸனையால் நிற்குணோபாஸனைக்குச் செல்வதுவே உருவத்தியானத்தின் லக்ஷியம். அதாவது உருவதியானம் சொரூபதியானத்தில் முடிய வேண்டும் என்பதுதான் குறிப்பு அல்லது லக்ஷியம் இவ்வாறு சொரூபதியானத்தில் இருப்பவர்களுக்கு யமபயம் கிடையாது. பைரவி, பைரவரான சிவபெருமானின் பத்தினி காலபைரவர் என்பவரே காலசம்ஹாரமூர்த்தி. திருக்கடவூரில் மார்க்கண்டன் வழி ட்டு யமனை வென்றான். அந்தக்கால ஸம்ஹாரமூர்த்தியின் பாநியான அபிராமியை பைரவி என்று கூறுவதால் அவளும் யமவாதனையைப் போக்க வல்லவள் என்று குறிப்பிடுகின்றார். மெய்யில் பறித்தே என்பதற்கு உண்மையிலேயே பறித்துக் கொண்டவள் என்றும் பொருள் கூறலாம் அதாவது இதுவெறும் புராணக்கூற்று மட்டுமல்ல தத்துவமே அதுதான் என்று பொருள்.

———

77-வது பாட்டு

## சக்திபேதங்கள் மற்றும் சில

பயிரவி பஞ்சமி பாசாங்குசை பஞ்சபாணி வஞ்சர்
உயிரவி உண்ணும் உயர்சண்டி காளி ஒளிருங்கலா
வயிரவி மண்டலி மாலினி சூலி வராகியென்றே
செயிரவி நான்மறைசேர் திருநாமங்கள் செப்புவரே

பதவுரை

பயிரவி: பன்னிரண்டு வயதுள்ள கன்யாரூபமாக இருப்பவள் (பைரவனின் பத்னி என்றுமாம்) (276)

பஞ்சமி: மனோன்மணி (948)

பாசாங்குசை: பாசத்தை அங்குசத்தையும் தாங்கியவள்

பஞ்சபாணி: ஐந்து (புஷ்ப) கணைகளையுடையவள்

வஞ்சர் உயிர் அவி உண்ணும்: வஞ்சகர்களாகிய அசுரர்களின் உயிரை பலியாக உண்ட

உயர்சண்டி: உயர்ந்த சண்டிகாதேவி

காளி: கரியவடிவினள் (751)

ஒளிரும் கலா வயிரவி: ஒளிவிட்டு பிரகாசிக்கின்ற கலைகளையே வயிர ஆபரணமாக உடையவள் (794)

மண்டலி: பாம்புருபமான குண்டலினி சக்தி (110)

மாலினி: அக்ஷரங்களை மாலையாக தரித்தவள் ஏழுவயது கன்னிகையாய் இருப்பவள் (455)

சூலி: சூலப்படையை உடையவள் (506)

வராகி: வராகிசக்தி என்று பதினொரு நாமங்களால்

செயிர் அவி: குற்றங்களைப் போக்குகின்ற

நான்மறை: நான்கு வேதங்களிலும்

சேர்: சேர்க்கப்பட்ட பிரஸ்தாபிக்கப்பட்ட

திருநாமங்கள் செப்புவரே: உனது உபாஸகர்கள் இந்த திருநாமங்களை சொல்லுவார்கள்

பொழிப்புரை

பயிரவி, பஞ்சமி, பாசாங்குசை, பஞ்சபாணி, அரக்கர்களை அளித்த சண்டி, காளி, கலைகளையே ஆபரணமாக உடையவள், குண்டலினி, அக்ஷரமாலை தரித்தவள், சூலாயுதப்படை உடையவள் வராகி என்று வேதங்களில் கூறப்பட்ட பதினொரு நாமங்களையும் உன்னடியார்கள் எப்பொழுதும் சொல்லிக்கொண்டிருப்பர்,

விரிவுரை

முந்தின 50-வது பாட்டில் 11 நாமாக்கள் கொடுத்தது நினைவிருக்கலாம் அந்த நாமாக்களில் சில இங்கு திரும்பவும் கூறப்படுகின்றது. அங்கு அபிராமி அம்மை 11 விதமான சக்திரூபமாக இருப்பதாய்க் கூறப்பட்டது. இங்கு 11 நாமாக்கள் கொடுக்கப்படுகின்றன. ஒவ்வொரு நாமாவின் விளக்கம் கூறுவாம். பயிரவி 12 வயதுள்ள கன்யாரூபமாய் இருப்பவள் என்று பொருள் (பயிரவர் பத்னி என்று சில உரையாசிரியர் கூறுகின்றனர்) பஞ்சமி, என்ற நாமாபல பொருள்களையுடையது. அவற்றில் ஒன்றைமட்டும் சொல்லுவோம். பஞ்சபிரம்மாக்களில் 5-வது சதா சிவர் அவருடைய சக்தி மனோன்மணி அவள் அருட் சக்தி மற்ற விவரங்களுக்கு ஸஹஸ்ரநாமத்தில் 948-வது நாமாவுக்கு பாஸ்கர ராயர் கொடுப்பதைப்பார்க்க, வஞ்சகர் உயிர் அவி உண்ணும் உயர் சண்டி தேவீபாகவத்தில் பிரஸ்தாபிக்கப்படும் பரதேவதை சண்டியே அவளே எல்லா சக்திகளின் சமஷ்டிரூபம் என்பது சாக்த சித்தாந்தம் அவள் அநாத்ம விருத்திகளான அசுரர்களைக் கொன்றவள் அவ்வரக்கர்கள் பெயர்களும் தேவீ மஹாத்மியம் என்ற சாக்தகிரந்தத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்றன பாசாங்குசை பஞ்சபாணி என்ற நாமாக்களுக்கு விளக்கம் முன்பே கொடுக்கப்பட்டிருப்பதால் இங்கு விடப்பட்டது ஒளிரும் கலாவயிரவி என்பது பஞ்சகலா சக்திகளைக்குறிக்கும் அவைகளின் விவரம் அபிதான சிந்தாமணியில் உள்ளது. அதோடு அறுபத்தி நாலுகலைகளையே மாலையாக தரித்தவள் என்பது 794-வது நாமாவுக்கு பாஸ்கரராயர் விளக்கம் அங்குபார்க்க. மண்டலி என்பது பாம்பு அந்தருபமாக இருப்பவள் குண்டலினீசக்தி நமது சரீரத்தில் இருக்கும் சக்தியின் வியஷ்டிரூபம் திருமூலர் திருமந்திரமும் மற்ற சாக்த நூல்களையும் பார்க்க மாலினி என்பதற்கு ஏழு வயது கன்னிகை என்று பொருள். அவளே பாலை

என்ற சக்தி பாலையை திரிபுரசுந்தரியின் மகளாகவும் சொல்லுவார்கள் அம்பாளுக்கு இவளே அங்கதேவதை என்றும் சொல்லப் பட்டிருக்கிறது. அல்லது ஐம்பத்தொரு அக்ஷரங்களையும் மாலையாக உடையவள் என்றும் கூறலாம். வராகி அஷ்டமாத்ருகா சக்திகளில் ஐந்தாவது இந்த அஷ்டமாத்ருகைகளும் ஸ்ரீ சக்கரத்தின் பூபரத்ரயத்தில் இரண்டாவது ரேகையில் இருப்பவர்கள். காளி என்றால் கருமை நிறமுடையவள் இவள் ஆவிர்பவத்தை தேவீ மஹாத்மியம் 5-வது அத்யாயம் 88-வது சுலோகம் வர்ணிக்கின்றது. சும்ப நிசும்பர்களைக் கொல்லபார்வதி தேவியினிடமிருந்து கருமை நிறத்தோடு தோன்றிய சக்தி சஹஸ்ரநாமாவில் 751-வது நாமாவுக்கு பாஸ்கரராயர் உரையும் பார்க்க. பதவுரையில் ஒவ்வொரு பெயருக்கும் கொடுத்திருக்கும் எண்கள் ஸஹஸ்ர நாம எண்கள்.

———

6

## 78 வது பாட்டு.

## ஸர்வ ஸௌந்தர்ய சோபிதா.

செப்பும் கனகக் கலசமும் போலும் திருமுலைமேல்
அப்பும் களப அபிராமவல்லி அணிதரளக்
கொப்பும் வயிரக்குழையும் விழியின் கொழுங்கடையும்
துப்பும் நிலவும் எழுதிவைத்தேன் என்துணைவிழிக்கே

### பதவுரை

செப்பும் : சிமிழும்

பொற்கலசமும் போலும் : தங்கக்கலசமும் போன்ற

திருமுலைமேல் : திருத்தனங்களின்மேல்

அப்பும் களப : அப்பியகலவைசந்தனத்தையுடைய

அபிராமவல்லி : அபிராமாம்பிகை.

அணி : அணிந்த

தரளக்கொப்பும் : முத்துக்காதணியும்

வயிரக்குழையும் : வைரத்தலானதோட்டையும்

விழியின் கொழுங்கடையும் : கண்களின்மதர்த்த பார்வையையும்

துப்பும் : பவளம் போன்ற இதழையும்

நிலவும் : வெண்ணிலவு போன்ற புன்னகையையும்

எழுதிவைத்தேன் : மனதிலே ஓவியமாகத்தீட்டி வைத்தேன்

என் துணைவிழிக்கே : என்மனக்கண்ணால் எப்பொழுதும்தரிசிக்கும் பொருட்டு.

### பொழிப்புரை.

கடைந்த சிமிழையும், தங்கக்கும்பத்தையும் நிகர்த்தஸ்தனபாரங்களிலே சாத்திய சந்தண கலவையையுடைய அபிராமவல்லியின் திருச்செவிகளில் அணிந்திருக்கும் முத்துதொங்கலுடைய கொப்பு என்ற காதணியும் வயிரத்தாலாகிய தோட்டையும் செவ்வரி படர்ந்த திருவிழிகளின் மதர்த்தநோக்கும் பவளம்போன்ற அதரங்களும், நிலவின் ஒளிபோன்று பிரகாசிக்கும் புன்முறுவலும் என் மனத்தில் ஓர் அரிய ஓவியமாகத்திட்டி வைத்தேன் எதற்கென்றால் எப்போது என்மனக்கண்ணில் கண்டுகளிப்பதற்காக.

விரிவுரை.

துணைவிழிக்கே என்பதை புறக்கண்களுக்குத் துணையான அகக் கண்ணேயே கூறியதாகும். கொழுங்கடை என்பதை "மதகூர்ணிதரக்தாக்ஷி" என்றும் சந்தணம் அணிந்திருப்பதை "சந்தணத்ரவதிக்தாங்கி" என்றும் அம்பாள் தோடு அணிந்திருப்பதை, "தாடங்கயுகளீபூததபனேடுபமண்டலா என்றும், சிவந்த அத்ரங்களை நவவித்ருமபிம்பஸ்ரீ நயக்காரிதசனச்சதா" என்றும் ஸஹஸ்ரநாமாவில் வர்ணித்திருப்பது காண்க. திண்டுக்கல்லில் வருஷம் தோறும் ஆடி, தை மாதங்களில் வரும் வெள்ளிக்கிழமைகளில் அபிராம்பாளுக்கு சந்தணக்காப்பு அலங்காரம் செய்யும் கோலத்தையே இப்பாட்டுச் சொல்வது போலவே அமைந்திருக்கின்றது. அம்பாளின் தோடுகள் சந்திரசூரியர்களேயாகும் அதனாலன்றோ அபிராமிபட்டருக்காகத் தனது தாடங்கம் (தோடு) ஒன்றை வானில் எறிந்து சந்திரனைக்காட்டினாள்?

7

79 வது பாட்டு.

## கருணைத் திறங்கண்டு கயவரை விலக்கல்

விழிக்கே அருளுண்ட பிராமவல்லிக்கு வேதஞ்சொன்ன
வழிக்கே வழிபட நெஞ்சுண்டு எமக்கவ்வழிகிடக்க
பழிக்கே சுழன்று வெம்பாவங்களே செய்து பாழ்நரகக்
குழிக்கே யழுந்தும் கயவர்தம் மோடென்ன கூட்டினியே

பதவுரை.

விழிக்கே அருளுண்டு : அபிராமியின் கண்களில் எனக்குவழங்க அருள் இருக்கின்றது

அபிராமவல்லிக்கு : அபிராமவல்லிக்கு

வேதஞ் சொன்னவழிக்கே : வேதம்கூறும் ஆகம மார்க்கத்திலே

வழிபட நெஞ்சுண்டு : பூஜைசெய்ய என் உறுதியான மனமும் இருக்கின்றது.

எமக்கு அவ்வழி கிடக்க : இந்தமாதிரியான மார்க்கம் எனக்குபரந்து கிடக்கவும்.

பழிக்கேசுழன்று : பழிக்கப்படும் காரியங்களில் அழுந்தி

வெம்பாவங்களே செய்து : கொடும்பாவங்களைச்செய்து

பாழ்நரகக்குழிக்கே : பாழும் நரகக்குழியில்

யழுந்தும் : வீழ்ந்து வருந்த இருக்கின்ற

கயவர்தம்மோடு : கீழ்கடையானமனிதர்களோடு

இனி என்னகூட்டு : நமக்கென்னசாகவாசம்.

பொழிப்புரை

நமக்கு அருள்புரிவதற்கு அபிராமிஅம்மையின் கடைக்கண் எப்பொழுதும் எதிர்நோக்கியிருக்கின்றன. அவ்வருளைப்பெறுவதற்கு வேதோக்தமான முறையில் அவளைவழிபட எனக்கு உறுதியான மனமும் இருக்கின்றது அவ்வாறுநேரானமார்க்கம் இருக்கபழிபடும் காரியங்களைச்செய்து கொடியபாவத்தை சம்பாதித்து அதனால் பாழும் நரகக்குழியில் விழஇருக்கும் கீழ்க்கடைமக்களோடு நமக்கென்னசாகவாசம்!

விரிவுரை

இப்பாடல் ஆசிரியரின் வரலாற்றில் தொடர்புடையது. இப்பாட்டுப்பாடினதும் தான் அம்பாள்தன் தாடங்கத்தைக்கழற்றி ஆகாயவீதியில் எறிந்து அமாவாசையை பௌர்ணமியாகயாவரும் வியக்கும் வண்ணம் செய்தாளாம் இப்பாட்டோடு முன்புசொன்ன 3வது பாட்டில்வரும் "நின்அன்பர்பெருமை யெண்ணுதகரும்நெஞ்சால் மறிந்தேவிழு நரகுக்குறவாயமனிதரையே"என்பதை ஒப்பிடுக. கிடக்க என்ற சொல்லின் நயம் காண்க அகண்டுபரந்து விரிந்து கிடக்க என்று பொருள் தொனிக்கின்றது தாயுமானுரும் பொங்கித்ததும்பி பூரணமாய்க் கிடக்குதையோ என்றார். வேதஞ் சொன்ன வழிக்கே வழிபட என்பதின் கருத்து சிந்திக்கத்தக்கது. ஏனைய வைதீக அந்தணர்கள் சக்தி உபாஸனையை வேதபாஹ்யம் என்று கருதினராதலின் அரசனிடம் இவரைப்பற்றி கோள்மூட்டினர். அதை மறுக்கும் முறையில் சாக்தம் வேதங்களில் ஒப்புக் கொள்ளப்பட்ட வைதீக சமயங்களில் ஒன்று என்பதும் அவ்வழிபாடும் வேதத்துக்கு உடன்பாடே என்பது வலியுறுத்துவது காண்க. ஏனைய பிராம்மணர்கள் வேதம் என்ற பெயரால் மீமாம்ஸத்தைத் தழுவி வெறும் கர்மடர்களாய் யாகயஞ்ஞாதிகளின் பெயரால் உயிர்பலி கொடுத்தும் இருந்தவராதலின் அவர்கள் பழிக்கே சுழன்று வெம்பாவங்களே செய்து என்று கூறுகின்றார். வாஜபேயம் முதலியயாகங்களில் ஆடு முதலிய உயிர் பிராணிகளைக்கொன்று அவி இடுவது வழக்கம். இது வேதத்தின் கர்மகாண்டத்தில் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றது.

---

80 வது பாட்டு

## அம்பாளின் கருணையில் விளைந்த வியப்பு.

கூட்டியவா என்னைத்தன்னடியாரிற் கொடியவினை
ஓட்டியவா என்கண் ஓடியவா தன்னை உள்ளவண்ணம்
காட்டியவா கண்டகண்ணும் மனமும்களிக்கின்றவா
ஆட்டியவா நடம் ஆடகத்தாமரை ஆரணங்கே.

பதவுரை

ஆடகத்தாமரை ஆரணங்கே : பொற்றாமரை மலரில் வீற்றிருக்கும் பெண்தெய்வமான அபிராமியம்மையே

என்னைத்தன்னடியாரில் கூட்டியவா : அடியேனையும் பொருட்படுத்தி தனது மெய்யடியார்களோடுசேர்த்து வைத்தவாறும்

கொடியவினை ஓட்டியவா : எனக்கு வரஇருந்தகொடிய வினையை போக்கினவாறும்

என்கண் ஓடியவா : என்னை நாடிவிரைந்து வந்தருளியவாறும்

தன்னை உள்ளவண்ணம் காட்டியவா : தன்னுடைய உண்மை சொருபமான அருள்வடிவத்தைக்காட்டியருளியவாறும்

கண்டகண்ணும் மனமும் களிக்கின்றவா : இந்த அற்புதக்காட்சியைக்கண்ட கண்ணும் அதை அநுபவித்த என்மனமும் மகிழ்கின்றவாறும்

நடம் ஆட்டியவா : என்னைவியாஜமாகவைத்துக்கொண்டு இவ்வாறு ஓர் அரியநாடகத்தை ஆடிக்காட்டியவாறும் என்னவியப்பு!

பொழிப்புரை.

பொற்றாமரையில் வீற்றிருந்தருளும் அபிராமி அம்மையே என்னையும் பொருட்படுத்தி உன்மெய்யாடியாரோடு இணங்கச் செய்ததுவும், எனக்குவர இருந்த பேராபத்தை ஓட்டியருளியதும்,

என்னையும் நாடிவிரைந்து வந்தருளியதும், தன்னுடைய உண்மை சொரூபமான கருணைவடிவத்தைக் காட்டியருளியதும், இந்த அற்புதத்தைக் கண்டஎன்கண்ணும் அதை அநுபவித்த என்மனமும் மகிழ்ச்சியில் மூழ்கியதும் என்னை ஓர் வியாஜமாகவைத்துக் கொண்டு இந்தவியக்கத்தக்க நாடகத்தை நடித்தருளியதும் ஆச்சரியமல்லவா.

விரிவுரை

தேவியானவள் தன்தாடங்கத்தை பௌர்ணமி நிலவாகக் காட்டிதனக்கு வரஇருந்த அரசதண்டனையை நிவர்த்தி செய்ததையும் தன்னை ஆட்கொண்டதையும் தன் பொருட்டு இந்த அற்புதத்தை உலகு அறிய செய்து காட்டியதும் அதனுல் தான் அடைந்த அதிசயானந்தத்தை வியந்து பாடியது இப்பாடல். ஆசிரியரின் வாழ்க்கையோடு இதைசம்பந்தப்படுத்தாமலே உரை கூறுவாருமுளர் ஆடகம் பொன் ஆரணங்குதிவ்ய உருவம் கொண்ட அபிராமியம்மை.

———————

## 81 வது பாட்டு

அணங்கே! அணங்குகள் நின்பரிவாரங்கள் ஆகையினால்
வணங்கேன் ஒருவரை வாழ்த்துகிலேன் நெஞ்சில் வஞ்சகரோடு
இணங்கேன் எனதுனதென்றிருப்பார் சிலர் யாவரொடும்
பிணங்கேன் அறிவொன்றிலேன் என்கண்நீவைத்த பேரளியே.

### பதவுரை

அணங்கே: அபிராமியம்மையே!
அணங்குகள் நின்பரிவாரங்கள் : பெண்தெய்வங்கள் உன் பரிவாக யோகினிகள்
ஆகையினால்: அவர்களின்துணை எனக்கு இருக்கும் காரணத்தால்
ஒருவரை வாழ்த்து கிலேன் வணங்கேன்: எவரையும் நான் துதி செய்துவணங்கமாட்டேன்
நெஞ்சில் வஞ்சகரொடு: மனத்தில் சூதுஉடையவர் களோடு
இணங்கேன்: கூட்டுறவு வைத்துக் கொள்ள மாட்டேன்
சிலர்: சிலமஹான்கள்
எனது உனது என்றிருப்பார் :தம்உடமை நின்னுடையதே என்று இருப்பார்கள்
யாவரோடும்: அத்தகைய ஞானிகள் யாவரொடும்
பிணங்கேன் :விரோதித்துக் கொள்ளமாட்டேன்
அறிவொன்றிலேன்: புற அறிவு சிறிதும் இல்லாதவனாகி விட்டேன் (இவையாவும்)
என்கண் :என்பால்
நீவைத்த பேரளியே :நீவைத்த பெருங்கருணையே!

### பொழிப்புரை

அபிராமியம்மையே பலசக்திகள் உனது பரிவார தேவதைகளாக இருக்கும் காரணத்தால் நான்யாரையும் வாழ்த்தி வணங்க வேண்டிய அவசியமேயில்லை, மனதில் வஞ்சகம் சூது உடையவரோடு கூட்டுறவு கொள்ளேன், தமது உடமை யெல்லாம் நின்னுடையதே என்று ஆத்ம சமர்ப்பணம் பண்ணின மெய்ஞ் ஞானிகளோடு விரோதித்துக் கொள்ளமாட்டேன், எனக்கு லௌகீக அறிவே அகன்று விட்டது, எல்லாம் உன் என்பால்வைத்த கருணையின் பலனேயாகும்.

விரிவுரை

அணங்குகள் பரிவார தேவதைகளானதால் அவர்களை வணங்கேன் என்று பொருள் கொள்கின்றனர் சிலர், இவர்களுக்கு சக்தி வழிபாடு அறவே தெரியாது என்றுதான் கொள்ள வேண்டும். "நான் சிவனைவணங்குகின்றேன் ஆகையால் அவருடைய பரிவார தேவதைகளான நந்திகேச்வரரையும் சண்டேச்வரரையும் வணங்க மாட்டேன்" என்று சைவசித்தாந்திகள் கூற முன் வருவார்களா! அதுபோல்தான் இருக்கிறது அவர்கள் உரையும், ஸ்ரீசக்கர நவாவரணபூஜையில் அம்பாளின் பரிவாரதேவதைகளாக (1) பிரகடயோகினிகள் 28, குப்தயோகினிகள் 16 குப்ததர யோகினிகள் 8, சம்பிரதாயயோகினிகள் 14, குளோத்தீரண யோகினிகள் 10, நிகர்பயோகினிகள் 10, ரஹஸ்ய யோகினிகள் 8, அதிரஹஸ்ய யோகினிகள் 3, நித்யா தேவதைகள் 15, ஆயுத தேவதைகள் 4, ஆக மொத்தம் 11[illegible], பரிவார தேவதைகளுக்கும் பத்ததிப்படி பூஜை செய்த பின்பே அம்பாளை பிந்துஸ்தானத்தில் பராபரரஹஸ்ய யோகினியாக வழிபடவேண்டும், இவைதவிர குருமண்டலத்தில் மானவ, சித்த, திவ்ய என்று மூன்று வகையில் 18 குருமார்களையும் அங்கதேவதைகள் 6ம் வழிபடவேண்டும், இவ்வளவும் நவாவரண பூஜையின் அங்கங்கள், அவ்வாறிருக்க ஓர்சாக்தர் பரிவார தேவதைகளை வணங்கேன் என்று பொருள் கொள்வது எவ்வளவு பொருத்த மற்றது என்பதை அவர்களேதான் உணரவேண்டும். இந்தபரிவார தேவதைகளின் பூஜையினால் சாதகன் அடையும் மேன்மையான நிலையில் அவன்யாரையும் வணங்கான், அம்மட்டுமின்றி ஓர் உண்மை சாக்தன் பிறரை வணங்கினால் வணங்கப்படுகிறவர்களுக்குக்கேடு உண்டாகும் என்பதும் சித்தாந்தம். இங்கு ஆசிரியரின் வாழ்க்கை வரலாற்றில் மன்னன் சரபோஜியை வணங்காமைக்குக்காரணம் கூறும் முகத்தால் எனக்கு அம்பிகையின் பரிவார தேவதைகளின் துணையிருக்கின்றது ஆகையால் நான் யாரையும் வணங்கேன் என்றுதான் பொருள் கொள்ளவேண்டும். "எனதுனதென்றிருப்பார் சிலர்" என்பதற்கு அஹங்காரமமகாரங்களையுடையவர் சிலர் என்றும் பொருள் கொண்டனர். அவர்கள் உண்மையில் சிலரல்லவே பலரல்லவா! தன் உடைமையனைத்தும் அம்பாளிடம் சமர்ப்பணம் பண்ணிசுதந்தரஹீனர்களாய் பிரபத்தி பண்ணும் சிலர்களையேகுறிக்கும். அறிவொன்றிலேன் என்பதையும் தன்னை அறிவில்லாதவன் என்று தன்னடக்கமாகப் பொருள் கொள்வதை விட அபரஞானம் நீங்கி பரஞானம் பெற்றவர் என்று பொருளில் உரை கூறினோம், இதை அடுத்த பாட்டில் விரிப்பது காண்க.

## 82 வது பாட்டு

## விச்வரூபதரிசனம்

அளியார் கமலத்திலாரணங்கே யகிலாண்டமும் நின்
ஒளியாக நின்ற் வொளிர் திருமேனியையுள்ளு தொறும்
களியாகி யந்தக்கரணங்கள் விம்மிக் கரை புரண்டு
வெளியாய் விடினெங்ஙனே மறப்பேனின் விரகினையே

### பதவுரை

அளியார்: வண்டுகள் மொய்க்கும்
கமலத்திலாரணங்கே: தாமரையில் வீற்றிருக்கும் அபிராமி அம்மையே
அகில அண்டமும்: சகல அண்டங்கள் அனைத்தும்
நின் ஒளியாக நின்ற: உனது தேஜஸ்ஸாகவேஇருக்கும்
ஒளித்திருமேனியை: உனது தேஜோமயமான திருமேனியை
யுள்ளு தொறும்: மனதில் அனுசந்தானம் செய்யும் போதெல்லாம்
களியாகி: பேரானந்தத்தையடைந்து
அந்தக்கரணங்கள் விம்மி: மனம், புத்தி, சித்தம் என்ற உட்கருவிகள்யாவும் பூரித்து
கரை புரண்டு: தத்துவ மாகிற கரைகளை உடைத்துக் கொண்டு அப்பால் சென்று
வெளியாய் விடின்: குணம் குறி காலம், நாமம், ரூபம் முதலிய அற்ற பரவெளியாகி விட்டால்
நின் விரகினை: உன்சாமர்த்தியத்தை
எங்ஙனே மறப்பேன்: எவ்வாறு மறக்க முடியும்

### பொழிப்புரை

வண்டுகள் மொய்க்கும் கமலத்தில் வீற்றிருப்பவளாகிய அபிராமிஅம்மையே அகில அண்டங்களும் உன் ஒளியால் நிறப்பப்பட்ட உன் பேரொளி உருவத்தை நான் மனதில் அனுபவிக்கும் போதெல்லாம், நான் பேரானந்தத்தில் மூழ்கி, என் அந்தக்கரணங்கள் பூரித்து தத்துவங்களை யெல்லாம் கடந்து நாம ரூபரஹிதமான பெருவெளியில் கலந்து விட்டதால் உன் சாமர்த்தியத்தை நான் எவ்வாறு மறக்க முடியும்,

விரிவுரை

முந்தினபாட்டில் தன்புறஅறிவு நீங்கினதைக் கூறிஇப்பாட்டில் உள்ளறிவு முற்றி பரஞ்ஞானத்தால் அண்டம் முழுதும் அவளாகவே பார்த்து அந்த அனுபவத்தில் திளைத்துத் தானும் தத்துவம்கடந்து பரவெளியில் தாதாம்யம் அடைந்த ஜீவன் முக்தி நிலையைக்கூறுகின்றார் அண்டமெல்லாம் அவள்வொளியால் நிறப்புகிறாள் என்பதை சஹஸ்ரநாமத்தில்' நிஜாருணா- ப்ரபா- பூர-மஜ்ஜத்- ப்ரஹ்மாண்ட- மண்டலா' என்ற 12 வது நாமா கூறுகின்றது. விரகு என்பதை வழி- உபாயம் என்று பொருள் கொள்ளுகின்றனர். விரகு என்பதற்கு சாமர்த்தியம், புத்தி என்ற பொருள்களுமுண்டு. 'தமிழ்விரகர்'' என்பதை பார்க்க, இங்கு அம்பாள் தன்னையே அண்டமெல்லாம் விரிந்து ஒளிவடிவாகி இருக்கும் விச்வரூபத்தையே விரகு அல்லது சாமர்த்தியம் என்கின்றார், இவ்வாறு அம்பிகையின் விச்வரூபத்தை தரிசித்ததோடல்லாமல் தன்னுடைய கருவிகரணங்கள் ஒடுங்கி ஆனந்த எல்லையில்தான் அவளோடு தாதாம்மியம் ஆன சாதாக்கிய, நிலையையும் கூறுகின்றார், முன்பே சைவசித்தாந்தசாதாக்யத்துக்கும் சாக்த சித்தாந்தசாதாக்கியத்துக்குமுள்ள வித்தியாசத்தைக் கூறினேம், கண்டு தெளிக, கமலம் இங்கு ஆதார கமலங்களும் ஸஹஸ்ராரமுமாம், சுந்தரர் தில்லையில் இந்த நிலையில் இருந்ததாக சேக்கிழார் பெருமான் கூறுவது நினைவு கூர்க.

(ஐந்து பேரறிவுங்கண்களே கொள்ள) என்ற பாட்டின் அடிகளைசிந்திக்க.

———

83 வது பாட்டு

## இறைவியின் வழிபாடு இந்திர பதவி அளிக்கும்

விரவும் புதுமலரிட்டு நின் பாத விரைக்கமலம்
இரவும் பகலும் இறைஞ்சவல்லார் இமையோர் எவரும்
பரவும் பதமும், அயிரா வதமும் பகிரதியும்
உரவும் குலிசமும் கற்பகக்காவும் உடையவரே.

பதவுரை.

புதுமலர்: அன்றலர்ந்த பூக்கள்

விரவு: கலந்தவைாக

இட்டு: அர்ச்சித்து

நின்: உன்னுடைய

பாத விரைக்கமலம்: மணம் பொருந்திய தாமரையாகிய உன் திருப்பாதத்தை

இரவும் பகலும்: இரவிலும் பகலிலும்

இறைஞ்சவல்லார்: வழிபட வல்லவர்கள்

இமையோர் எவரும்: தேவர்கள் யாவரும்

பரவும் பதவும்: புகழ்கின்ற பதவியையும்

அயிராவதமும்: வெள்ளையானையையும்

பகிரதியும்: ஆகாய கங்கையையும்

உரவும் குலிசமும்: வலிமையுடைய வஜ்ஜிராயுதப்படையும்

கற்பகக்காவும்: கற்பகச்சோலையையும்

உடையவரே: இவற்றை உடைய இந்திரரேயாவர்.

பொழிப்புரை

பலநிறமும் பலவண்ணமும் கலந்த அன்று அலர்ந்த புஷ்பங்களால் உனது மணம் பொருந்திய திருவடித்தாமரையை இரவும் பகலும் வழிபட வல்லவர்களுக்கு தேவர்கள் புகழ்கின்ற பதவியும், ஐராவதம் என்ற நான்கு கொம்புகளுள்ள வெள்ளையானையும், ஆகாயகங்கையும், வலிமை பொருந்திய வச்சிராயுதமும், தமக்கே உரிமையாக உடைய இந்திரரே யாவர்.

விரிவுரை

முந்தின 38 வது பாட்டில் அமராவதியை ஆளவேண்டுமானல் அபிராமியை பணியுங்கள் என்றும் 74 வது பாட்டில் பாவையர் ஆடவும் பாடவும் பொன்சயனம் பொருந்து தமனியக்காவினில் தங்குவரே என்று கூறிய ஆசிரியார் மூன்ரும்முறையாக இந்திர பதவி கிடைக்கும் என்று வற்புறுத்துகிருர் 38 வது பாட்டில் அம்பாளின் தியானத்துக்கு ஓர் உருவம் அமைத்துக்காட்டினுர். 74 வது பாட்டில் அபிராமி அடியிணைப்பயனென்று கொண்டவர் என்று அம்பிகையின் அடிகளேயேபற்றுக்கோடாகக் கொண்டவர் என்ருர் இப்பாட்டில் புதுமலரிட்டு அர்ச்சிப்பவர் என்ருர். அகையால் அம்பாளின் குறிப்பிட்ட உருவத்தியானத்தால் வரும் பயன், அவள் திருவடிகளேதஞ்சம் என்றிருப்பார் அடையும் பயன், அவள்பாதங்களில் மலரிட்டு வழிபடுவார் பயன் என்றவிதமாக மூன்றுவிதமான அதிகாரியும் மூன்று விதமான சாதனையும் கூறுவதால் சொன்னதையே சொன்ன தோஷம் ஏற்படவில்லை. விரவும் புதுமலர். புதுமை விரவும்மலர் என்றும் கொள்ளலாம். விரவுதல் கலித்தல், பொருந்துதல், அடைதல். அல்லது நறுமணம் விரவும் என்றும் எழுவாய் வருவித்தும் பொருள் கொள்ளலாம் இரவும் பகலும் என்றது இரண்டு காலத்திலும் என்றே எல்லாக்காலத்திலும் என்றே பொருள் கொள்ளஇயலும்

———

## 84 வது பாட்டு

## முக்திக்கு உபாயம் கூறுதல்

உடையானை ஒல்கு செம்பட்டுடையானை ஒளிர் மதிச்செஞ்
சடையானை வஞ்சகர் நெஞ்சடையானைத் தயங்குநுண்ணூல்
இடையானை எங்கள் பெம்மான் இடையானை
இங்கென்னையினிப்
படையானை உங்களையும் படையாவண்ணம் பார்த்திருமே.

### பதவுரை

உடையானை : (பிரபஞ்சமனைத்தையும் தன்னதாக) உடையவனை (or) அடியேனை தம்மவனாக உடையவனை

செம்பட்டு ஒல்கு உடையானை : சிவந்தநிறப்பட்டுமேலே அணிந்துடையானை or துவளுகின்ற செம்பட்டை உடையாகக் கொண்டவனை

ஒளிர்மதிச்செஞ்சடையானை : பிரகாசிக்கின்ற சந்திரனை தமது செம்மையான கூந்தலில் தரித்தவனும்

வஞ்சகர் நெஞ்சடையானை : கபடு உள்ள மனதையுடையவர்களை அணுகாதவனை

தயங்கு நுண் நூல் இடையானை : பிரகாசிக்கின்ற நுண்ணிய நூல் போன்ற இடையை உடையவனை

எங்கள் பெருமான் : எமது தலைவராகிய சிவபெருமானுடைய

இடையானை : இடப்பக்கத்தில் இருப்பவனை

இங்கு என்னை இனிப் படையானை : இவ்வுலகில் என்னை இனிமேல் பிறக்கச்செய்யாதவனை

உங்களையும் இனிப்படையா வண்ணம் : நீங்களும் இனிமேல் உலகில்பிறக்காமல் இருக்க

பார்த்திருமே : இந்தரூபத்தில் தியானம் செய்யுங்கள்

### பொழிப்புரை

அண்டங்கள் அனைத்தையும் தனது உடமையாகக் கொண்டவனை இடையில் துவளுகின்ற சிவந்தபட்டை ஆடையாக உடையவனை, செம்மையான (அழகான) தமது முடியில் சந்திரனை தரித்த

வளே, வஞ்சகம் நிறைந்த மனதுடையதுஷ்டர்களே அணுகாதவளே, பிரகாசிக்கின்ற நுண்ணிய நூல் போன்ற இடையை உடையவளே, எமது தலைவராகிய —— சிவபெருமானின் இடது பக்கத்தில் இருப்பவளே இனிமேல் அடியேன் இவ்வுலகில் பிறவா வண்ணம் செய்தவளே நீங்களும் இனிமேல் பிறக்காமல் இருப்பதற்கு இவ்வுருவில் தியானம் செய்யுங்கள்.

விரிவுரை

அம்பாளுக்கு (முக்திதாயினீ) என்ற பெயர் உண்டு (736) முந்தின பாட்டில் காம்யஉபாஸகர்களுக்கு இந்திர பதவிகிடைக்கும் என்பதைக்கூறி இந்த அடுத்தபாட்டில் இனிப்பிறவாமை அளிப்பாள் என்பதால் நிஷ்காம்ய உபாஸகர் களுக்குப் பிறவியில்லை என்றும் முந்தியபாட்டில் பிரஸ்தாபித்த இந்திரபதவியும் அநித்தியமானது என்றும் கூறுகிறுர். செஞ்சடையாளே என்பதை சிவந்த கேசபாரத்தையுடையவள் என்று கருதக்கூடாது. செம்மையான, அழகான, என்ற பொருள்களில் கொள்ளவேண்டும். உடையாளே என்பதற்கு கேவல நிலையில் ஆன்மாக்களேத் தம்முள் வைத்திருப்பாளே என்று பொருள் கொள்வது சாலச்சிறந்து. சகல நிலையில் ஆளுடையாள் என்றும் சுத்த நிலையில் பெருமாட்டி என்றும் மூவகையாகக்கூறப்படும். ஒல்குதல் என்பதற்கு மேலேபடுதல் என்ற பொருளும் உண்டு இடை நுண்ணியதாய் இருப்பதால் அதன் மீது உடுத்தியிருக்கும் ஆடையையும் ஒல்குதல் அல்லது நுடங்குதல் என்ற பொருள் கொள்ளினும் அமையும் என்றும் நுடங்கும் இடைஎன்ப தளர்தல் என்ற பொருளும் உண்டு. அருணருண கௌஸும்ப- வஸ்த்ர-பாஸ்வத்-கடிதடி என்ற 37 வது நாமாவில் சிவப்புப் பட்டாடையால் பிரகாசிக்கின்ற இடையை உடையவள் என்று வர்ணிக்கப்பட்டிருப்பதை ஈண்டு எடுத்து கையாளுகிறுர். சிவப்புப் பட்டாடை உடுத்தியவளாயும், முடியில் சந்திரனேச் சூடியவளாயும், நுண்ணிய இடைஉடையவளாயும், பரமசிவனின் இடப்பக்கத்தில் இருப்பவளாயும் தியானித்தால் முக்திகிட்டும் என்று ஓர் தியான உருவம் கொடுத்திருப்பதுகாண்க.

85 வது பாட்டு

## நான் எங்கும் காணுவது அவளையே

பார்க்கும் திசைதொறும் பாசாங்குசமும் பனிச்சிறை வண்டு
ஆர்க்கும் புதுமலர் ஐந்தும் கரும்பும் என் அல்லலெல்லாம்
தீர்க்கும் திருபுரையாள் திருமேனியும் சிற்றிடையும்
வார்க்குங்கும முலையும் முலைமேல் முத்து மாலையுமே

பதவுரை

பார்க்கும் திசை தொறும்: நான் எத்திசை நோக்கினும் (எனக்குத்தோற்ற மளிப்பது)
பாசாங்குசமும்: பின்இரண்டு கைகளில் தாங்கிய பாசமும் அங்குசமும் (முன் கைகளில் தங்கும்)
பனிச்சிறை வண்டு: குளிர்ந்த சிறகுகளையுடைய வண்டுகள்
ஆர்க்கும்: சப்திக்கின்ற
புதுமலர் ஐந்தும்: அன்று அலர்ந்த புஷ்பங்களான கணைகளும்
கரும்பும்: கருப்புவில்லும்
என் அல்லலெல்லாம்: என்னுடைய துன்பங்களை யெல்லாம்
தீர்க்கும்: துடைக்கும்
திருபுரையாள்: திருபுரசுந்தரியின்
திருமேனியும்: அழகிய மேனியும்
சிற்றிடையும்: சிறிய இடுப்பும்
வார் குங்கும முலையும்: வார் (கச்சை) யணிந்த குங்குமக்குழம்பு பூசிய ஸ்தனங்களும்
முலைமேல்: அம்முலைகளின் மீது அணிந்த
முத்து மாலையுமே: முத்தாலாகிய மாலையுமே

பொழிப்புரை

அடியேன் எத்திசை நோக்கினும் என்முன் நின்றருள்வது திருபுரசுந்தரி தன்பின் இருகரங்களில் தாங்கியிருக்கும் பாசாங்குசமும், முன்கைகளில் தாங்கிய வண்டுகள் சப்திக்கின்ற அன்றலர்ந்த புஷ்பங்களாலான கணைகளும், கரும்பு வில்லும், அம்பாளின் வார் அணிந்தகுங்குமக்குழம்பு அப்பிய திருதனங்களும், அவைமேல் விளங்கும் முத்துமாலையுமே

விரிவுரை

இப்பாட்டு ஸ்ரீசங்கரரின் ஸௌந்தர்ய லஹரியின் 7வது சுலோகத்தை நினைவூட்டிகின்றது அங்கு அம்பாளை இப்படியே வர்ணித்திருப்பதோடு இந்தரூபமே தன்முன் தோன்ற வேண்டுமென்று பிரார்த்திக்கிறார் நம்தமிழ் நாட்டிலுள்ள ஸ்தலங்களிலே காஞ்சீபுரம் ஒன்றில் மட்டுமே இந்தரூபத்தோடு காமாக்ஷியம்மை அமர்ந்திருக்கிறாள். அம்பாளின் அருள் பெற்ற சாதகர் எங்குபார்த்தாலும், எதைப்பார்த்தாலும் அம்பாளாகவே பார்ப்பர் என்பதற்கு இது எடுத்துக்காட்டு. பகவத்கீதை 6ம் அத்தியாயம் 30 வது சுலோகத்தில் பகவான் அர்ச்சுனருக்குச் சொன்னதாக எவன் எங்கும் என்னையேகாண்கின்றானோ, எல்லாப்பொருள்களையும் என்னிடத்தே காண்கின்றானோ அவனுக்கு நான் அழியமாட்டேன் எனக்கு அவன் அழியமாட்டான் என்று காணப்படுகின்றது அம்பிகையே ஜகத்திலுள்ள சகல நாமரூபபேதங்களிலும் அந்தர்யாமியாக இருக்கிறாள், அண்டம் முழுவதும் அவளுடையசரீரம் என்று அனுபவபூர்வமாக அறிந்தவனே இத்தகைய காட்சியைக்காணமுடியும் அவனே ஜீவன் முக்தன் ஜிதேந்திரியன் என்பதுகருத்து. முந்தினபாட்டில் கூறப்பட்ட முக்திநிலைக்கு சாதனமான உருவத்யானம் இப்பாட்டில் அதனால் அடைந்த காட்சியைக்கூறுகின்றது. அபிராமியே திரிபுரசுந்தரி என்பதை இரண்டாம்பாட்டிலேயே கூறிவிட்டார். திருக்கடவூரில் எழுந்தருளியிருக்கும் அபிராமிஅம்மையின் திருவுருவில் பாசாங்குசமும், கரும்புவில்லும் புஷ்பபாணமும் இல்லையாயினும் இந்நூலாசிரியர் தனது பாவனாத்ராட்யத்தால் அபிராமியை திரிபுரசுந்தரியாக ஆலயத்தில் தரிசித்த தோடல்லாமல் பார்க்குமிடமெங்கும் அவளையே பார்க்கிறார் இதை உருவெளித்தோற்றம் என்பர் உரையாசிரியர்கள். அல்ல ஆழ்ந்தஅனுபவமுதிர்ச்சியில் காணும் காட்சி அவருடைய அகக்கண்ணுக்கு மட்டுமேயன்றி புறக்கண்களிலும் கூடக்கண்டிருக்கலாம் அவ்வாறு காணவும் முடியும்.

86-வது பாட்டு

## யமபடர் எனதுயிர் கொளவரின் என்முன் வருக.

மாலயன் தேட மறை தேட வானவர் தேட நின்ற
காலையும் சூடகக் கையையுங் கொண்டு கதித்த கப்பு
வேலை வெங்காலன் என்மேல் விடும்போது வெளிநில்
கண்டாய்
பாலையும் தேனையும் பாகையும் போலும் பணிமொழியே.

பதவுரை

பாலையும்: (உடலுக்கு உணவாகும்) பாலையும்
தேனையும்: (இருதயத்துக்கு உறுதி தரும்) தேனையும்
பாகையும்: (நாவினுக்கு ருசி தரும்) வெல்லப் பாகையும்
போலும் ஒத்த
பணி மொழியே இனிமையான சொல்லையுடைய
அபிராமியம்மையே
கதித்த: மேலோங்கிய
கப்பு வேல்: திரிசூலப்படையை
வெங்காலன் கொடிய யமன்
என் மேல் விடும்போது: அடியேன் மீது ஏவும் போது
மாலயன் தேட: பிரம்மன், திருமால் இருவரும் தேடிக் காணாத
மறை தேட: வேதங்களும் தேடிக் காணாத
வானவர் தேட: விண்ணவர்களும் தேடிக்காணாத
நின்ற காலையும்: அமைந்த திருபாதங்களையும்
சூடகக் கையுங் கொண்டு: வளையல்கள் அணிந்த
திருக்கரங்களையும் கொண்டு
வெளிநில் கண்டாய்: என்முன் தோன்றும்படி
வெளிவந்து நிற்க வேண்டும்.

பொழிப்புரை

பால், தேன், பாகு இவற்றை ஒத்த இனிய மொழியை யுடைய அபிராமி அம்மையே கொடியகாலன் தன்னுடைய மேலோங்கிய திரிசூலப்படையை அடியேன் மீது ஏவும்பொழுது பிரம்மனும், திருமாலும், வேதங்களும் விண்ணவரும் தேடியும் காணாத நின் திருப்பாதங்களையும் வளையல்கள் அணிந்த நின் திருக் கரங்களையும் கொண்டு என்முன் வெளிப்பட வேண்டும்.

விரிவுரை

"இறுகிய சிறுபிறை யெயிறுடை யமபடர் எனதுயிர் கொள வரின் யானேங்குதல் கண்டெதிர் தா னென்று கொளுங்குயில் என்ற அருணகிரியார் திருவாக்கு இங்கு ஒப்பு நோக்கற்பாலது. தேடி என்றதால் தேடினர்களே ஒழியக் காணவில்லை என்பது குறிப்பு. அவர்களுக்கு ஒளித்திருந்த திருப்பாதத்தையும் திருக்கரங்களையும் எனக்கு வெளிப்படையாய்க்காட்ட வேண்டும் என்ற நயம் கருதத்தக்கது. அடியார்கள் காணும்படியான எளிமையையும் தேவர்களும் காணாத வல்லபத்தையும் காட்டுகின்றது. மார்க்கண்டருக்காக யமனை உதைத்த க்ஷேத்ரமாதலாலும் காலஸம்ஹாரமூர்த்தியின் பாதியாயும் இருக்கும் என்னம்மை அவர் மார்க்கண்டனுக்குச் செய்ததுபோல உன் காலால் யமனை உதைத்துத் திருக்கரங்களால் அணைத்துக்கொள்ள வேண்டும் என்கின்றார்.

87-வது பாட்டு

## சொரூபத்தில் அவ்யக்த யாயினும் அடியார்க்கு வியக்தமே.

மொழிக்கும் நினைவுக்கு மெட்டாத நின்திருமூர்த்த மென்றன்
விழிக்கும் வினைக்கும் வெளிநின்றதால் விழியால் மதனை
அழிக்கும் தலைவர் அழியா விரதத்தை அண்டமெல்லாம்
பழிக்கும் படி ஒருபாகங் கொண்டாளும் பராபரையே

பதவுரை

விழியால்: நெற்றிக் கண்ணால்
மதனை: மன்மதனை
அழிக்கும்: எரித்துச் சாம்பலாக்கிய
தலைவர்: சிவபெருமான் மேற்கொண்ட
அழியாத: என்றும் கெடாத யோக நியமத்தை
அண்டமெல்லாம் பழிக்கும்படி: உலகங்கள் எல்லாம் பழிக்கும்படி
ஒருபாகம் கொண்டு: அவரது இடப்பாகத்தை ஆக்ரமித்து
ஆளும்: அவரை ஆளுகின்ற
பரா பரையே: பரையாயும் அபரையாயும் பராபரையாயும் இருக்கும் அபிராமியம்மையே
மொழிக்கும்: வாக்குக்கும்
நினைவுக்கும்: மனதிற்கும்
எட்டாத: எட்ட முடியாத
நின் மூர்த்தம்: உன்னுடைய அப்ராக்ருதமான திருவடிவம்
என்றன் விழிக்கும்: என் கண்ணுக்கும்
(என்) வினைக்கும்: என்னால் செய்யப்படும் பூஜோபாஸனைகளுக்கும் (இரங்கி)
நின்றது: வெளிப்பட்டு நின்றது
ஆல் அசை: ஆச்சரியக் குறிப்பென்றும் கொள்க

பொழிப்புரை

நெற்றிக் கண்ணால் காமனை எரித்த சிவபெருமானது அழிவில்லாத யோக நியதியை உலகெலாம் பழிக்கும்படி குலைத்து அவருடைய இடது பாகத்தை ஆக்ரமித்து யோகியை போகியாக்கி யாளும் பராபரையே, வாக்குக்கும் மனதிற்கும் எட்டாத உன் அப்ராக்ருத திருவுருவம் என்னுடைய பூஜோபாஸனைக்கு இரங்கி என் கண்ணில் படும்படி வெளித்தோன்றியது வியப்பே!

விரிவுரை

அழியா விரதம்: யோக நிலையில் பிரம்மச்சர்ய விரதத்தை மேற்கொண்ட தக்ஷிணமூர்த்தி: அழியா என்றதால் கல்யாணமாகியும் பிரம்மச்சாரி என்றபடி. அம்மை அவனுடம்பில் பாதியைக் கொண்டபோதிலும் அவன் இன்னும் பிரம்மச்சாரியே என்பதைக் காட்டியது "பவன் பிரமசாரியாகும் பான் மொழி கன்னியாகும் (சித்தியார்) மொழிக்கும் நினைவிக்குமெட்டாத என்பது சுருதி வாக்கு "யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மனஸாஸஹ, (தைத்திரீய உபநிஷத்) "மனோவாசாம கோசரா" ஸஹஸ்ர நாமம் (415) பராபரா என்பதை விளக்கவேண்டும். இது ஸஹஸ்ர நாமாவில் 790-வது நாமா இதற்கு உரையெழுதிய பாஸ்கரராயர் 14 பொருள் கொடுத்திருக்கிறார். ஈண்டு இரண்டை மட்டும் இடவசதியை முன்னிட்டுக் கொடுப்போம் (1) பரம் என்றால் பிரம்ஹத்திற்குப் பிந்தியதானது அதாவது ப்ரம்ஹத்தின் விசேஷணம். அதுதான் சக்தி. அபரம் முந்தியது அதாவது விசேஷ்யமானது அதுதான் சிவம் பராபரம் என்பது இவ்விருவருடைய சாமரஸ்ய ரூபம். அதாவது சக்தியோடு கூடிய சிவஸ்வரூபம் இருவரும் தனித் தனியே பிரியாமல் அர்த்தநாரியாக இருக்கும் அவசரம் (2) அம்பாளுடைய பூஜையும் பராபூஜை, அபரா பூஜை, பராபரா பூஜை என்று மூன்று விதம். பரா பூஜையானது அத்வைத பாவத்தோடு ஸோஹம் பாவனையில் பூஜிப்பது அபர பூஜை என்பது ஸ்ரீசக்கர பூஜை, பராபர பூஜை என்பது அம்பாளுடைய நாநாவித மூர்த்திகளை பூஜிப்பது மற்ற விவரங்களுக்கு பாஸ்கரராயர் பாஷ்யம் பார்க்க. சொரூபத்தில் அவ்யக்தமாய் இருப்பது சாக்தசாதகர்களுக்கு வியக்தமாய் வெளிப்படுவதை இப்பாட்டு நிரூபணம் செய்கின்றது. பராபரபூஜையில் அர்ச்சா வதாரமாய் விக்ரஹரூபமாய் ஆலயங்களில் பிரதிஷ்டிக்கப் பட்டிருக்கும் திருவடிவம் யாவரும் கண்டுகளிக்கும்படியாயிருந் தாலும் அது மனம் வாக்குக் கெட்டாத பரம்பொருளின் வியக்த (வெளிப்படையான) உருவமே என்பதை அறிய வேண்டும் ஈண்டு திருக்கடவூர் அபிராமியின் திருவுருவத்தையே இவ்வாறு கூறினதாகக்கூறலாம். மேலும் பரமாயும் அபரமாயும் இருப்பவள் என்ற பொருளைக் கொண்டால் சொரூபலக்ஷணத்தில் அபரையாயும் தடஸ்த லக்ஷணத்தில் பரையாவும் இருப்பவள் என்றும் கொள்ள இடமுண்டு. இதைப்பற்றி மேலும் எழுதினால் நீண்டு விடுமென்று இத்துடன் நிறுத்திக் கொள்வோம்.

---

## 88 வது பாட்டு

## என்னைத்தள்ளத்தகாது.

பரமென்றுனையடைந்தேன் தமியேனு முன் பத்தருக்குள்.
தரமன்று இவனென்று தள்ளத்தகாது; தரியலர்தம்
புரமன்றெரியப் பொருப்பு வில்வாங்கிய போதிலயன்
சிரமொன்று செற்ற கையான் இடப்பாகம் சிறந்தவளே.

பதவுரை

தரியலர் தம்: பகைவர்களுடைய
புரம் அன்று எரிய: முப்புரங்களும் எரிந்து போம்படி
பொருப்புவில்: மலையாகிய வில்லை
வாங்கிய: நாணேற்றி வளைத்தும்
போதிலயன்: தாமரையில் வீற்றிருக்கும் பிரம்மனின்
சிரமொன்று செற்ற: தலைகளில் ஒன்றைக்கிள்ளியதும்
கையான்: (அத்தகைய) கையை உடையவனான சிவபெருமானின்
இடப்பாகம்: இடது பக்கத்தில்
சிறந்தவளே: எழுந்தருளி சிறப்புற்றவளே
அடியேனும்: உன் அடிமை யாகிய நானும்
பரமென்று உன்னையடைந்தேன்: நீயே யாவற்றிற்கும் அப்பால் பட்ட பரப்ரம்ஹம் என்று உன்னை உபாஸித்தேன்.
பத்தருக்குள்: உன்னுடைய சிறந்த உபாஸகருக்குள்
தரமன்று இவன் என்று: வைக்கத்தகுதியற்றவன் இவன் என்று கருதி
தள்ளத்தகாது: தள்ளி விடுவது உன் கருணைக்குப் பொருத்த மல்லாதாகும்.

பொழிப்புரை

பகைவர்களான திரிபுரா சூரரை அழிப்பதற்கு மேருவை வில்லாக வளைத்த கையையுடையவனும் பிரம்மனின் சிரம் ஒன்றைக் கொய்த கையையுடையவனுமான சிவபெருமானின் இடது பாகத்தில் சிறப்பாக அமர்ந்த அபிராமி அம்மையே அடியேன் உன்னை பரப்பிரம்ஹ சொரூபிணியாகவே மதித்து உபாஸித்து வந்தேன். இவன் நம் அடியாருள் ஒருவனாக இருக்கத்தகுதி யற்றவன் என்று கருதி என்னைத்தள்ளிவிடுவது உன் பெருங்கருணைக்குத்தகாததாம்.

விரிவுரை

ஆன்மாவுக்குப் பகைவர்களான மும்மலங்களின் உருவகமான முப்புர அசுரர்களை அழித்ததுமன்றி, பிரம்மனுயினும் சரி ஆணவம் கூடாது என்ற கருணையோடு அவன் தலையும் கிள்ளினதால் சிவனுடைய திருக்கரங்களின் சிறப்புக் கூறப்பட்டது. 'பரமென்று' என் உபாஸனை காம்யமானதல்ல. நீயே யாவற்றிற்கும் ஆதியாயும் அந்தமாயும் இருக்கும் பரப்ரம்ஹம் என்று உபாஸித்தேன் என்கிற அருமை சிந்திக்கத்தக்கது. அடுத்த 89 வது பாட்டில் பிரம்ஹத்தோடு ஐக்கியமாகின்ற ஸாதாக்ய நிலையும் கூறப்படுகின்றது.

———

89-வது பாட்டு

## சாதாக்கிய நிலையில் இருவரும் காட்சி தரல்வேண்டும்

சிறக்கும் கமலத்திருவே! நின்சேவடி சென்னிவைக்கத்
துறக்கம் தருநின் துணையரும் நீயும் துரிய மற்ற
உறக்கம் தரவந் துடம்போடுயிருற வற்றறிவு
மறக்கும் பொழுது என்முன்னே வரல்வேண்டும் வருந்தியுமே

பதவுரை

சிறக்கும் கமலத்திருவே! சிறப்பான; ஸஹஸ்ரார கமலத்தில் வீற்றிருக்கும் செல்வமே!
துறக்கம் தருநின் துணைவரும் நீயும்: விண்ணுலக பதவியைத் தரவல்ல உனது கணவனுரான சிவபெருமானும் நீயும்
உடம்போடு உயிர் உறவு அற்று: உயிருக்கும் உடலுக்கும் உள்ள சம்பந்தம் அறுந்து
துரிபமற்ற உறக்கம்தர: சுழுத்தி அவத்தையிலேயிருந்து துரியமும் கடந்து துரியாதீத நிலை எய்து
அறிவு மறக்கும்பொழுது: எனது அறிவு புறப்பற்று அகப்பற்று நீங்கி தற்போதம் இழக்கும் சமாதி நிலையிலே
நின் சேவடி சென்னிவைக்க: உனது திருப்பாதங்களை என் சென்னிமிசை சூட்ட
வருந்தியுமே: திருவடி வருந்தினுலும் பொருட்ப்படுத்தாது
வரல் வேண்டும்: வருதல் வேண்டும்.

பொழிப்புரை

சிறப்பான ஸஹஸ்ரார கமலத்திருக்கும் செல்வியாகிய அபிராமி அம்மையே, துறக்கம் என்ற சொர்க்காதி போகத்தைத் தரவல்ல நின் கணவரும் நீயும், என் தியான சமாதியில் என் உடலுக்கும் உயிருக்கும் இருக்கும் சம்பந்தம் நீங்கி சுழுத்தி ஸ்தானத்துக்கும் மேலான துரிய நிலையும் கடந்த (துரியமற்ற) துரியாதீதமான ஐந்தாவது அவஸ்தையை அளித்து உன் திருவடியை என் சென்னிமேல் பொருத்திட நின் திருவடி வருந்தியாவது வருதல் வேண்டும்.

விரிவுரை

இப்பாட்டுக்கு உரை எழுதிய மேதாவிகள் ''இறக்கும்போது வரவேண்டும்'' என்றே பொருள் கொள்கின்றனர். இப்பாட்டில் கூறியிருப்பது தான் சாக்தசித்தாந்தத்தின் சாதாக்கிய நிலை முன்பே சைவ சித்தாந்த சாதாக்கியத்துக்கும் சாக்தசித்தாந்த சாதாக்கியத்துக்கும் இருக்கும் வித்தியாசத்தைக் குறிப்பிட்டோம். சைவ சாதக்கியம் அறு விதம் அது அவிகாரமான நிஷ்கள சிவத்தில் சக்தி விகற்பமான கலைகளாலே ஏற்படுவது. அதாவது சிவசக்தி சேர்க்கையின் ஆறு விகற்பங்கள். ஆனால் சாக்தத்திலேயோ வெனில் சக்தியும் சாக்தனும் தாதாம்மியம் அடைதல். இதை லக்ஷ்மீதார் பஞ்சபூதங்கள், பஞ்சதன்மாத்ரைகள், பஞ்ச ஞானேந்திரியங்கள், பஞ்ச கர்மேந்திரிங்கள் மனஸ், மாயா, சுத்த வித்யா, மஹேச்வரர், ஸதாசிவர் என்ற 25 தத்துவங்களைக் கடந்து பரப்ரம்ஹ சொரூபிணியான அம்பாள் சிவனுடன் ஸாமரஸ்ய பாவமடைந்து இருபத்தாறுவது தத்துவமான ஸாதாக்ய தத்துவமாய் இருக்கிறாள். 'ஸாதா' என்பதுதான் இந்த 26 வது தத்துவம் 'ஸத்ஆக்யாயத என்று பிரித்து இதை ஸாதாக்யம் என்று சொல்லுவார்கள் என்று விவரித்து இருக்கிறார். இதுதான் துரியாதீத அநுபவம் இதை இப்பாட்டில் 'துரியமற்ற உறக்கம்' என்கின்றார் உடம்போடு உயிர் உறவற்ற நிலை சுழுத்தி அறிவு மறத்தல் துரியம் அதற்கு அப்பால்பட்டது துரியாதீதம் என்ற ஸாதாக்யம் இந்த நிலை ஒளி நிலையென்றும் கூறப்படுகின்றது. இது இவ்வுடல் இருக்கும்போதே அடையவல்லது. ஸௌந்தர்யலஹரி 9-வது சுலோகத்துக்கு லக்ஷ்மீதார் எழுதிய வியாக்கியானம் பார்க்கவும். ஸஹஸ்ரார கமலத்திலிருக்கும் சந்த்ர கலாமண்டலத்தில் 25-வது தத்துவமான சதாசிவதத்துவத்தோடு கலந்து இருபத்தி ஆறுவது தத்துவமான ஸாதாக்ய தத்துபமாகின்றாள். சாதகன் இந்த நிலையடையும்போது அம்பாளோடு தாதாம்மியம் ஆகிவிடுகின்றான். இதுவே இப்பாட்டுக்கு சாக்த சித்தாந்தப்படி உண்மையான உரை என்றறிக. தாதாம்மியம் அடைவதைத்தான் உருவகமாக ''சேவடி சென்னி வைக்க'' என்று கூறுகிறார்.

90 வது பாட்டு.

## கிடைக்காத பேறு கிடையாது.

வருந்தாவகை என் மனத்தாமரையினில் வந்து புகுந்து
இருந்தாள் பழைய இருப்பிடமாக: இனி எனக்குப்
பொருந்தா தொரு பொருள் இல்லை! விண்மேவும் புலவருக்கு
விருந்தாக வேலை மருந்தானதை நல்கும் மெல்லியலே.

பதவுரை

விண் மேவும்: வானுலகத்தில் வாழும்

புலவருக்கு: தேவர்களுக்கு

வேலை மருந்தானதை: (பால்) கடலில் தோன்றிய (இறக்காமல் செய்யும் மருந்தான) அமுதத்தை

நல்கும் மெல்லியலே: (மோஹினி உருவமாக வந்து) பகுந்து கொடுத்த மென்மையான உருவம் படைத்த அபிராமி அம்மையே

வருந்தாவகை: நான் பிறவிச்சுழியிலே பட்டு வருந்தாதபடி.

என் மனத்தாமரையில்: என் இருதயத்தில் இருக்கும் அனாகத ஆதாரத்தாமரையில்.

வந்து புகுந்து: மூலாதாரத்திலிருந்து வந்து குடி புகுந்து.

பழைய இருப்பிடமாக இருந்தாள்: தன்னுடைய பழகிய வாசஸ்தலமாக்கிக் கொண்டாள்;

இனியெனக்கு: இனிமேல் எனக்கு

பொருந்தாத ஒரு பொருள் இல்லை: கைகூடாத செல்வம் வேறில்லை;

பொழிப்புரை

தேவலோக வாசிகளான அமரர்களுக்கு பாற்கடலில் பிறந்த அமுதத்தை மோஹினியாக வந்து பங்கிட்டுக் கொடுத்து அவர்களை இறவாமல் செய்த அபிராமி அம்மையே குண்டலினி ரூபமாய் மூலாதாரத்திலிருந்து வந்து என் இதயமான அனாகதத் தாமரையில் பழகிய வாசஸ்தலமாகக் குடிபுகுந்து கொண்டாள் ஆதலினால் அடியேன் இனிமேல் அடையக் கூடாத பேறு ஒன்றுமேயில்லை.

விரிவுரை

மோஹினி ரூபமாக வந்தது விஷ்ணுவென்று புராணம் கூறும். ஆனால் சாகதத்தில் பராசக்தியே ஆண் ரூபத்தில் விஷ்ணு என்று கூறப்பட்டிருக்கிறது. புருஷேச விஷ்ணு, ஆகையால் பராசக்தி அமுதத்தை தேவர்களுக்குப் பங்கு போட்டுக் கொடுத்தாள் என்கின்றார். பழைய இருப்பிடம் என்பது: சாக்தோ பாஸனையில் குண்டலினியை மேலே கொண்டு போகும் சாதனையை அடைந்தவர்கள் ஸஹஸ்ராரத்தில் கொண்டு போக முடியுமானாலும் பழக்கமாக அனாகத சக்கரத்திலேயே வைத்து தியானம் செய்வது மரபு. மேலும் இருதயமே ப்ரம்மத்தின் இருப்பிடம் என்று வேதம் கூறுகின்றது. (சாந்தோக்யம் எட்டாம் பிர பாடகம் முதற் கண்டம்) ஆகையால் அது பழைய இருப்பிடமாகக் கூறப்பட்டது. அனாகதத்தில் குண்டலினியை நிறுத்தி உபாஸிக்கின்றவர்கள் ஸகல ஸித்தியையும் அடைவார்கள் என்பது உட்கருத்து. அமரர்களுக்கு இறவாத் தன்மையளிக்கும் ஔஷதம் ஆதலால் அமுதை மருந்தென்றார்.

91 வது பாட்டு

## அடியாரைத் தொழுபவரும் அமரராவர்.

மெல்லிய நுண்ணிடை மின்னனையாளை விரிசடையோன்
புல்லிய மென்முலைப் பொன்னனையாளைப் புகழ்ந்து மறை
சொல்லிய வண்ணம் தொழும் அடியாரைத் தொழுமவர்க்கும்
மல்லியம் ஆர்த்தெழ வெண்பகடூரும் பதந்தருமே.

பதவுரை

மெல்லிய நுண்ணிடை மின்னனையாளை: மெல்லிய நுண்ணிடையுடைய மின்னல் போல் பிரகாசிக்கும் திருவுரு உடையாளை.

விரி சடையோன் புல்லிய: சிவபெருமானால் ஆலிங்கனம் செய்யப்பட்ட

மென் முலைப் பொன்னனையாளை: இளமையான தனபாரங்களையுடைய பொன்னிறம் உடையாளை

மறை சொல்லிய வண்ணம்: வேதத்தில் விதிக்கப்பட்டபடி

புகழ்ந்து தொழும் அடியாரை: பரவிப்புகழ்ந்து வழிபடும் சாக்த உபாஸகர்களை

தொழுமவர்க்கும்: வழிபடும் அடியார்க்கும் அடியாரானவர்களுக்கும்

பல்லியம் ஆர்த்தெழ: அந்தரப்பல்லியம் கறங்க.

வெண்பகடூரும்: வெள்ளை யானை மீது ஏறிவரும்

பதம் தருமே: இந்திரப் பதவியைத் தரும்.

பொழிப்புரை

மெல்லிய நுண்ணிடையுடைய மின்னல் போன்ற பிரகாச முடைய வளை, விரிசடைக் கடவுளான சிவபெருமான் தழுவும் இளமை யான முலைகளையுடைய பொன்னனைய மேனி உடையாளை வேதோக்தமாய் வழிபடும் அடியவர்களான சாக்த உபாஸகர் களைத் தொழுது வழிபடும் தொண்டர்க்குத் தொண்டர்களுக்கும் கூட துந்துபி முழங்க ஐராவதத்தில் ஏறி வரும் இந்திர பதவி கிட்டும்; பல்லியம்: பல வாத்தியங்கள். ஈண்டு சந்தர்ப்பத்தைக்

கருதி ஆகாய துந்துபி எனப் பொருள் கொள்ளப் பட்டது. அம்பாளை மின்னல் போன்ற பிரகாச வடிவினள் என்பதை தடில்லதா-ஸமருசி: என்றும் பொன்னிற முடைமையை பீதவர்ண என்ற நாமாக்கள் குறிக்கின்றன. மறை சொல்லிய வண்ணம். வேதோக்தமான வழிபாடு. ஸ்ரீவித்யை வேதபாஹ்யயமல்ல ஸ்ரீசூகத்தின் 15 மந்திரங்களுக்கும் அறிஞர்கள் கொடுக்கும் பிரயோகம் பார்க்க.

---

92 வது பாட்டு

## அநன்யாஸ் சிந்தை

பதத்தே உருகி நின் பாதத்திலே மனம் பற்றியுன்றன்
இதத்தே ஒழுக அடிமை கொண்டாய், இனி நாளொருவர்
மதத்தே மதிமயங்கேன், அவர் போன வழியும் செல்லேன்
முதத்தேவர் மூவரும் யாவரும் போற்றும் முகிழ் நகையே.

பதவுரை

முதல் தேவர்: சாமானியரால் முதல் தேவராகக்கருதப்படும்
மூவரும்: சிருஷ்டிஸ்திதிஸம் ஹாரம் என்ற முத்தொழிலும் செய்யும் பிரம்மன், விஷ்ணு, ருத்ரன் என்போர்
யாவரும்: மற்ற அனைவரும்
போற்றும்: துதிக்கும்
முகிழ் நகையே: புன்முருவல் பூக்கும் முகமுடைய அபிராமி யம்மையே.
பதத்தே உருகி: பக்குவப்பட்டு, பக்திமேலீட்டால் நெக்குருகி
பாதத்திலே: உன்னுடைய திருவடியிலே
மனம் பற்றி: மனமானது ஈடுபட்டு
உன்தன் இதத்தே ஒழுக: உனக்கு எது ஹிதமோ அவ்வாறே நான் நிலை நின்று ஒழுக
அடிமை கொண்டாய்: என்னை அடிமையாக ஏற்றுக் கொண்டனை
இனி நாளொருவர் மதத்தே: இனிமேல் நான் வேறொருவருடைய சமய கோட்பாடுகளிலும்
மதிமயங்கேன்: அறிவைச்செலுத்தி மயங்கமாட்டேன்
அவர் போன வழியும் செல்லேன்: அவர்களுடைய வழிகளையும் பின்பற்றேன்

பொழிப்புரை

முதல் தேவராகக் கருதப்படும் பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் என்ற மூவரும், ஏனையோரும் துதிக்கின்ற புன்முருவல் பூத்தமுக மண்டலமுடைய அபிராமி அம்மையே என் மனமானது பக்குவப் பட்டு பக்திமேலீட்டால் நெக்குருகி உன்னுடைய திருவடியிலே ஈடுபட்டு உனக்கு உகந்தது எதுவோ அவ்வழியிலே நிலை நின்று ஒழுக என்னை உன் அடிமையாக்கிக் கொண்டனை, இனிமேல் நான் வேறொருவருடைய சமயக்கோட்பாடுகளில் அறிவைச் செலுத்தி மயங்கமாட்டேன் அவர்களுடைய வழிகளையும் பின் பற்றேன்.

விரிவுரை

சிருஷ்டியாதி தொழில்களைச் செய்யும் மூவரும் அம்மையை வணங்கி அவளுடைய அனுக்கிரகத்தாலேயே தத்தம் தொழிலைச் செய்கின்றனர் என்பது முந்தின பாட்டுகள் பலவற்றில் கூறப் பட்டது. மனம் பக்குவமடைந்த அம்பாளின் உபாஸனையில் ஈடு பட்ட பின் மற்ற சமயங்களில் அறிவைச் செலுத்தாமல் அநன்ய மாக அவளையே பற்றுக் கோடாகக் கொண்டு ஒழுக வேண்டும். அஃதன்றி தற்காலத்தில் சமய சமரசம் பேசும் சிலர் எச்சமயமா யின் என்? என்று முடிவு கட்டி ஒன்றிலும் பற்றில்லாது இடர் படுகின் றனர். எத்தெய்வத்தைப் பற்றினாலும் அதிலேயே நிலைத்திருந்தால் தான் பலன் அடைய முடியும். இப்பாட்டில் ஏனைய சமயங்களை இழித்துக் கூறினதாகக் கொள்ள இடமில்லை. ஒரு சமயத்தைப் பற்றிய பின் ஏனைய சமயங்களையும் பற்றுவது அறிவுடையோர் செயலாகாது. அதற்காக ஏனைய சமயங்களில் ஆராய்ச்சி கூடாது என்றும் கொள்ளலாகாது. "எச்சமயம் கொண்டீர் அச்சமயமாகி யாங்கே மாதொரு பங்கரும் தாம் வருவர்" என்ற சித்தியார் வாக்கு இங்கு சிந்திக்கற்பாலது.

93 வது பாட்டு

## பரந்து வரம்பு கூறுவது பேதமை

நகையே இஃதிந்த ஞால மெல்லாம் பெற்ற நாயகிக்கு
முகையே முகிழ் முலை மானேமுதுகண் முடிவிலந்த
வகையே பிறவியும் வம்பே மலைமகள் என்பதும் நாம்
மிகையே இவள்தன் தகைமையை நாடி விரும்புவதே.

பதவுரை

இந்த ஞாலமெல்லாம் பெற்ற நாயகிக்கு: அண்டமெல்லாம் ஈன்றெடுத்த தாயாகிய தலைவி அபிராமிக்கு

முகையே முகிழ் முலை: (முகிழ் முலை முகையே) அரும்புகின்ற முலை தாமரை மொட்டுப் போன்றது என்று கூறுவதும்

மானே முதுகண்: (முதுகண்மானே) மிக பழையளாகிய அவளுடைய கண்கள் மான் போன்று மருட்சியுடையன என்று சொல்வதும்

நகை இஃது: இவ்வாறு சொல்வது சிரிப்புக்கிடமே யாகும்

முடிவில் அந்த வகையே பிறவியும்: அவளுக்கு முடிவும் இல்லை அவ்வாறே பிறப்பும் இல்லை (அப்படி யிருக்க நாம்)

வம்பே மலைமகள் என்பதும்: அவள் மலையரசன் புத்திரி என்று சொல்லுவதும் வம்புதான் (வீணே)

இவள் தன் தகைமையை: இவளுடைய உண்மை சொரூபத்தை

நாடி விரும்புவது: ஆராய்ந்து பார்க்க விழைவது

மிகையே: நம்மை மீறிய முயற்சியேயாம்

பொழிப்புரை

எல்லா உலகங்களையும் ஈன்ற தாயாருக்கு ஸ்தனங்கள் தாமரையின் அரும்புகள் என்பது. மிகப் பழையவளான அவளுடைய கண்கள் மான்கண்கள் போன்று மருட்சியுடையன என்பதும் சிரிப்புக்குத்தான் இடமாகும். அவளோ முடிவற்றவள். அதுபோன்றே பிறப்பும் அற்றவள். அவளை பர்வதராஜனுக்குக் குமாரி என்று ஒருவருக்கு ஒரு காலத்தில் பிறந்தவள் என்று கூறுதலும் வீண் வார்த்தைதான். அவளுடைய சொரூப லக்ஷணத்தை யாவது ஆராய்ந்து அறியலாம் என்றால் நம்போன்றருக்கு மீறிய முயற்சியாகும்.

விரிவுரை

அம்பாளின் தடஸ்த லக்ஷண வர்ணனை வெறும் உபசாரமே என்று சொரூப லக்ஷணத்தை ஆய்ந்தறிதல் நமக்கு முடியாத செயல் என்றும் கூறினர். தாய்மையடைந்த பெண்களுக்கு தாமரை போன்ற அரும்பும் முலைகள் இருக்க முடியுமா? அது போன்றே மிகப் பழையோளாய் இருப்பவளின் கண்கள் சிறு பெண்களுக்கு இருக்கும் மான் போன்ற பார்வை என்றுவது சொல்ல முடியுமா என்று நகைச்சுவையுடன் அரியதத்துவத்தையும் வெளியிடுகின்றார். அண்டமெல்லாம் ஈன்றவளாயினும் அவள் கன்னியே. அதுபோன்ற பிறப்பு இறப்பு இல்லாதவளை ஒரு காலத்தில் ஒரு பெற்றோருக்குப் பிறந்தாள் என்று சொல்லுவதும் வீணல்லவா? போகட்டும் அவளுடைய சொரூப லக்ஷணத்தைத்தான் ஆராய்ந்து முடிவுகட்ட முடியுமா. அவள் மனம் வாக்குக் கெட்டாதவள் அல்லவா? ஆகையால் அவளுடைய தடஸ்தலக்ஷணம் இன்னதென்று பாதாதி கேசம் வர்ணிப்பது சிரிப்புக்கு இடமாகும். அவளுடைய சொரூப லக்ஷணத்தை ஆராய்தல் நம் புத்திக்கும் சக்திக்கும் அப்பாற்பட்டது. எனவே இந்த வீண் வர்ணனைகளிலும் ஆராய்ச்சிகளிலும் இறங்காமல் அவளை வழிபடுவதே மக்கள் கடமை என்பதை இப்பாட்டு வலியுறுத்துகிறது.

———

94 வது பாட்டு

## அவள் சந்நிதியில் யாவரும் பித்தராவரே

விரும்பித் தொழும் அடியார் விழி நீர்மல்கி மெய் புளகம்
அரும்பித் ததும்பிய ஆனந்தமாகி அறிவிழந்து
சுரும்பிற் களித்து மொழிதடுமாறி முன்சொன்ன வெல்லாம்
தரும் பித்தர் ஆவரென்றால் அபிராமி சமயம் நன்றே

பதவுரை

விரும்பித் தொழும் அடியார்: உன்மீது பேரன்பு பூண்டு ஆசையுடன் வழிபடும் சாதகர்களுடைய

விழி நீர் மல்கி: கண்களில் நீர் பெருகி
மெய் புளகம் அரும்பி: உடம்பில் மயிர் சிலிர்த்து
ததும்பிய ஆனந்தமாகி: பொங்குகின்ற ஆனந்த மயமாகி
அறிவிழந்து: தற்போதம் இழந்து
சுரும்பிற் களித்து: தேனுண்ட வண்டுபோல் மகிழ்ச்சி மீதுற
மொழி தடுமாறி: சொற் குளறி
முன்சொன்ன வெல்லாம் தரும்:- முன்பு சொன்னவற்றையே திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருக்கும்

பித்தர் ஆவரென்றால்: பைத்தியம் பிடித்தவர் ஆவர் என்றால்
அபிராமி சமயம்: அபிராமியம்மையை வழிபடும் மார்க்கம்
நன்றே: மிக்க அழகாயுள்ளது

பொழிப்புரை

அபிராமியம்மையின் மீது பேரன்பு பூண்டு ஆவலுடன் தொழும் சாக்த உபாஸகர்கள் தம் விழிகளில் நீர் மல்க, உடம்பில் மயிர் குத்திட்டு நிற்க, அதனால் உண்டாகும் உளமகிழ்ச்சியில் ஆனந்தமயமாகி, தற்போதம் இழந்து தேனுண்ட வண்டு போல் களித்து, சொற்கள் தடுமாறி முன் சொன்னவற்றையே திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டிருக்கும் பைத்தியகாரர்கள் ஆகிவிடுகின்றனர் என்றால் அபிராமியின் சாக்த சமயம் வெகு அழகு!

விரிவுரை

இப்பாட்டும் நகைச்சுவை பொருந்திய ஆழ்ந்த கருத்தை விளக்கும் பாட்டு. உன்னைத் தொழும் அடியவர் பித்தராவர் என்றால் உன் சமயம் நிரம்பு அழகுதான்போ! என்று நகைச்சுவையில் கூறுமுகமாய் உண்மை பக்தர்களுக்கு உண்டாகும் அசப்புற நிகழ்ச்சிகளை அழகாகச் சித்தரிக்கின்றார். 'தப்பாமேதாம் பிடித்தது சலியாத் தழலது கண்ட மெழுகது போலத் தொழுது உளம் உருகி, யழுது, உடல்கம்பித்து, ஆடியும் அலறியும் பாடியும் பரவியும்....கசிவது பெருகி, கடலென மறுகி அகங்குழைந்து அனுகுலமாய் மெய்விதிர்த்துச்சகம் பேய்யென்று தம்மைச் சிரிப்ப நாணது ஒழிந்து நாடவர் பழித்துரை பூணதுவாக என்ற அடிகளும், ''அன்பெனும் ஆறுகரையது புரள, நன்புலனென்றி, நாதவென்றரற்றி, உரைதடுமாறி, உரோமஞ்சிலிர்ப்ப ''என்று வரும் அடிகளும் இப்பாட்டை எவ்வாறு வலியுறுத்துகின்றன என்பதை நேயர்கள் சிந்திக்க. நாரதர் பக்திசூத்திரம் 6ல் ''யக்ஞாத்வா மத்தோபவதி'' என்கின்றார். அதாவது பக்தியை உடையவர்கள் பைத்தியமடைந்து விடுகிறார்கள். என்று தாயுமான அடிகளின் ''கருணாகரக்கடவுள் என்ற பகுதியில் வரும் 9 வது பாடலையும் பார்க்க.

95 வது பாட்டு

நன்றே வருகினும் தீதே விளைகினும் நான் அறிவது
ஒன்றே யுமில்லை உனக்கேபரம், எனக்குள்ள வெல்லாம்
அன்றே உனதென் றளித்து விட்டேன், அழியாத குணக்
குன்றே! அருட்கடலே! இமவான் பெற்ற கோமளமே!

பதவுரை

அழியாத குணக்குன்றே: என்றும் அழிவில்லாத குண மலையே,
அருட்கடலே! கருணை நிறைந்த சமுத்திரமே!
இமவான் பெற்ற கோமளமே! மலையரசன் பெற்ற பேரழகு வாய்ந்த அபிராமியம்மையே!

எனக்கு உள்ளவெல்லாம்: எனக்கென்று உடைமையாயிருந்த யாவற்றையும்
அன்றே: என்னையாட்கொண்ட அந்த க்ஷணத்திலேயே
உனதென்று அளித்து விட்டேன்: உன்னுடைய உடைமையென்று சமர்ப்பித்துவிட்டேன்

நான் அறிவது ஒன்றேயும் இல்லை: நான் எனது என்று நினைக்கக் கூடியது ஒன்றுமேயில்லை

நன்றே வரினும்: நன்மையே விளைந்தாலும்
தீதே விளைகினும்: தீமையே வந்தாலும்
உனக்கே பரம்: அவற்றால் ஏற்படும் விளைவுகள் யாவும் உனது பாரமேயன்றி என்னதல்ல

பொழிப்புரை

என்றும் அழியாமல் சாஸ்வதமாயிருக்கும் குணமலையே! கருணாசாகரமே! இமவானாகிய பர்வதராஜனுக்குக் குழந்தையாகப் பிறந்த அதிரூப சௌந்தர்யமான அபிராமவல்லி, நீ என்னை ஆட்கொண்டாயோ அன்றே என் என்று சொல்லக்கூடிய யாவற்றையும் உன்னுடையது என்று ஒப்புவித்துவிட்டேன். எனது என்று நினைப்பதற்கு ஒன் றுமேயில்லை. ஆகவே நன்மை வந்தாலும்சரி, தீமையே வந்தாலும் சரி எல்லாம் உன் பாரம்.

விரிவுரை

முந்தின பாட்டில் பக்திப் பரவசத்தைச் சொன்னுர். இந்தப் பாட்டில் ''ஸர்வ சங்கப் பரித்யாகம்,, என்ற ஆத்ம சமர்ப் பணத்தைக்கூறினுர். இதுவே பிரபத்தி என்பது. யாவும் அவளு டைமை என்ருகும்போது சேதனர்கள் அடையும் நன்மை தீமை அவர்களை பாதிக்காது. எதுவரினும் அம்பாள் திருவுளம் என்று வாளாவிருப்பர். பக்தி பிரவாஹத்தில் மூழ்கியிருந்த சமயத்தில் அமாவாசையை பௌர்ணமி என்ருர். அதனுல் அரசதண்டனை ஏற்பட இருந்தது. எதுவந்தாலென்ன என்று தனதுபூரண ஆத்ம சமர்ப்பணத்தை இங்கு கூறினுர் எனினுமாம்.

96 வது பாட்டு

## சியாமளைத் தொழுபவர் ஏழுலகாள்வர்

கோமள வல்லியை அல்லியந்தாமரைக் கோயில்வைகும்
யாமள வல்லியை ஏதமிலாளை எழுதரிய
சாமள மேனிச் சகலகலாமயில் தன்னைத்தம்மால்
ஆமளவும் தொழுவார் எழுபாருக்கும் ஆதிபரே

பதவுரை

அல்லியந்தாமரை: பூந்தாது பொருந்திய தமரையை
கோயில் வைகும்: தனது இருப்பிடமாகக்கொண்டு வீற்றிருக்கும்
கோமள வல்லியை: அழகு, மென்மை பொருந்திய இளங்கொடி போன்ற
யாமள வல்லியை: 'ருத்ரயாமளம்' எனப்படும் சாக்ததந்திர சாஸ்திரத்தின் கொடிபோன்றவளை
ஏதமிலாளை: கேடு இல்லாதவளை (அழிவு இல்லாதவளை)
எழுதரிய: ஓவியத்தில் தீட்டமுடியாத
சாமளமேனி: பச்சை நிறமுடைய திருமேனி கொண்ட
சகல கலா மயில்: எல்லாக் கலைகளுக்கும் அதிஷ்டான தேவதையான மயில்போன்ற சாயலையுடையவள்
தன்னை: இத்தியாதி லக்ஷணம் பொருந்தியவளை
தம்மால் ஆமளவும்: தனது சக்திக்கு உகந்தமட்டும்
தொழுவார்: வழிபட்டு உபாஸிக்கின்றவர்கள்
எழுபாருக்கும்: மேலேழ் உலங்கட்கும்
ஆதிபரே: அதிபர்களாவார்கள்

பொழிப்புரை

பூந்தாது நிறைந்த அகஇதழ்கள் உடைய தாமரையை தன் இருப்பிடமாகக்கொண்டு வீற்றிருக்கும் அழகும் மென்மையும் சேர்ந்த இளங்கொடி போன்றவளாயும், யாமளா தந்திரத்தின் கொடி போன்றவளாயும், அழிவில்லாதவளாயும் பச்சை நிறமுடைவளாயும் சகல கலைகளுக்கு அதிஷ்டானமாய் மயில்போன்ற சாயல் உடையவளாயும் இருப்பதாக அம்பாளை தன் சக்திக்கு உகந்தபடி தொழுபவர்கள் மேலேழ் உலகங்களுக்கும் அதிபர் ஆவர்.

விரிவுரை

முந்தின 15 வது பாட்டின் விரிவுரையில் யாமளைப் பசுங்கிளியே என்றதற்குக் கூறியிருப்பது காண்க. காளிதாஸன் உபாஸித்ததும் இந்த முகூர்த்தம்தான் என்பது அவனது 'சியாமளா தண்டகம்' என்ற நூலிலிருந்து தெரியவருகின்றது. ருத்ரயாமளம் என்பது தந்திர சாஸ்திரங்களில் ஒன்று. அது ஆகம பரமானது. சிவபெருமானே இந்த ஆகமத்தை தேவிக்கே உபதேசம் செய்ததாகக் கூறப்பட்டிருக்கின்றது. அந்த நூல் பூராவிலும் சியாமளையையே கூறப்பட்டிருப்பதால் அதைச்சுற்றிய கொடி யென்ருர். ஏதம் என்பதைக் குற்றம் என்ற பொருளில் கொள்கின்றனர். அதற்குக் கேடு என்ற பொருளும் உண்டு. கேடு என்பது அழிவு. மயிலின் தோகையினின்று சூரிய கிரணங்கள் போல பல இறகுகள் கிளம்பிக் காட்சியளிப்பது போன்று அம்பாளினின்றே சகல கலைகளும் மயில் தோகை விரிவது போன்று வெளிப்படுகின்றன என்பது குறிப்பு. முந்தின வேறு பாடல்களிலும் சியாமளாதேவி குறிக்கப்படுகின்ருள் ஆங்காங்கு கண்டுகொள்க. ஸ்ரீ சக்கரத்தின் பிந்துஸ்தானத்திலிருந்து மயிலின் கலாபம் போன்று ஏனைய யோகினி கணங்கள் விரிந்து சக்கரம் பூராவும் மேவியிருப்பதையும் குறிக்கும்.

97-வது பாட்டு.

## அம்பிகை மந்திரதிருஸ்டர் பன்னிருவர்

ஆதித்தன், அம்புலி, அங்கி, குபேரன், அமரர்தங்கோன்
போதிற்பிரமன், புராரி, முராரி, பொதிய முனி,
காதிப் பொருபடைக்கந்தன், கணபதி, காமன் முதல்
சாதித்த புண்ணியர் எண்ணிலர் போற்றுவர் தையலையே.

பதவுரை

ஆதித்தன் :- சூரியன்
அம்புலி :- சந்திரன்
அங்கி :- அக்கினி பகவான்
குபேரன் :- குபேரன்
அமரர்தம்கோன் :- இந்திரன்
போதிற்பிரமன் :- தாமரையில் வீற்றிருக்கும் பிரம்மன்
புராரி :- புரமெரித்த பரமசிவன்
முராரி :- முரனை அழித்த விஷ்ணு
பொதியமுனி :- பொதியமலையில் தங்கும் அகஸ்தியர்
காதிப் பொரு படைக்கந்தன் : - மோதிப் போர் செய்யும் வேற் படையுடைய முருகன்
கணபதி :- விநாயகக் கடவுள்
காமன் :- மன்மதன்
முதல் சாதித்த :- முதன் முதலாக (மந்திரத்தை) கண்டுபிடித்த
புண்ணியர் :- மந்திர திருஷ்டர்கள்
எண்ணிலர் :- (இவர்களைப் பின்பற்றிப்பின்னால்) எண்ணில் அடங்காத அநேக உபாஸகர்கள்
போற்றுவர் தையலையே :- பராசக்தியை துதித்து வழிபடுவராயினர்

பொழிப்புரை

சூரியன், சந்திரன், அக்னி, குபேரன், தேவராஜனான இந்திரன் தாமரையில் வீற்றிருக்கும் நான்முகன், முப்புரம் எரித்த சிவபெருமான், நாரணன், அகஸ்தியர், வேற்படையுடைய ஸ்கந்தன், விநாயகர், மன்மதன் என்ற பன்னிரெண்டுபேரும் முதன் முதலாக பஞ்ச தசாக்ஷரி மந்திரத்தைக் கண்டுபிடித்தவர்கள் அவர்களைப்பின்பற்றி எண்ணிலடங்காத உபாஸகர்கள் பராசக்தி யைத் தொழுதிருந்தார்கள்.

விரிவுரை

அம்பாளின் மந்திரம் பஞ்சதசாக்ஷரி என்பது இதற்கு பன்னிரெண்டு பேதங்கள் உண்டு ஒவ்வொரு பேதமும் ஒவ்வொருவரால் கண்டு பிடிக்கப்பட்டது. இதைப்பற்றி முன்பே 3-ம் பாட்டில் வரும் எவரும் அறியாமறை என்ற இடத்தில் விவரித்தோம். தந்திர சாஸ்திரங்களில் முராரியும், கணபதியும் கூரப்படவில்லை. அவர்களுக்குப்பதில் மனு லோபாமுத்திரா என்றிருவர் சேர்க்கப்பட்டுள்ளனர். அதுபோன்று பிரம்மனும் கூறப்படவில்லை. துர்வாஸர் முனிவர் கூறப்பட்டிருக்கிறார். மற்றவிவரம் 3-ம் பாட்டு விரிவுரை காண்க.

———

98-வது பாட்டு

## வஞ்சகர் நெஞ்சடையாள்

தைவந்து நின்னடித்தாமரை சூடிய சங்கரற்குக்
கைவந்த தீயும் தலைவந்த ஆறும் கரந்த தெங்கே
மெய் வந்த நெஞ்சினல்லால் ஒருகாலும் விரகர் தங்கள்
பொய் வந்த நெஞ்சில் புக அறியா மடப் பூங்குயிலே.

பதவுரை

மெய்வந்த நெஞ்சினல்லால்: உண்மையும், நேர்மையும், சீலமும், உடைய அடியார்களின் உள்ளத்தி லல்லாது

ஒருகாலும்: எக்காலத்தும்

விரகர்தங்கள்: தம்மை சாமர்த்திய சாலிகள் என்று கருதிக் கொள்ளும்

பொய்வந்த நெஞ்சில்: வஞ்சகம் நிறைந்தவர் உள்ளத்தில்

புக அறியா: குடி கொள்ளக்கருதாத

மடப் பூ குயிலே: இளமையும், அழகும் நிறைந்த குயில் போன்றவளே

நின்னடித் தாமரை: உன்னுடைய திருவடிக்கமலங்களை

தை வந்து: வருடி

சூடிய: தன் தலையில் சூடிக் கொண்ட சங்கரருக்கு

கை வந்த: கையில் அணிந்த

தீயும்: அழலும்

தலைவந்த ஆறும்: சடையில் சூடிய கங்கையும்

கரந்த தெங்கே: எங்கே ஒளித்து வைத்தார்

பொழிப்புரை

நேர்மையும், சீலமும், அன்பும் உடைய மெய்யடியார்கள் உள்ளத்திலன்றி தம்மை மிக சாமர்த்தியசாலிகள் என்று கருதிக் கொள்ளும் பொய்மையாளரின் உள்ளத்தில் ஒரு போதும் சென் றறியா இளமையும், அழகும் பொருந்திய குயில் போன்று நிறமும், (சியாமளம்) குரலும் உடைய அபிராமி யம்மையே

உன் சிரிய மந்த்ர திருஷ்டரான சிவபெருமான் உன் காலை வருடும்போது அவர் கையில் தாங்கிய நெருப்பை எங்கே ஒளித்துக் கொண்டார், உன்னடியை சிரசில் சூடிய போது அவர் சடையிலிருந்த கங்கையை எங்கே ஒளித்து வைத்தார்.

விரிவுரை

சிவபெருமானாயினும் அம்பாளை வணங்கும்போது தன் கையில் ஏந்திய நெருப்பையும் தன் தலையில் தரித்த கங்கையாகிய பரஸ்திரியையும் நீக்கி விட்டே அவளை அணுக முடியும். அவ்வாறு இருக்கத் தங்கள் வஞ்சகத்தை பிறர் அறியா வண்ணம் மறைத்துத் தம்மை சாமர்த்தியசாலிகளாகப் போலி வேடம் பூணும் வஞ்சகர் நெஞ்சில் அவள் எப்படி புகுவாள் என்பது குறிப்பு: லப்த பாப மனோதூரா திரிசதி (265)

———

## 99-வது பாட்டு

குயிலாய் இருக்கும் கடம்பாட வியிடைக் கோல வியன்
மயிலாய் இருக்கும் இமயாசலத்திடை வந்துதித்த
வெயிலாய் இருக்கும் விசும்பில் கமலத்தின் மீதன்னமாம்
கயிலாயருக்கன்றி மவான் அளித்த கனங்குழையே.

### பதவுரை

கயிலாயருக்கு: கயிலாயத்தை தமது இருப்பிடமாகக் கொண்ட சிவபெருமானுக்கு

அன்று: அக்காலத்தில்

இமவான்: பருவதராஜன்

அளித்த: திருமணம் செய்து கொடுத்த

கனங்குழை: கனத்த அல்லது பொன்னுலாகிய குழையை யுடைய அபிராமி யம்மையார்

கடம்பாட வியிடை: கடம்பவனத்தில்

குயிலாய் இருக்கும்: குயிலாக விளங்குவாள்

கோல இயல்: அழகும் பெருமையும் பொருந்திய

மயிலாக இருக்கும்: மயிலாக இருப்பாள்

இமயாசலத்திடை: இமயமலையில்

விசும்பில்: வானத்தில்

வெயிலாய் இருக்கும்: உதயசூரியன் போன்று இருப்பாள்

கமலத்தின்மீதன்னமாம்: தாமரை புஷ்பத்தின் மீது அன்னமாக இருப்பாள்

### பொழிப்புரை

கயிலாய மலையை தன் இருப்பிடமாகக் கொண்ட சிவ பெருமானுக்கு கடம்பவனத்தில் குயிலாயும், இமயமலையில் மயிலாயும், ஆகாயத்தில் இளம் சூரியனாகவும், தாமரைப் பூவின் மேல் அன்னமாகவும் இருப்பாள், இமவான் அன்று திருமணம் முடித்து வைத்த பொன்னுலாகிய குழையை அணிந்த அபிராமி யம்மையார்.

விரிவுரை

அம்பாளை குயிலாகவும், மயிலாகவும், இளம் வெயிலாகவும், அன்னமாகவும் சொன்னது என்னவெனில் குயிலில் நாதமும், மயிலில் பிரணவாகார உருவமும், வெயிலில் பிரகாசமும், இருப்ப தோடு கமலம் என்று சொல்லப்பட்ட மூலாதார கமலத்திலே 'ஹம்ஸ 'என்ற அஜபா மந்திரமாகவும் இருப்பாள் என்பதாம். குயில் கருநிறமும், மயில் பச்சை நிறமும், வெயில் சிவப்பு நிறமும், அன்னம் வெண்மை நிறமுமாகும் ''ஸர்வ வர்ணோப சோபிதா'' என்ற ஸஹஸ்ர நாமத்தை நினைவூட்டுகின்றது. ''கதம்பகான னவாஸா'' என்கின்றது திரிசதி. "காதம்ப காந்தார வஸப்பிரியே" என்பது காளிதாஸன். சங்கரர் தமது சியாமளா நவரத்ன மாலாவில் உபநிஷதுத்யான கேலிகலகண்டீம் என்கின்றார். அவள் மயிலாய் இருப்பதை சங்கரர் ஆகமவிபின மயூரீம் என்றும் திரிசதையில் "ஹ்ரீங்க ரோத்யான கேகி" என்றும் கூறப்பட்டிருக்கிறது. அவள் வெயிலாய் இருப்பதை அதே திரிசதியில் ''ஹ்ரீம்கார பாஸ்கர ருசி" என்று கூறப்பட்டிருக்கின்றது அவள் அன்னமாய் இருப்பதை "ஹம்ஸ மந்த்ரார்த்தரூபிண்யை" என்பது குறிப்பிடுகின்றது. ஆக இப்பாட்டின் திரண்ட கருத்து அம்பாள் முதலில் நாதவடிவாய் இருந்து பிரணவமாக மாறி சூரியன் போல் பிரகாசித்து அஜபா மந்த்ரமாகவும் இருக்கிறாள் என்பது. அவள் இருக்கும் கடம்பாடவி, இமயமலை, ஆகாயம், கமலம் இந்நான்குமே புவனேச்வரீ பீஜமான "ஹ்ரீம்" என்ற மந்திரமேயாகும் சிந்தித்து தெளிக.

---

## 100-வது பாட்டு

## தனது தியானமூர்த்தி இவ்வாறு இருப்பாள் எனல்

குழையத் தழுவிய கொன்றையந்தார் கமழ் கொங்கை வல்லி
கழைப் பொருத்திரு நெடுந்தோளுங் கருப்பு வில்லும்
விழையப் பொருதிறல் வேரியம் பாணமும் வெண்ணகையும்
உழையப் பொருது கண்ணும் நெஞ்சில் எப்போதும் உதிக்கின்றவே

பதவுரை

குழையத் தழுவிய : அன்று சிவபெருமான் குழையும்படி தன் திருக்கரங்காளல் இருக அணைந்து கொண்ட காரணத்தால்
கொன்றையந்தார் கமழ் : இறைவனுடைய கொன்றை மாலை தன்மீது உராய்ந்து அதன் மணத்தைக் கொண்ட திருமுலைகளையுடைய அபிராமவல்லியின்
கழையைப் பொருத : மூங்கிலை வென்ற
திரு நெடுந்தோளும் : அழகிய நீண்டபுயங்களும்
கருப்பு வில்லும் : அவை ஒன்றில் ஏந்திய கரும்பு வில்லும்
விழையப் பொருதிறல் : அம்பாளிடம் பொருந்துதற்கு விருப்பத்தை உண்டாக்க வல்லமை வாய்ந்த
வேரியம் பாணம் : நறுமணங்கமழும் புஷ்ப பாணங்களும்
வெண்ணகையும் : வெண்மையான புன்முருவலும்
உழையைப் பொரு : தாமரைமலர் (அல்லது மான்) போன்ற கண்களும்
நெஞ்சிலே : என் நினைவிலே
எப்போதும் : எக்காலத்தும்
உதிக்கின்றவே : தோன்றிக் கொண்டேயிருக்கின்றது

பொழிப்புரை

அம்பிகை சிவபெருமானைக் குழையத்தழுவினதால் அவர் சாத்தியிருந்த கொன்றை மாலையின் நறுமணத்தைத் தன் தனத்தில் கொண்ட அபிராமவல்லியின் மூங்கிலைப் பழிக்கும் நீண்ட தோள்

களும், அவையொன்றில் ஏந்திய கருப்பு வில்லும், இன்னொரு கரத்தில் ஏந்திய அம்பாளை அடைய விருப்பத்தை உண்டாக்கும் மணங்கமழ் புஷ்பபாணமும், வெண்முத்துப்போன்ற பற்கள் சற்றுத் தெரியும்படி புன்னகைபுரியும் வதனமும், அவ்வதனத்தில் தாமரை மலர்போன்ற கண்களும் எக்காலத்திலும் என் நெஞ்சில் தோன்றிக்கொண்டேயிருக்கின்றது.

விரிவுரை

இறைவன் குழையத்தழுவது காமாட்சியம்மை. கரும்பு வில்லும் புஷ்பபாணமும் கொண்டவளும் அவளே. காமாட்சியம்மையே திரிபுரசுந்தரி. "விழையப் பொருதுதிறல்" என்பதற்கு ஓர் உரையாசிரியர் "ஆணும் பெண்ணும் ஒருவரை ஒருவர் விரும்புமாறு பொருகின்ற" என்று உரைகூறி இடர்படுகின்றார். மன்மதனது புஷ்பபாணச் செயல்தான் அவர் கருத்தில் நிற்கின்றது. அம்மையின் புஷ்ப பாணங்களுக்கும் மன்மதனுடைய புஷ்ப பாணங்களுக்கும் செயலிலே உள்ள வித்யாசம் அறியார்போலும். ஒன்று இச்சையை உண்டாக்கும் அது மன்மதபாணம். மற்றொன்று அம்பாள் வசத்தில் இருப்பதால் இச்சையை அடக்கும். இந்த வித்யாசம் இருவரின் கரும்பு வில்லுக்கும் உண்டு. "உதிக்கின்றது" என்று முதல் பாட்டின் முதல் சொல் "உதிக்கின்ற" என்றதோடு அந்தாதியாக முடிவு பெருகின்றது.

———

பலசுருதி

நூல்பயன்

ஆத்தாளை எங்கள் அபிராம வல்லியை அண்டமெல்லாம்
பூத்தாளை மாதுளம்பூ நிறத்தாளைப் புவி அடங்கக்
காத்தாளை ஐயங்கணை பாசாங்குசமும் கரும்புமங்கை
சேர்த்தாளை முக்கண்ணியைத் தொழுவார்க்கொரு தீங்கில்லையே.

பதவுரை

ஆத்தாளையும்: யாவற்றினிக்கும் அன்னையானவளை

எங்கள் அபிராமி வல்லியை: எனக்கு வந்து அருள்செய்த அபிராமா தேவியை

அண்டமெல்லாம் பூத்தாளை: பிரம்மாண்டமாக விரிந்தாளை

மாதுளம் பூ நிறத்தாளை: மாதுளம் பூ போன்று சிவந்த நிறத்தையுடையவளை

புவி அடங்கக் காத்தாளை: சகல புவனங்களையும் ஒருங்கே காப்பவளை

ஐங்கணை: பஞ்ச புஷ்ப பானங்களும்

பாசாம்குசமும்: பாசமும் அங்குசமும்

கரும்பும்: கரும்பு வில்லும்

அங்கை சேர்த்தாளை: தனது திருக்கரங்களில் உடையவளை

முக்கண்ணியை: மூன்று நயனங்களை உடையவளை

தொழுவார்க்கு: வழிபடுவார்க்கு

ஒரு தீங்கில்லை: எவ்விதமான கெடுதலும் ஏற்படாது

பொழிப்புரை

கல உலகங்களுக்கும் தாயாராய் இருப்பவளும், எனக்கு
மயத்தில் வந்து உதவிய அபிராம வல்லியும், அண்டங்களாக
ரிந்தவளும், புவனங்கள் அனைத்தையும் காப்பவளும், ஐந்து
ஷ்ப பாணங்களையும், பாசத்தையும் அங்குசத்தையும் கரும்பு
லையும் தன்னுடைய திருக்கரங்களில் தாங்கியவளும், மூன்று
களையுடையவளுமான திரிபுர சுந்தரியாகிய அம்பிகையை யதோ
மாய் வழிபடுகின்றவர்களுக்கு எவ்விதக்கெடுதலும் ஏற்படாது.

## விரிவுரை

"ஸர்வாபத்விநிவாரிணீ" (913) என்றும் "ஸர்வோபதிவிநிர் முக்தா" "(708)" ஸர்வவ்யாதிப்ரசனி" (561) என்பன போன்ற நாமாக்கள் ஒரு தீங்கில்லையே என்ற சொல்லைக் குறிப்பிடுகின்றன. தீங்கு என்பது ஈண்டு உடலைப்பற்றியும், உயிரைப்பற்றியும் வரும் தீங்குகள் என்று பரந்த பொருளில் வந்தது. இப்பாட்டில் சித் தரிக்கப்படும் மூர்த்திசங்கரர் ஸௌந்தர்ய லஹரி 7வது சுலோகத்தில் கூறப்படும் திரிபுரசுந்தரீ வடிவம். இதுவே காஞ்சி காமாட்சியின் லும் திருவுருவம். முந்தின இரண்டாவது பாட்டு உரை பார்க்க.

### முற்றிற்று

ஸ்ரீ அபிராமி அம்மை திருவடிகளே சரணம்

---